ஸ்ரீ

ஸ்ரீ வாசுதேவாய நம:

பரமார்த்த தரிசனம் என்னும்

# ஸ்ரீபகவத்கீதை வசனம்

ஸ்ரீமான்

ஆரணி-குப்புசாமி முதலியார் அவர்கள்

எழுதியது.

சென்னை

ஆனந்தபோதினி" பத்திராதிபர்

நா. முனிசாமி முதலியார் அவர்களால்

வெளியிடப்பெற்றது.

 1968 [விலை ரூ. 3-00

# முகவுரை

பிரபஞ்சத்தின்கண் ஆன்மகோடிகள் வருணாசிரம தருமங்களைக் கைப்பற்றி லௌகிகத்திலும், வைதிகத்திலும் எவ்வாறு நடந்துகொண்டால் இம்மை மறுமைப் பயன்களை எளிதில் அடைந்து பிறவிப் பிணியை அறவே ஒழித்து ஜீவன் முத்தராகலாமோ அத்தகைய விஷயங்களை யெல்லாம் கிரம ரீதியில் விளக்கவல்லது **ஸ்ரீ பகவத்கீதை** யென்பது வெள்ளிடைமலை. உலகத்தவரை ஈடேற்றுங் கருத்தோடு அவதரித்த ஸ்ரீமத்-சங்கராசாரிய சுவாமிகள், ஸ்ரீமத் - ராமாநுஜாசாரிய சுவாமிகள், ஸ்ரீமத் - மத்வாசாரிய சுவாமிகள் முதலிய மேதாவியர் இக்கீதைக்கு அத்வைத பரமாகவும், விசிஷ்டாத்வைத பரமாகவும், துவைதபரமாகவும் பாஷியஞ் செய்தருளினர். உலகின்கண் உள்ள பிறரும் இதன் சீர்மையை யறிந்து தத்தம் பாஷைகளில் மொழிபெயர்த்து அநுபவித்து வருகின்றனர். இத்துணைப் பெருமை வாய்ந்த இக்கீதையை ஸ்ரீமத்-சங்கராசாரிய சுவாமிகள் செய்தருளிய பாஷியத்தை யொட்டி நமது, **ஸ்ரீமான் ஆரணி - குப்புசாமி முதலியார்** அவர்கள், நமது "**ஆனந்தபோதினி**" மாதப் பத்திரிகையில், லோகோபகாரங் கருதிச் சிறுசிறு பாகமாய், எளிய தமிழ் நடையில் எழுதி வந்தார். அவ்வாறு எழுதி வந்ததைத் திரட்டிப் புத்தக ரூபமாய் வெளியிட வேண்டும் என்று பல மெய்யன்பர்கள் அடிக்கடி வற்புறுத்திக் கேட்டுக் கொண்டமைக் கிணங்க இப்பொழுது இப்புத்தகம் வெளியிட்டுள்ளோம்.

இங்ஙனம்

பிரசுரகர்த்தர்:

**நா-முனிசாமி முதலியார்.**

# பொருளடக்கம்

ஸ்ரீ

# பகவத்கீதை வசனம்

### விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

ஐந்து திருக்கரங்களையும், யானை முகத்தையும், மூன்றும் பிறைச் சந்திரனை யொத்த பிரகாசம் பொருந்திய ஒற்றைக் கொம்பினையும் உடையவரும், பரமசிவனது மூத்த குமாரரும், ஞானக் கொழுந்துபோல் பிரகாசிக்கும் திருமேனியை யுடையவருமாகிய விநாயகக் கடவுளது பாத கமலங்களை அடியேன் சித்தத்தில் வைத்துத் துதிக்கின்றேன்.

### பரம்பொருள் வணக்கம்

உலகமுதற் பொருளையும்பர்க் குணர்வரிதாம் பொருளை
யோதியவே தாகமத்தி னுச்சியினுட் பொருளை
பலகலையின் பொருண்முடிவின் முடிவான பொருளைப்
பற்றறப்பற் றியபெரியோர் பரவியமெய்ப் பொருளை
யலைதிவலை நுரைகடலி லுதித்தொடுங்கு மாபோல்
அகிலாண்ட முதித்தொடுங்கும் [illegible] பொருளை
யிலக்கியசற் குருவாகி யாளுகும் பொருளை
எங்குமாம் பரம்பொருளை யாமும்வணங் குதுமே.

இந்த அண்டரண்ட சராசரங்களுக்கெல்லாம் மூல காரணமாயுள்ள வஸ்துவை, தேவர்களாலும் உணர்வதற் கரிதாகிய பொருளை, வேதாகமங்களின் முடிவாகிய கருத் தாயுள்ள பொருளை, எல்லாச் சாத்திரங்களின் கருத்துக் களும் எப்பொருளில் போய் முடிகிறதோ அப்பொருளை, இகபரபோக ஆசை யாவும் ஒழித்துப் பரம்பொருளே பற்றுகவுடைய மகான்கள் நேசிக்கும் மேலான பொருளை, அலை, திவலை, நுரை முதலியவை கடலிலே தோன்றிக் கடலையே இடமாகக் கொண்டிருந்து, கடலிலேயே லய மாவதுபோல், இந்த அகில அண்டங்கள் அனைத்தும் எந்த வஸ்துவினிடத்தில் தோன்றி, எந்த வஸ்துவினிடத்தில் நிலைத்திருந்து, எந்த வஸ்துவிலேயே லயமாகிறதோ, யாவற்றிற்கும் மூலகாரணமாகிய அத்தகைய பொருளை, எந்தப் பொருள் தன்மை முன்னிலையாகிய ஆசாரியராகவும் நானுகவும் எல்லாமாகவும் விளங்கி யிருக்கின்றதோ, எங்கும் நிறைந்த அத்தகைய பரம்பொருளைத் திரிகரண சுத்தியோடு போற்றுவோமாக.

### தக்ஷிணாமூர்த்தி துதி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
    றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ளொல்வருக்கும் வாக்கிறந்த
    பூரணமாய் மறைக்கப் பாலா
யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை
    யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம
    னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

வேதாகமங்களனைத்தும் கற்றுணர்ந்து, முடிவான ஜுக் கிய நிலையைப் பெறும் வழியைப் போதிக்க வேண்டுமென்று

தவம்புரிந்த ஜனக ஜனாதிகளுக்காகக் கல்லால விருட்சத்தின்கீழ்க் குருமூர்த்தமாக எழுந்தருளி, மனோவாக்குக் கெட்டாத அகண்ட பரிபூரணமான மௌன சாக்ஷாத்கார நிலையைச் சின்முத்திரைக் குறியால் சொல்லாமற் சொல்லியருளிய தட்சணாமூர்த்தத்தை மனமற்ற நிலையில் நாடிப் பிறப் பிறப்பாகிய பவப்பிணியை யொழித்து நித்யானந்த நிலையை யடையலாம்.

## நூல்

## கண்ணன் துதி

ஐவகைப் பொருளு நான்கு காரணமுங் குணங்கண் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

ஐந்து வகையாகிய பஞ்ச பூதங்களும், பிராணாதி பஞ்ச வாயுக்களும், கன்மேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், அந்தக் கரணங்களும, சத்துவம், ரஜசு, தமசு என்ற முக்குணங்களும், புண்ணிய பாவங்களாகிய வினைகளும், யாவும் தாமேயாகப் பொருந்தி (அஞ்ஞானிகள்) அனைவரும் பிரமிக்கும்படி நிற்கின்றவரும், பொய்யாகிய மாயாந்தகாரமானது ஒழியும் வண்ணம் ஞானார்த்தம் நிறைந்த கீதா சாத்திரமென்னும் கிரணங்களைப் பரப்பிய பரமாத்தனாகியவரும், திருக்கரத்தில் ஏந்திய சக்கரத்தையும் சிவந்த கண்களையு முடையவருமாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை இருதயத்தில் வைத்துத் துதிப்பாம்.

கீதை யெனின் பாட்டு என்று சாதாரணமான பொருள். பூர்வ சரித்திரத்தைக் கூறுவதற்கும் கீதை யென்று பெயர். ஈண்டு அப்பொருளே. கீதையின்

பகவத்கீதை, ரிபுகீதை, பிரம்மகீதை, ஈசுரகீதை அல்லது சிவகீதை, உத்தரகீதை, அவதூதகீதை எனப் பலவகையுள்ளன. யாரார் எதெதைக் கூறினார்களோ அவரவர்கள் நாமதேயமே அதற்கு வைக்கப்பட்டது. நாம் இங்கு கூறத்தொடங்குவது பகவத்கீதை. கிருஷ்ண பகவானால் கூறப்பட்டதற்குப் பகவத்கீதை என்று பெயர். கீதைகளில் விசேடமாக உலகில் போற்றப்படுவது பகவத்கீதையே யாகும். இதற்குப் பரமார்த்த தரிசனம் என்றும் பெயர்.

இராமாயணத்தில் வாசிஷ்டம் எப்படி அதன் சிரோபூடணம்போல் விளங்குகிறதோ, அதுபோல் பாரதத்திற்கு இக்கீதை சிரோபூடணமா யிருக்கிறது. கிருஷ்ணபகவான் இக்கீதையைப் பாரத யுத்த ஆரம்பத்தில் அர்ச்சுனனுக்கு உபதேசித்ததாக வியாசர் தாம் எழுதிய பாரதத்தில் கூறுகிறார். இது அர்ச்சுனனுக்குக் கூறப்பட்டதாக விருந்தாலும் உலகோர் அனைவருக்கும் மேலான ஒப்பற்ற பிரம்மஞானத்தை உதவக்கூடியதென்பது வெளிப்படை.

சிலர், யுத்த ஆரம்பத்தில் யுத்த களத்தில் இவ்வளவு விஷயங்களைக் கிருஷ்ணர் எப்படிப் போதித்திருப்பார்? அதற்கு அவகாச மேது? என்று சங்கிக்கிறார்கள். இது கீதையின் பயனைப் பெறத்தக்க நல்வினைப் பயனில்லாக் குறையாலுண்டாகும் சந்தேக விபரீத புத்தியேயாகும். கையிற்கிடைத்தது ஜனனமரணத்தைப்போக்கும் அமிர்தம் என்று தெரிந்த வரையில் அதை யருந்திப் பயன் பெறுவதை விட்டு, "இது எப்படி இங்கு வந்தது? யார் கொண்டுவந்து வைத்தது?" என்பது முதலிய கேள்விகளைக் கேட்டுக்கொண்டு வீண்காலம் போக்குவது மதியீனமேயன்றோ? பகவான் அர்ச்சுனனுக்குக் கீதையை அந்தச் சமயத்தில் போதித்ததாக விருப்பினும் இருக்கட்டும்;

அல்லது உலகோபகாரமாக வியாசபகவானே இப் பிரம்ம ஞான போதனையைப் பாரதத்திற் சேர்த்ததாக விருந்தாலும் இருக்கட்டும். அதைப் பற்றிக் கவலை யில்லை. எக்காரணத்தாலோ வெளிவந்த இவ்வரும் பொருளை உணர்ந்து பயனடைய முயல்வதே நமது கடமையாகும்.

வேறு சிலர், "அர்ச்சுனன் தன் சுற்றத்தார் ஆசாரியர்கள் முதலியவர்களை யெல்லாம் கொன்றுவிட்டு அநித்தியமாகிய இப்பூமியை ஆள்வதில் யாது பயன்? நான் அடவிக்குச் சென்று தவம் புரிந்து நற்கதிப் பெறுவேன் என்று கூறியது நன்மார்க்கந்தானே? அப்படி யிருக்கக் கிருஷ்ணர் அவனுக்கு எதைப் போதித்தாராயினும், கடைசியில் யுத்தம் செய்து யாரையும் கொல்லும்படித்தானே அவனைத் தூண்டினர்? அது அக்கிரமமான செய்கை தானே," என்றார்கள்.

அர்ச்சுனன் உலகமுதல் பரபோகம் ஈறாக யாவும் அநித்யம், சடம், துக்கம் என்று நித்தியா நித்திய வஸ்து விவேகம் ஜனித்து ஞான வைராக்கியம் கொண்டு தவத்திற்குச் செல்ல முயலவில்லை. ஆனால் நான் என்பதும், இவர்கள் என் சுற்றத்தார் என்பதுமாகிய பிராந்தியில் அழுந்தி, சோக மோக வயத்தனாய்த் தன் க்ஷத்திரிய தருமத்திற்கு மாறாக நடக்கவே கருதினான். சோக மோகம் தமோகுணமாகிய அஞ்ஞானமே ஆகும். ஆகையால் பகவான் அவனுக்கு ஆத்ம ஞான விளக்க முண்டாகச் செய்து சோக மோகங்களை ஒழித்து, அவன் தன் தருமத்தின்படி ஒழுகும்படிச் செய்தார்.

இக் கீதை கிருஷ்ணார்ச்சுன சம்வாதமாகப் பதினெட்டு அத்தியாயங்களில் கூறப்பட்டிருக்கிறது.

---

# 1-வது சோக அத்தியாயம்

பாண்டவர்கள் பன்னிரண்டு வருடங்கள் வனவாசமும் ஒரு வருடம் விராட தேயத்தில் அக்கியாத வாசமும் கழித்தபின், தங்கள் தயா பாகத்தை யளிக்கும்படித் துரியோதனனைக் கேட்டார்கள். துரியோதனன் ஊசி நாட்டுமிடமும் அவர்களுக்குக் கொடேனென்று மறுத்ததாலேயே பாரதப் போர் உண்டாயிற்று. 'சஞ்சயர்' * அன்றாடம் குரு க்ஷேத்திரத்தில் நடக்கும் சமாசாரத்தைக் கண்ணில்லா வரசனாகிய திருதராட்டிரனுக்குக் கூறிக் கொண்டிருந்தார்.

துரியோதனாதியரும் பாண்டவர்களும் தத்தமது சைனியங்களோடு புண்ணிய பூமியாகிய § குரு க்ஷேத்திரத்தில் போய்ச் சேர்ந்த பின், திருதராட்டிர மகாராஜன் சஞ்சயரை நோக்கிப் பின்வருமாறு வினவலுற்றான்:—

"ஓ சஞ்சயரே! புண்ணிய பூமியாகிய குரு க்ஷேத்திரத்தில் யுத்தம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தோடு இருங்கு கூடியிருக்கும் நமது புத்திரர்களும் பாண்டு மைந்தர்களும் என்ன செய்கிறார்கள்?" என்றான்.

[தன் புத்திரர்களும் பாண்டவர்களும் யுத்தம் புரிய வேண்டியே அங்கு சென்றிருக்கிறார்கள் என்பதையுணர்ந்த திருதராட்டிரன் அவ்வாறு பொதுவாய்க் கேட்பானேன்? என்றால், அவனுக் கியற்கையாயுள்ள பாரபக்ஷ புத்தியால்

---

* 'சஞ்சயன்' என்றால் 'இராகத் துவேஷாதிகளை வென்றவன் என்று பொருள்.

§ குரு க்ஷேத்திரம்—குரு பூமி.

உண்டான சந்தேகமே அதற்குக்காரணம் என்னவெனின், பாண்டவர்கள் தருமிஷ்டிகள் ஆதலால் யுத்த பூமியில் சென்றபின் அந்தோ இத்தனை ஜீவர்களைக் கொன்றன்றே நாம் ஜெயம் பெறவேண்டுமென்று சிந்தித்து ஜீவகாருண்ய மேலீட்டால் யுத்தம் புரியாமற் போய்விடுவார்களேயாகில் நமது புத்திரரே ஒரு கஷ்டமுமின்றி முழு இராஜ்ஜியத்தை யும் அடைவார்கள்; அப்படியின்றி அப்புண்ணிய பூமியின் தரிசன விசேடத்தால் நமது புத்திரராகிய துரியோதனாதி யர் பாண்டவர்மேல் பச்சாத்தாபமடைந்து, முன்பு கபட மாகச் சூதாடி அபகரித்த இராஜ்ஜியத்தைப் பாண்டவர் களுக்கே கொடுத்து விடுவார்களாயின் யுத்தம் செய்யா மலே இராச்சியத்தின் ஒரு பாகத்தை இழந்து விடுவார் களே. ஒரு சமயம் இத்தகைய விஷயம் ஏதேனும் நடை பெறுகிறதோ வென்ற மனக்கலக்கங் கொண்டே திருத ராட்டிரன் அவ்வாறு 'என்ன செய்கிறார்கள்' என்று பொதுவாய் வினவினன்.]

சஞ்சயர்:—கேளும் திருதராட்டிர மகாராஜனே! யுத்தத்தின் ஆரம்பத்தில் தமது புதல்வனும் அரவக்கொடியோனு மாகிய துரியோதனன் யுத்தத்திற்கு ஆயத்தமாக நிறுத்தப்பட்டிருக்கும் பாண்டவர்கள் சேனையைக் கண்டு துரோணாசாரியரை நெருங்கிப் பின்வருமாறு கூறினன்:—

"ஓ! துரோணாசாரியரே! துருபதராஜ புத்திரனாகிய திருஷ்டத்யும்னன் என்பவனால் பலவித அணிகளாக வகுக் கப்பட்டது. யுத்த சாமர்த்தியத்தில் பீமார்ச்சுனர்களுக் குச் சமானமானவர்களாய்க் கருதப்பட்ட விராடன், துரு பதன், திருஷ்டகேது, சேகிதானன், குந்திபோஜன் முதலிய அரசர்களும் இன்னும் அபிமன்யு முதலிய மகாரதரான

அனேக அரசர்களும் படைத் தலைவர்களாய் அமையப் பெற்றதுமான பாண்டவரது திரண்ட சேனையை நோக்கு வீராக.

எனது சேனையில் மிக்க சுத்த வீரராகிய தாங்கள் இருக்கிறீர்கள். அவ்வாறே பீஷ்ம பிதாமகர், எனது பிராண சிநேகனும் அங்கதேசாதிபதியுமாகிய கர்ணன், அசுவத்தாமர், கிருபாசாரியர், விகர்ணன், சல்யன், பகதத்தன் முதலிய அநேகம் சூரர்கள் எனக்கு ஜெயம் உண்டாக்க வேண்டு மென்ற ஒரே நோக்கத்தோடு தங்கள் அருமையான பிராணன்களைத் தத்தம் செய்ய ஆயத்தமாக வந்திருக்கிறார்கள். மேலும் என்னுடைய சேனை பதினொரு அக்குரோணி யிருக்கிறது. இனி அவரவர்கள் தத்தமது சேனைப் பகுதிகளை அதனதன் இடத்தில் நிறுத்திப் பிரியாமல் சாக்கிரதையோடிருந்து சேனாதிபதியான பீஷ்ம பிதாமகரை நாற்புறங்களிலும் காத்துக் கொள்ளுங்கள்," என்றான்.

துரியோதனன் துரோணாசாரியரிடம் அவ்வாறுகூறிய பின் அவனுக்குச் சந்தோஷத்தை உண்டாக்குவதற்காகக் கங்கா புத்திரராகிய பீஷ்மர் தமது வெண்சங்கை யெடுத்து வாயில் வைத்துச் சங்கநாதம் செய்தார். உடனே துரியோதனனுடைய சைனியத்திலிருந்த மற்ற படைத்தலைவர்களும் தத்தமது சங்கங்களைப் பூரித்தனர். பேரிகை முதலிய அநேக வாத்தியங்கள் எங்கும் கோஷித்தன.

எதிரிகளின் இக்கோஷத்தைக் கேட்டதே, இந்த அண்டரண்ட சராசரங்களை யெல்லாம் தமது உதரத்தில் வைத்துக் காக்கும் மாதவனாகிய ஸ்ரீ கண்ணபிரான் பாஞ்சசந்நியம் என்ற தமது சங்கை மலர்க்கரத்திலேந்திச் சிவந்த

பவழம் போன்ற வாயில் வைத்துச் சப்தமேகங்களும் ஒன்று சேர்ந்து முழங்கினாற் போலும், சப்த சமுத்திரங் களும் பொங்கிச் சத்தித்தாற்போலும் பூரித்தார். அச்சத் தம், "ஏ துரியோதனுதியரே! இப் பாண்டவர்கள் நமது பிராணனுக்குச் சமானமானவராதலால் நீங்கள் இந்த யுத்தத்தில் தப்பி பிழைக்கப்போவதில்லை" என்று கூறுவது போன்றிருந்தது.

பகவான் தமது பாஞ்சசந்நியத்தை முழக்கத் தொடங் கியதே தருமர் அனந்த விஜயம் என்ற தமது சங்கையும், பீமன் பௌண்டரிகம் என்ற சங்கையும், அர்ச்சுனன் தேவதத்தம் என்ற சங்கையும், நகுலன் சுகோஷம் என்ற சங்கையும், சகதேவன் மணிபுஷ்பகம் என்ற சங்கையும் எதிரிகளின் இருதயம் நடுங்கும்படித் தொனித்தார்கள். இன்னும் பாண்டவர் சேனையிலுள்ள துருபதன், சிகண்டி, திருஷ்டத்யும்னன், விராடராஜன் முதலிய மற்றப் படைத் தலைவர்களும் தத்தமது சங்கங்களை யெடுத்துக் கோஷித் தார்கள். இச் சங்கநாதங்கள் கௌரவருடைய நெஞ்சை யூடுருவி ஆகாயத்திலும் பூமியிலும் எதிர் ஒலி மயமாய் நிறைந்தன.

இனியும் யுத்தத்தைத் தொடங்கப்போகும் சமயம் காண்டீபனுகிய அர்ச்சுனன் கண்ணபிரானை நோக்கிப் பின் வருமாறு கூறலானன்:—

"எல்லா வுலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் பகவானே! இங்கு நம்மோடு யுத்தம் செய்யக்கருதி வந் திருப்பவர்கள் யார்? இங்கு வந்திருப்பவர்களில் எவரோடு நாம் போர் தொடுக்கலாம்? என்பனவற்றை யறிந்து கொள்வதற்காக, எந்த விடத்தில் நின்று பார்த்தால் அனைவரையும் நன்குகப் பார்க்கக்கூடுமோ, அந்தவிடத்தில்

எனது இரதத்தைக் கொண்டுபோய் நிறுத்தப் பிரார்த்திக்கிறேன்," என்றான்.

அர்ச்சுனன் அவ்வாறு பிரார்த்தித்ததே, கார்வண்ணனாகிய கண்ணபிரான் வெள்ளைப் புரவிகள் பூட்டப்பட்ட தமது ரதத்தை இரு சேனைகளுக்கும் மத்தியில் கொண்டு போய் பீஷ்மராதியர் இருக்கும் இடத்திற்கு நேர்முகமாய் நிறுத்தி "ஹே பார்த்த! இங்கு யுத்தசந்நத்தராய் ஒருங்கு கூடி யிருக்கும் கௌரவர்களைப் பார்!" என்றருளினார்.

அவ்வாறே அர்ச்சுனன் எதிரிகளின் சேனையை நோக்கியபோது அங்கு தன் தந்தைமார்களும், பாட்டன்மார்களும், ஆசாரியர்களும், மாதுலர்களும், சகோதரர்களும், புத்திரர்களும், பௌத்திரர்களும், சிநேகர்களுமாக உள்ளவர்களையே கண்ணுற்றான். உடனே "அடடா இவர்களெல்லாம் நமது சுற்றத்தார்களல்லவா? இவர்களைக் கொல்வது அதர்மமும் பாபமுமல்லவா," என்று அவன் மனதில் தோன்றிய சோக மோகத்தால் சித்தக்கலக்கமும் துக்கமும் அடைந்தவனாகிப் பகவானை நோக்கிப் பின் வருமாறு கூறினான்:—

"ஓ பகவானே! யுத்தம் புரியக்கருதி இந்த இரணகளத்தில் வந்து நிற்கும் எனது பாட்டன்மார், தந்தைமார், சகோதரர், மாதுலர் முதலிய இச்சுற்றத்தாரைக் காணுந்தோறும் என் கைகால் முதலிய அவயவங்கள் சோர்வடைகின்றன. நாவறள்கின்றது, முகங்காய்கின்றது, என் தேகம் வெதும்பி நடுக்கமும் மயிர்கூச்சு முண்டாகின்றன. என் கையினின்றும் காண்டீப மென்ற வில்லும் நழுவுகின்றது. சரியாக நிற்க என்னால் கூடவில்லை. இவற்றோடு பல அபசகுனங்களையும் காண்கின்றேன். பகவானே!

இந்த யுத்தத்தில் பீஷ்மர் முதலிய என் சுற்றத்தாரை யெல்லாம் சங்காரம் செய்துவிட்டு நான் அடையத்தக்க பலன் ஒன்றையுங் காண்கிலேன். எனக்கு வெற்றியும் வேண்டாம், இராஜ்யமும் வேண்டாம், இவற்றாலடையும் சுகபோகமும் வேண்டாம்.

நாம் யாருக்காக இராஜ்யத்தையும், அதனால் வரும் போகத்தையும், சுகத்தையும் அடைய விரும்புகிறோமோ, அத்தகைய சுற்றத்தாரே தங்கள் உயிர் பொருள் முதலிய வற்றிலுள்ள ஆசையை விடுத்து மரணத்திற்குத் துணிந்து இப்போரின் முன் வந்து நிற்கின்றனர். விஷயம் இவ்வா றிருப்பதால் இவர்களைக் கொல்வதால் எங்களுக்கு இழிவும் பாபமுமே சம்பவிக்குமன்றி இன்பம் எவ்விடத்தும் உள தாகாது. ஏ மதுசூதன! இவர்கள் என்னைக் கொல்வதாயி னும் நான் இவர்களைக் கொல்லமாட்டேன். மூவுலகமும் எனக்குக் கிடைப்பதாயினும் கொல்லேன் எனின், இம் மண்ணுலகத்தை யடையும்பொருட்டு இவர்களைக் கொல்ல விரும்புவேனோ? அரசர்கள் தம்குலம் நாசமாகும்படி செய் வதனாலுண்டாகும் தோஷத்தையும் மித்திரர்களுக்குத் துரோகம் செய்வதனால் உண்டாகும் பாபத்தையும் துரி யோதனதியர் அறியாத தன்மையால் மறந்திடினும் நான் அவற்றை மறக்கேன்.

குலம் நாசமாகவே குலத்தின் சர்வ தர்மங்களும் நாசத்தை யடையா நிற்கும். குலதருமம் நாசமாகவே குலம் முழுவதையும் அதர்மம் சூழ்ந்து கொள்ளும். அது சூழவே குலமாதர் நெறிதவறி விடுவார்கள். மாதர்கள் நெறிதவறினால் மாதர் பதிவிரதா தர்மம்கெடவே வர்ணா சிரம தர்மங்களனைத்தும் தலைதடுமாற்றமுறும். வர்ணாசிரம தர்மம் கெடவே அக்குலத்தைச் சார்ந்தவரும், சாரா

குலங் கெடும்படியான செயலைச் செய்தோரும் மீளா நரகில் சேர்வர். இப்படி சேர்வதால் பிதுர்க்களும், தங்களுக்குப் பிண்டக்கிரியை செய்ய ஒருவருமில்லாத தால் நரகத்தில் வீழ்வர்.

மின்னல்போல் தோன்றி யழியும் இராஜ்யம் முதலிய செல்வத்தை இச்சித்துத் தங்கள் உயிரையே விடத்துணிந்து வந்துநிற்கும் இத்துரியோதனுதியரைக் கொல்லத்துணிந்த நான், என்ன ஆச்சரியம்! மஹாபாவத்தைச் செய்யவிருந் தேன். ஆயுதபாணிகளாக நிற்கும் இவர்கள் முன்னே நான் ஆயுதங்களை வைத்துவிட்டு யுத்தம் செய்யாது நின்றால் இவர்கள் என்னைக் கொல்லத் துணிவரோ? அப்படி இவர் கள் என்னைக் கொன்றாலும் அதை க்ஷேமமாகவே நான் பொறுத்துக் கொள்வேன்," என்று கூறி, சோகத்தால் பிடிக்கப்பட்ட மனதையுடைய அர்ச்சுனன், தன் கையி லிருந்த வில்லும் அம்பும் நழுவி விழவும் கண்களில் நீர் அரும்பவும் தேர்த்தட்டில் அமர்ந்தான்.

சோக அத்தியாயம் முற்றிற்று.

# 2-வது சாங்கியோக அத்தியாயம்

---

மேற்கண்டபடி பீஷ்ம துரோணாதியர்களிடம் உண்டான இரக்கத்தால் சோகமுற்றுச் செய்வதின்னதென்று உணராது தியங்கி நின்ற அர்ச்சுனன் ஈடேறும் வண்ணம் மனதில் உன்னிய கிருஷ்ண பகவான் அவனை நோக்கி,

"ஏ அர்ச்சுனா! உனக்குண்டாகியிருக்கும் இச்சோகமாகிய மோகமானது அவிவேகிகளுக்கும், பேடிகளுக்கும் உரியது. தூர்க்கீர்த்தியை யுண்டாக்குவது. குறையாத நித்திய நரகத்திற் தள்ளத்தக்கது. சுத்த வீரனாகிய உன் போன்றவர்க்குத் தகுதியில்லாதது. இத்தகைய சோகம் இந்த யுத்த பூமியில் எவ்வாறுனக்குண்டாயிற்றோ நான் அறிகிலேன். சுத்த வீரன் என்று பிரக்யாதி பெற்ற உனக்கு இக்கோழைத்தனம் தகாது. இதை யொழித்து உனது க்ஷத்திரிய தருமத்தின்படி யுத்தம் செய்யத் தொடங்குதி!" என்று கூறி யருளினார்.

அர்ச்சுனன்:—ஓ பகவானே! இங்கு யுத்தம் செய்ய வந்திருப்போர் நான் மனம், வாக்கு, காயம் என்ற முக்கரணங்களாலும் பூஜித்தற்குரிய பாட்டன்மார், தந்தைமார், ஆசாரியர் முதலியவர்களாக விருக்கின்றார்களே. இத்தகையோரை நான் எவ்வாறு கொல்லத் துணிவேன்? இவர்களைப் பகைவரெனக் கருதிக் கொன்று அதனால் பெருவாழ்வு பெறுவதைக் காட்டிலும், இவர்களது கீர்த்தியைக் கூறிக்கொண்டு அன்னியரிடம் யாசித்துச் சீவித்தல் சிரேஷ்டமாகும அல்லவா? அப்படிக்கின்றி இவர்களைக் கொன்று

நான் இவ்வுலக போகங்களை யனுபவிப்பது இவர்கள் உதிரத்தில் சமைத்த அன்னத்தைப் புசிப்பதுபோல் அல்லவா ஆகும்?

இப்போது பாணப் பிரயோகம் செய்து யுத்தத்தைத் தொடங்குவதோ, அல்லது இதை விட்டுவிட்டுப் பிச்சை யெடுத்து உண்பதோ எனக்குப் புலப்படவில்லை. அப்படி யுத்தம் செய்யினும் இவர்களே யென்னை வெல்வார்களோ, நானே இவர்களை வெல்வேனே, நிச்சயம் எது எனக் கூற முடியாது. இங்குள்ளவர்களில் எவர்கள் இறந்தால் அதைச் சகித்துக்கொண்டு நான் உயிர் வாழமாட்டேனே, அத்தகைய பீஷ்மர் துரோணர் முதலியோரே வெற்றியைக் கருதி யுத்தத்தைத் தொடங்கென்று முன் வந்து நின்றனர்.

ஓ பிறப்பிறப்பற்ற பரம்பொருளாகிய பகவானே! இந்த பீஷ்ம துரோணாதியர்களிடம் நான் வைத்துள்ள பாச மாகிய இருள் என் அறிவாகிய கண்ணை மறைப்பதனால் நான் ஈடேறும் வழி இன்னதென்று எனக்கு விளங்க வில்லை. நான் செய்யத்தக்க சிரேஷ்டமான காரியம் இன்ன தென்று கூறியருளப் பிரார்த்திக்கிறேன். ஏ செந்தாமரை போலும் கண்களுடைய மேகவர்ணனாகிய சுவாமி! "பிழைத்தற்குரிய மேலான வழியை நீ வேண்டிக் கேளா மல் நான் கூறுவேனே" என்று கருதுவீராயின், இதோ நாங்களே எனக்குத் தஞ்சம் என்று நம்பித் தங்களைச் சரணடைந்து தங்கள் பாத தாமரையை யடியேன் சிரசில் தரித்துக் கொள்கிறேன். தங்கள் சீடனாய் தங்களுக்குச் சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பிக்கிறேன். அஞ்சேல் என்று அபயஸ்தம் தந்து இங்கு நான் செய்ய வேண்டியது இன்னதென்று அருள்புரிவீராக.

இப் பூமண்டல முழுமையும் அரசாட்சி செய்யும் பெரும் செல்வத்தையும் தேவலோக போகங்களையு மடைந்தாலும், எனது தேகேந்திரியங்களை வருத்தா நிற்கும் இச் சோகமானது என்னைப் பொருந்தாமலும் வருத்தாமலும் பாதுகாக்கத்தக்க உபாயத்தை எங்கும் கண்டிலேன்" என்று கண்ணீர் சொரிய அழுதான்.

அர்ச்சுனன் பாசமாகிய அக்கினியால் வெந்தழியா வண்ணம், எவ்விதப் பிரதிபலனையும் கருதாமல் உயிர்களைப் பாதுகாப்பதையே தம் கடமையாகக் கொண்ட கிருஷ்ண பகவான் அருள்மாரியால் அர்ச்சுனனது பாசமாகிய அக்கினியைத் தணித்தற் பொருட்டு, வேதமுடிவாகியதும், உலகிற்கு முதற் பொருளானதுமாகிய பரமார்த்த வஸ்துவின் ஞானத்தை அர்ச்சுனனுக்கு உபதேசிக்கத் தொடங்குகிறார்:—

ஹே அர்ச்சுனா! துக்கப்படத்தகாத பீஷ்ம துரோணாதியர்களுக்காக நீ துக்கிக்கின்றனை. அறிவாளிகள் மொழியத் தகாத வார்த்தைகளை மொழிகின்றனை. நித்தியா நித்திய வஸ்துக்களைப்பற்றி ஆராய்ந்தறிந்த அறிவுடையோர்கள் இறந்துபோன சுற்றத்தாரைக் குறித்தும் இறவாதிருக்கும் சுற்றத்தாரைக் குறித்தும் விசனமடைய மாட்டார்கள் என்பதை யறியாய் போலும். ஏ அர்ச்சுனா! நீயும், நானும் இங்கிருக்கும் மற்ற அரசர்களும் முன்னம் இல்லாதிருந்தவர்களல்லர். இனிமேலுள்ள எதிர்காலத்தும் இல்லாமற் போகிறவர்களுமல்லர். நாம் ஆன்ம சொரூபமாக எப்போதுமே யுள்ளோம்

இறந்து போவது தேகமே அதற்குள் இருக்கும் ஆன்ம சொரூபம் அழியாதது. தேகமே பிறத்தல், பாலியம், கௌமாரம், யௌவனம், விருத்தாப்பியம், மரணம்

என்ற மாறுதல்களை யடைகின்றது. ஆன்மாவிற்கு எவ்வித மாறுதலுமில்லை. தேகமே அழிந்து மறுபடி வேறு தேகம் உண்டாகிறது. ஆன்மா நாசமடைவதுமில்லை. ஜனன மடைவதுமில்லை. அது நித்தியம். இந்த உண்மையை அனுபவமாயறிந்தவன் தேகம் அழிந்து பிரியும்போது அது தன்னது என்று கருதிச் சற்றும் துக்கிக்கமாட்டான்.

**அர்ச்சுனன்:**—அவ்வாறு எல்லா அவஸ்தைகளும் தேகத்திற்கே யெனின் சுகம், துக்கம், உஷ்ணம், சீதம் முதலிய இவற்றை ஒரு கிரியையு மில்லாதிருக்கும் ஆன்மா (நான் சுகி, நான் துக்கி என்று,) அடைவது எதனால்!

**கிருஷ்ணபகவான்:**—சுரோத்திரம் முதலிய இந்திரியங்களும் சத்தம் பரிசம் முதலிய விஷயங்களும் சம்பந்தப்பட்டுச் சீதோஷ்ண முதலியவற்றை யந்தக் கரணத்திற்களிக்க அந்தக் கரணத்தோடு தாதான்மிய சம்பந்தமுடைய ஆன்மாவோடு அவை பொருந்துகின்றன.

மேலும், ஏ அர்ச்சுனா! சீத உஷ்ணங்கள், சுகதுக்கங்கள் இவற்றின் தன்மைகளை நோக்கின் இவை அநித்தியமாம். அதாவது தோன்றுவதும் மறைவதுமானவை. அவற்றை நீ சகித்துக் கொள்வாயாக. அவ்வாறு சுகதுக்கங்களைச் சகித்துக்கொள்ளும் பெரியோரை அவை கலங்கச் செய்யா.

சீதோஷ்ண சுகதுக்காதிகள் இந்திரிய வாயிலாய் மனதைத் தாக்குகின்றன; சாட்சியுள்ள ஆன்மாவை அவை தாக்குவதில்லை. ஆன்மா நிர்விகாரி, நிற்குணமுடையது. அவ்வாறிருக்க நாம் ஏன் அதை யுணர்ந்து சந்தோஷமும் துக்கமும் அனுபவிக்கிறோமெனின், இந்த ஆன்மா தன்னை

மறந்து அந்தக்கரணத்தோடு தாதான்மிய மடைந்துள்ள பிராந்தியால் அவ்வாறு அனுபவிப்பதாய் மயங்கி வருந்து கிறது. "நாம் சாக்ஷி மாத்திரமே, நமக்கு ஒரு கிரியையு மில்லை. சுக துக்கம் ஒன்றுமில்லை," என்ற திடம்பொருந்திய மனதோடு தாக்கற்று நிற்போரைச் சுக துக்கங்கள் பாதிக்கா. அத்தகைய தன்னை யறிந்த ஞானிகள் தேக உணர்ச்சியில்லாதவர்களாய் இருப்பதை அனுபவமாய்க் காணலாம்.

ஆன்மா தாதான்மியங்களால், தான் சுக துக்கங்களை யனுபவிப்பதுபோல் மயங்கி யிருப்பதற்கு ஒரு திருட்டாந் தங் கூறுகிறோம். ஒரு குடத்தில் ஜலத்தை விட்டுத் தீயின் மேல் வைத்தால், தீ குடத்தில் தாக்க அதிலுள்ள ஜலத் திற்குச் சூடேறி அச்சலம் கொதிக்கிறது. அப்போது அச்சலத்திலுள்ள சூரிய பிம்பம் துள்ளிக் குதித்துச் சிதறுவதுபோல் தெரிகிறது.

குடமே தேகம்—அதிலுள்ள ஜலமே அந்தக்கரணம் பிரதிபிம்ப சூரியனே ஜீவன்—அப்பிரதிபிம்பத்திற்கு ஆதார மான வானத்திலுள்ள சூரியனே சிவசாட்சியாகிய ஆன்மா—விஷயாதிகளே அக்னி. அக்கினியின் சூடு ஜலத்தைத் தாக்குவதுபோல் விஷயாதிகளாலுண்டாகும் சுக துக்காதிகள் இந்திரிய வாயிலாய் அந்தக்கரணத்தையே தாக்குகின்றன. சூடு வான சூரியனைத் தாக்குவதில்லை. ஜலம் கொதிப்பதால் பிம்ப சூரியன் துள்ளுவதுபோல் தெரிவது எப்படி பொய்த்தோற்றமோ, அவ்வாறே அந்தக் கரணத்தில் தாக்கும் சுக துக்கங்கள் தன்னைத் தாக்குவது போல சீவன் பிரமையடைகிறது. நாம் சாக்ஷியென்று உணர்ந்தால் பிறகு அப்பிரமை யொழியும்.

மேலும் சுக துக்கம் என்பவை மனதாலுண்டாவதே யெனலாம். உண்மையில் உலகிலுள்ள பொருள்களில் சுகமாவது துக்கமாவது நிலையாயில்லை. நமக்குக் குளிராக யிருந்தால் அக்னி இதம் செய்கிறது. இன்றேல் துன்பம் செய்கிறது. இவ்வாறே தாரம், புத்திரன், தனம் இவற்ருல் ஒருவேளை சுகமும் ஒருவேளை துக்கமும் உண்டாவது அநுபவம். இவ்வாற்ருல் சுகமாவது துக்க மாவது உலகப் பொருள்கள் எதிலுமில்லை. சுக துக்கங்கள் மனோநிலைமையைப் பொருந்தியவைகளே. மனம் மாயை யாதலின் அவை மாயா சம்பந்தமே. அவித்தையாகிய மாயை யொழிந்து நாம் சாக்ஷியாகிய நமது நிஜ சொரூ பத்தை யுணரின் அவை யொழிந்துபோம்.

ஞானத்தையடைய விரும்பும் அதிகாரி சுக துக்கங் களில் சமதிருஷ்டி யுடையவனுய், அவற்றைப் பொறுமை யோடு அனுபவிக்க வேண்டுமென்பது விதியாதலின், பகவான் அர்ச்சுனனையும் அவ்வாறு சகித்துக்கொள்ளும் படி கூறினர்.

### பகவான் இனி ஆன்மாவின் சத்தின் இலக்கணம் கூறுகிருர்

ஏ பார்த்த! மண்ணுல் செய்யப்பட்ட கடம் முதலிய யாவும் உண்மையில் மண்ணே யாகும். அம்மண்ணை யொழித்து அடக்கம் முதலியவற்றைச் செய்தவர் ஒருவரு மில்லை. கடம் முதலியவை பண்ணப்பட்டதற்கு முன் மண்ணே இருந்தது. அவை நசித்ததன் பின்னும் மண்ணே யிருக்கிறது. இரண்டு காலங்களுக்கு மிடையில் அவை உருவமாகத் தோன்றிக் கொண்டிருந்த காலத்திலும் மண்ணே இருக்கிறது—கடம் உண்டாவதற்கு முன் மண்ணில் கடமில்லை, கடம் நசித்த பின்னும் கடமில்லை,

இடையில் தோன்றி மறைந்த உருவத்திற்கே * கடம் என்று பெயர்—ஆகையால் காரணமான மண்ணே முக்காலத்து முள்ளது. இதுவே சத்து. இடையில் வாக்கு மாத்திரத்தால் தோன்றி மறைந்த கடம் அசத்தாம்.

இத்திருஷ்டாந்தப்படி தாஷ்டாந்தத்தில் ஆன்மா சத்தானதால் அது ஒருபோதும் நசியாது. இந்த ஆன்மாவினிடம் பொருந்தா நின்றதும் ஆன்மாவிற்கு அன்னியமானதுமாகிய தேகாதிப் பிரபஞ்சங்கள் ஓர் போதும் சத்தியமாகா. ஆன்ம சொரூபத்தை அறிந்தவர்கள் இதை அறிவார்கள்.

[எது கால தேச வஸ்து பரிச்சேத மற்றதோ அது சத்தென்னப்படும். கடம் உண்டாவதன் முன்னரும், அது நசித்தபின்னும் மண்ணில் கடமில்லாதது போல், ஒரு காலத்தில் தோன்றி மற்றொரு காலத்தி லில்லாமற்போவது எதுவோ அது கால பரிச்சேதமுடைய தெனப்படும்—எங்கு கடம் தோன்றுகிறதோ அந்த இடம் நீங்கலான வேறு இடத்தில் கடம் இல்லாததுபோல், ஒரு இடத்தில் தோன்றி தேசப்பரிச்சேத முடையதாகும். சுஜாதீய விஜாதீய சுவகத பேதங்களை யுடைய பொருள் எதுவோ, அது வஸ்து பரிச்சேத முடைய தெனப்படும்.]

சுஜாதிபேதம்:—மரம் என்பது ஒரு பொதுப் பெயராய் இருந்தபோதிலும் மாமரம் என்பதற்கு, வாழைமரம், அரசமரம், தென்னமரம் என்றவைகள் போன்ற பேதங்களிருப்பது சுஜாதிபேதம்.

* இதற்குப் பிருது புத்நோதராகாரம் என்று பெயர் (பிருது +புத்நம்+உதரம்+ஆகாரம்.) பிருது = ஸ்தூலம், புத்நம் = வட்ட வளைவு, உதரம் = வயிறு, ஆகாரம் = வடிவு—இந்த வடிவும் மண்ணிற்கு, இடையில் தோன்றி மறைவது—முன்னும் பின்னும் இல்லாதது. முக்காலு முள்ளது மண்ணே.

விஜாதிபேதம்:—மரத்திற்கு கல், மண், என்பவை அன்னிய இனமாகத் தோன்றியிருத்தல் போன்ற பேதம் விஜாதிபேதம் எனப்படும்.

சுவகதபேதம்:—மரத்தில் இலை, மலர், காய் முதலிய தோன்றுவன போன்ற பேதங்கள் உண்டாயிருப்பது சுவகத பேதம். சுஜாதி விஜாதி சுவகத பேதங்களற்றது எதுவோ, அது வஸ்து பரிச்சேத மற்றதாகும்.

ஆன்மா கால தேச வஸ்து பரிச்சேதமற்று முக்காலத்தும், எங்கும் நிறைந்து ஒரே தன்மைத்தாய் விளங்கி நிற்கும் வஸ்துவாதலின், அது சத்தாம். கற்பிதங்களாகிய எல்லா வஸ்துக்களுக்கும் பிறப்பிடமாயுள்ள இந்த ஆன்மா எல்லா வஸ்துக்களிலும் வியாபித்து நிற்கும். இந்த ஆன்மா விகாரமற்றது. சகலப் பிரபஞ்சங்களிலும் பூரணமாய் வியாபித்திருப்பது. நாசரகிதமான இந்த ஆன்மா ஒருவராலும் அழிக்கப்படாதது.

[பிறத்தல், இறத்தல், வளர்தல், மாறியமைதல், தேய்தல், அறமாய்தல் என்ற ஷட்பாவ விகாரமுடைய இத் தேகமே யழியத்தக்கது—இதில் இருக்கும் ஆன்மா நித்தியம், சாசுவதம், புராதனம். குறைதல் வளர்தல் விகாரப் படுதல் இன்றி என்றும் ஒரே படித்தா யிருப்பதாம்.]

இனித் தேகாதிப் பிரபஞ்சமே அநித்தியமாம். ஊஷர பூமியில் எழும் கானலினிடத்தே, இல்லாத ஜலம் தோன்றி உற்று நன்குய் நோக்கியபோது ஒழிந்து போவதுபோல் எல்லா விதங்களாலும் அழிவது இத்தேகமே—ஆன்மா ஒன்றைக் கொல்லும் கர்த்தாவாகாது, ஒன்றாற் கொல்லப் படும் பொருளுமாகாது.

"ஆன்மா என்றும் அழியாதது, பிறப்பிறப்பற்றது. அநித்தியமான தேகத்தில் இருந்தும் நித்தியமானது," என்ற உண்மையை யறிந்தோர் எதைக்கொல்வார்; எவ்வகையாற் கொல்வார்? எதையும் கொல்லவுமாட்டார், கொல்விக்கவு மாட்டார். நாம் கிழிந்துபோன உடையைக் களைந்தெறிந்து விட்டு வேறு புது உடையை யணியுமாபோல் ஆன்மாவும் ஜீரணமான தேகத்தைப் பரித்தியாகம் செய்து வேறு புதுச் சரீரத்தை யடையும்.

["இப்பீஷ்மத் துரோணுதியர்களாகிய ஆன்மாக்கள் ஒருபோதும் அழிவனவல்ல. இவர்கள் செய்துள்ள தர்மம் தவம் முதலியவற்றின் பலத்தால் உயர்வான தேவசரீரங் களை யடைந்து மேலான சுவர்க்காதிபோகங்களை யனுபவிப் பார்கள். இவர்கள் அப்படிச் செய்வதற்கு நிகழ்காலத்தி லிருக்கும் இவர்கள் சரீரங்கள் இடையூருக விருக்கின்றன ஆதலின் நீ தர்ம யுத்தம் செய்து இவர்களின் நிகழ்கால சரீரங்கள் நாசமடையச் செய்தால் நீ யவர்களுக்குப் பேருபகாரம் செய்தவனேயாவாய். ஆகையால் இவர்க ளோடு போர்புரிவதால் இவர்களுக்குத் தீங்கிழைப்பதாய்க் கருதும் மதிமயக்கத்தை விட்டொழிதி," என்று தாம் கூறுவதாக அர்ச்சுனன் உணரவேண்டுமென்ற கருத்தோடு பகவான் மேற்கண்டவாறு கூறினர்.]

அர்ச்சுனன்:—ஏ பகவன்! ஒரு வீடு தீயால் அழிந்து போனல் அதற்குள் இருக்கும் மனிதனும் வெந்தொழி வதுபோல், தேகம் அழியும்போது உள்ளிருக்கும் ஆன்மாவும் அழியாதோ?

பகவான்:—ஏ அர்ச்சுன! ஆன்மா அவயவாதிகளோடு பொருந்திய உருவ முடையதன்று. ஆதலின் யுத்தத் தில் உபயோகப்படும் வாள் வேல் முதலிய எத்தகைய

கொடிய ஆயுதங்களும் அதைச் சேதிக்க முடியாது. அக்கினியால் அது வெந்தழியாது. ஜலமும் அதைக் கரைந்தழியச் செய்யவல்லதல்ல. வாயுவாலும் அது சலனமடையாது. எதனாலுமே அது பாதிக்கப்படாது.

இவ்வான்மா எல்லாப் பொருள்களுக்கும் பழைமை யானது, எங்கும் தானாக வியாபித்திருப்பது, ஸ்திரமானது, நித்தியமானது, அஞ்ஞான்மாக்களாகிய இந்திரியங்கள் முத லியவற்றால் கோசரிக்கக் கூடாதது. இத்தகைய சுபாவ முடைய ஆன்மாவை யுள்ளபடி உணராமல், அது மற்ற தேகம் முதலிய பதார்த்தங்களைப்போல் அழியும் என்று நீ வருந்தா நிற்பது என்ன காரணங்கொண்டோ வறிகிலேன்.

ஏ! பார்த்த, அவ்வாறின்றி இவர்கள் தேகத்தோடு ஆன்மாவு மழிந்தே மறுபடி பிறக்கிறார்கள் என்று கொள் வதாயினுங்கூட, பிறந்த எவரும் மரிப்பர், மரித்த எவரும் மீண்டும் பிறப்பர்; இது தீர்வை. ஒருகால் இவர்கள் தேகம் அழிவதற்கே நீ சோதிப்பதாயின், இந்தப் பீஷ்மத் துரோணாதியர் இஜ் ஜன்மமெடுத்ததன் முன்னர் இன்ன விதமாக விருந்தார்கள் என்பதை நீ சற்றும் அறியமாட் டாய். இனி இங்கு இறந்தபின் எந்த விடத்திற்குச் செல் கிறார்கள்; எந்த உருவை யடைவார்கள் என்பதையும் நீ சற்றுமறியாய். இடையிலுள்ள சொற்ப காலமாகவே, நீ இவர்களை யறிந்திருக்கிறாய்—முன்னுமில்லாது பின்னுமில் லாது இடையில் மட்டும் தோன்றுவது இந்திரஜாலம் போன்று பொய்யே யாகும். ஆதலின் துச்சமான சரீரங் களைக் குறித்து நீ சோகிப்பது தகுதியன்றாகும்.

அர்ச்சுனன்:—“சுவாமி! இவ்வுலகில் சாத்திர விசாரணை செய்து உண்மையையுணர்ந்த அறிஞரும் சோகமடை தலைக் காண்கிறோம். தாங்கள் நான் அறிந்திருந்தும்

சோக முறுகிறேனென்று என்மேல் குற்றங் கூறுகிறீர்கள். மேலும் கேட்போனுக்குப் பொருள் விளங்காவிடின் அது சொல்வோனிடமுள்ள குறையாலேயே என்று சாஸ்திரங் கூறுவதால் தாங்கள் கூறுவதை நான் கிரகித்துக் கொள்ளாததும் என் தோஷமன்றும் எனக் கருதுகிறேன்," என்றான்.

பகவான்:—ஏ! கிரீடி! ஆன்மாவை யறியாத அஞ்ஞானத்தாலேயே உனக்குச் சோக முண்டாகிறது. அதைப் போலவே மற்ற அறிஞர்களுக்கும் சோகமுண்டாதல் ஆத்மாவை யறியாததாலேயே நான் கூறுவதன் பொருள் உனக்கு விளங்காதிருப்பது உன் அந்தக் கரணத்தின் தோஷமே யன்றி சொல்லும் எமது தோஷம் சிறிதும் இன்றாம்.

(ஆன்மாவை யறிவது மிகப்பிரயாசையென் றருளல்)

சில அதிகாரிகள் இந்த ஆன்மாவின் உண்மையை யென்றுங் கண்டறியாத அதிசயத்தைக் கண்டவர்கள் போல உணர்கிறார்கள். வேறு சிலர் எப்போதும் உரைத்திராத அதிசயத்தை யுரைப்பவர்கள்போல் பிறருக்கு உபதேசிக்கிறார்கள். மற்றும் சிலர் என்றும் கேட்டறியாத அதிசயத்தைக் கேட்டவர்கள்போல் மகிழ்ச்சி யடைகிறார்கள். சிலர் அதைப்பற்றி எவ்வளவுவரைக் கேட்டும் சற்றும் அறிந்து கொள்வதில்லை.

ஆதலின், ஏ அர்ச்சுனா! கர்மத்தின்படி ஜீவர்கள் அடையும் பல தேகங்கள் அழியினும் நித்தியமாகிய ஆன்மா அழிவதில்லை யென்ற உண்மையை யுணர்ந்து, இப்பீஷ்மத் துரோணாதியரை நான் கொல்கின்றேன் என்று கருதும் சோகத்தை விட்டொழிப்பாயாக. மேலும் ஆயுதமேந்தி யுத்தகளத்தில் முன்வைத்த காலைப் பின்வைக்காது அமர்

புரிவதே க்ஷத்திரியனுக்குரிய தருமமென்று வேதம் முறையிடுவதால், மோக்ஷ சாதனமாகிய இந்த யுத்தத்தைச் செய்யத் தொடங்குவாயாக:—

[போர்முனையில் நின்று யுத்தம் செய்யும் வீரனுடைய மனதில் இழிவான அற்ப இச்சைகள் ஒன்றுமின்றி ஜயம் பெற வேண்டுமென்ற ஒரே எண்ணமிருப்பதால், அவ் வீரன் வீரசொர்க்க மடைகிறான் என்று கூறப்பட்டிருப்பதால் மோக்ஷ சாதனமான யுத்தம் என்னப்பட்டது.]

**அர்ச்சுனன்:**—பகவானே! க்ஷத்திரியனுக்குரிய தருமம் யுத்தம் செய்வதே யெனினும், இந்தப் பீஷ்மத் துரோணாதியரோடு யுத்தம் புரிவது எனக்கு உசித கர்மமாகாது.

**பகவான்:**—ஏ கிரீடி! யாதொரு முயற்சியுமின்றியே சுவர்க்கத்தை யளிக்கக்கூடிய இந்தப் போரை எந்த க்ஷத்திரியன் அடையப் பெறுவனோ அவன் சுகத்தையே யடைகின்றான். ஆதலால் இப்போரைத் தொடங்குவது அதர்மமென்று நீ ஐயுற வேண்டாம்.

[யுத்தத்தால் வெற்றியுண்டாயின் இவ்வுலகில் கீர்த்தியும் செல்வமும் பூமியும் கிடைக்கும்—அப்படிக்கின்றி அபஜெய மடையினோ துரிதமாக மோக்ஷத்தை யடைவன். ஆதலின் க்ஷத்திரியன் யுத்தத்தால் நலமே பெறுகிறான்.]

மேலும் ஏ அர்ச்சுனா! க்ஷத்திரியனுக்குரிய சுதர்மமாகிய இப்போரைத் தொடங்காமற் போவையேல் நீ உன் தருமத்தையும் கீர்த்தியையும் இழப்பதோடு பாவத்திற்கு ஆளாவாய். இம்மட்டோ! அகௌர மடைந்து பழிக்கப் படுவாய், அந்தோ! இதனினும் இறந்து போவது மேலல்லவோ? உன் எதிரிகள் நீ யஞ்சியோடினை யென்று வசைமொழி கூறுவர். இதுகாறும் நீ வீரசூரனென்று

அடைந்த கீர்த்தியும் வெற்றிகளும் பழிக்கத்தக்கனவாகும்; பகைவனிடம் கேட்கத்தகாத ஒரு இழிச்சொல் கேட்பதை விட ஒரு சுத்தவீரன் அடையத்தக்க துன்பம் வேறுளதோ?

ஏ! அர்ச்சுனா! நீ இத் துரியோதனாதியரோடு போர் புரிந்து ஒரு சமயம் மரணத்தையே அடைந்தாலோ, நிச்சயமாய்த் தேவர்களும் வணங்கத்தக்க தேவபோகத்தை அடைவாய். அப்படிக்கின்றி வெற்றி அடைந்தாலோ, முடிமன்ன ரெல்லாம் வணங்க இம்மண்ணுலகை அரசாள்வாய். ஆதலின் நீ உன் தருமப்படி போர் செய்வதே தகுதியாகும்.

அர்ச்சுனன்:—ஏ பகவான்! நான் தேவபோகத்தை அடையும் நோக்கத்தோடு யுத்தம் செய்வேனாயின் அது இச்சா ரூபமான காமிய கர்மமேயாகும். அதைவிட்டு இவ்வுலகை ஆட்சி செய்யலாம் என்ற ஆசையோடு யுத்தம் செய்யினும் அதுவும் காமிய கன்மமேயாகும். ஆதலின் போர் புரிவதால் எவ்வகையாலும் எனக்குப் பாவமே யன்றோ பிராப்தமாகும்?

பகவான்:—அர்ச்சுனா! நீ சுகம் துக்கம், இலாபம் நஷ்டம், ஜயம் அபஜயம் இவற்றில் சம திருஷ்டி யுடையவனாய், நமது தருமத்தை நாம் செய்ய வேண்டுவது நமது கடமை, பலன் எதுவாயினும் சரி; அது நமக்கு அவசியமில்லை என்ற எண்ணத்தோடு யுத்தம் செய்வையாகில் ஒருபோதும் பாவம் உண்டாகாது.

(பகவான் முன்பு ஆன்மாவைப் பற்றிக் கூறியபோது ஆன்மா நித்தியம் என்பதோடு அகர்த்தா அபோக்தா என்று கூறியருளி யிப்போது நீ யுத்தமாகிய கருமத்தைச் செய் என்றதனால், "நான் அகர்த்தாவாயும் அபோக்தனாகவும் இருக்கிறேன்" என்று எண்ணியிருக்க வேண்டிய

என்னிடம் கருத்துருத்துவ புத்தி எங்ஙனம் உண்டாக லாம் என்று சங்கிக்கும் அர்ச்சுனனுக்கு முன்பு ஞானத்தைப்பற்றி உபதேசித்தோம், இப்போது கருமத்தைப்பற்றி உபதேசிக்கிறோம் என்று கூறுகிறார்.

பகவான்:—ஏ அர்ச்சுனா! பற்றுக்கள் யாவும் ஒழியப் பரமான்மாவைப் பற்றும் மார்க்கமாகிய ஞானத்தை முன் உனக்குச் சாமான்யமாய் விளங்கும் வண்ணம் உபதேசித்தோம். இப்போது எத்தகைய ஒரு கருமத்தால் இருவகையான வினைகளும் ஒழியுமோ எதை அனுஷ்டித்தால் முக்தி அடையலாமோ அத்தகைய கருமயோகத்தை கூறுதும் கேட்பாயாக.

காமிய கர்மாதிகளா லடையும் சுவர்க்காதி பலன்கள் நாசமடைவதுபோல், அறிவாளிகள் செய்யும் நிஷ்காம கர்ம யோகத்தினால் அடையும் பலன் நசியாது. மேலும் நிஷ்காம கர்மயோகம் சித்த சுத்தியைத் தருவதால், அதனால் இடையூறுகளாவது பாவங்களாவது சம்பவியா. அநுஷ்டிக்கும் நிஷ்காம கருமம் சொற்பமேயாயினும் அதனாற் சனன மரணமாகிய பெரிய மாயை யொழிந்து போம். ஆகையால் விவேகிகள் இவ்வுலகில் தமக்குரியதாகக் கொள்ளத்தக்க பொருள் அதனினும் வேறின்றாம்.

நிஷ்காம கர்மானுஷ்டானத்தை அனுசரிப்பவர் புத்தி ஒரே வழியில் நிலைத்திருக்கும். காமிய கர்மானுஷ்டான முடைய அவிவேகிகள் புத்தியோ தனம், பெண்டு, புத்திரர் சுவர்க்காதி போகங்கள் முதலிய பல வழிகளில் அலைவுண்டிருக்கும். ஏனெனில் அவர்கள் சுவர்க்காதி போகங்களை யடையும் விருப்பத்தோடு கருமங்களை இயற்றப் போதிக்கும் கரும்காண்ட சுருதி வாக்கியங்களையே சிறந்ததெனக் கருதுபவர்கள். அவர்கள் கரும பலத்திலும் உயர்வான

பலன் வேறொன்றும் இல்லையென எண்ணும் போகங்களி லேயே பற்றுடையராய் இருப்பார்கள்; அவர்கள் சுவர்க் காதி பயன்களை யன்றி யாவற்றினும் உயர்வான ஞான சுகத்தை யறிவார்கள். இவர்கள் தாம் செய்யும் கருமத் தின் பயனாகச் சுவர்க்காதி போகங்களை யனுபவித்தபின் மறுபடி மண்ணுலகில் வந்து ஜனிப்பதாகிய மார்க்கத்தி லேயே செல்பவர்களாதலால், ஆன்ம ஞானிகளாகிய அறி வுடையோர் பகிர்முக திருஷ்டியேயுடைய இவர்களுக்கு மேலான ஞானநெறியை உபதேசியார்கள்.

கருமகாண்டத்தின் வழியொழுகிச் சுவர்க்க போகங் களை யடையக் கருதுவோர் இராஜோகுண மயமான இச்சை யுடையவர்கள், இவர்கள் புண்ணிய கன்மம், பாவ கன்மம் மிசிரகன்மமென்னும் மூவித கன்மங்களின் சம்பந்தமாகிய சுகதுக்கக் கலப்புடைய பலன்களையே அடைவர்.

ஆதலின் வ அர்ச்சுனா! நீ அந்த இராஜோகுண சொரூப மான இச்சையற்றவனாகி, நித்திய சத்துவ குணமுடைய வனாகி யிருப்பாயாக. அங்ஙனே யோகக்ஷேம * மற்றவ னாகிய, ஆன்ம சொரூபியாய் இருப்பாயாக.

[ஒருவன் எந்தப் போகத்தை இச்சித்து ஒரு கருமத் தைச் செய்கிறானோ அவனுக்கு அக்கருமம் அப்பலத்தை அளிக்கிறது. எந்தப்போகத்தின் இச்சையுமின்றிச்செய்யும் எந்தக் கருமமும் பலனை யளிக்காது ஆகையால் கருமமல்ல போகங்களை யளிப்பது; இச்சையே யளிப்பதாகும். ஆகை யால் நீ எதிலும் இச்சை யற்றவனாயிரு என்பதாம்.]

அர்ச்சுனன், "பகவானே! சீதோஷ்ணாதிகளைச் சகித் துக்கொள்ள உடையையும், பசிப்பிணியை யொழிக்க

* யோகப் = முன்பு அடையாத ஒரு வஸ்துவை யடைதல்.
* க்ஷேமம் = அடைந்த வஸ்துவைக் காப்பாற்றி வைத்திருத்தல்.

அன்ன பானாதிகளையும் அடைய வேண்டுமென்று இச்சை யுண்டாகுமன்றோ? பின்னும் அவற்றை வைத்துக் காப் பாற்ற வேண்டுமென்று விருப்பமு முண்டா மன்றோ? அப் படியிருக்க இச்சை யற்றவனாகவும், யோகக்ஷேமங்க ளற் றவனாகவும் இருப்பது எங்ஙனம் கூடும்? அப்படி யிருப் பின் எப்படி ஜீவிப்பேன்?" என்று வினவினான்.

பகவான்:—"அர்ச்சுனா! நீ எல்லா இச்சைகளையும் விட் டொழி. நான் எவ்வாறு ஜீவிப்பேன் என்பது முத லிய எல்லாக் கவலைகளையும் விட்டொழிதி. எல்லா ருடைய யோக க்ஷேமங்களையும் கவனிப்பது பரமாத் மாவைப் பொருந்தியதே யென்ற திட நம்பிக்கை யோடு நிச்சிந்தனாய் ஆன்ம சொரூபியாகவே யிருப் பாயாக" என்றருளினார்.

அர்ச்சுனன்:—ஏ பகவான்! சுவர்க்காதி போகங்களின் இச்சையை யொழித்தபின், அவற்றை யளிக்கத்தக்க கருமங்களை நான் செய்வதும் அவற்றாலாய சுகப் பலனை யடையாதவனாவேனன்றோ? அச்சுவர்க்காதி போகங்களால் உண்டாகும் ஆனந்தத்தை இழந்த வன் ஆவேனன்றோ?

பகவான்:—ஏ அர்ச்சுனா! குளம், குட்டை, கிணறு முதலிய வற்றில் ஸ்நானம் செய்தல், பானம் செய்தல் முதலிய பயன்களைப் பெறுவோர்க்கு சுத்த சலம் நிறைந்த ஒரு கடல் கிடைத்தால், குளம் முதலியவற் றாலடைந்த பயன்களை யெல்லாம் அந்தச் சுத்த நீர்ச் சாகரத்தால் பெறுவார்களன்றோ? அதுபோலவே காமிய கன்மங்களால் அடையக்கூடிய ஹிரணிய கருப்ப பரியந்தமுள்ள எல்லா ஆனந்தங்களையும் பிரம்ம சாக்ஷாத்கார மடைந்த ஞானி அனுபவிப்பது எளிதேயாகும்.

(மனிதானந்த முதல் இரணிய கருப்பானந்தம் வரையி லுள்ள எல்லா ஆனந்தங்களும் பிரம்மானந்தமாகிய கடலி லுள்ள ஒவ்வொரு துளிக்குச் சமமாகும் என்பதால் பிரம் மானந்தத்தை யடைந்தவன் சகலவித போகங்களாலும் அடையத்தக்க எல்லா ஆனந்தங்களையும் அடைந்தவன் ஆவான் என்று கூறப்பட்டது.

இதனால் "நீ நிட்காம கருமத்தைச் செய்வாயாயின் அதனால் சித்த சுத்தியும், சித்த சுத்தியால் ஆன்ம ஞானமும் அடைவாய். ஆன்ம ஞானத்தால் பிரம்மானந்தம் சித்திக் கும். ஆகையால் நீ காமிய கர்மத்தைச் செய்யாது நிட் காம கருமத்தையே செய்" என்றதாம்.)

"ஏ அர்ச்சுன! நீ கருமத்தைச் செய்ய வேண்டுமே யன்றி அதனால் அடையத்தக்க பலனைக் கருதவேண்டாம். அந்தக்கரண சுத்தியுடையோரே ஆன்ம ஞானத்தைப் பெறத் தகுதியுடையவர்கள். நீ அந்தக்கரண சுத்தியை யளிக்கும் நிட்காம கருமத்தைச் செய்வதாகிய உத்தியோ கத்தின்கண் நிலைத்திருப்பாயாக. செய்யும் கருமங்களின் பயனை விரும்பாதவனாய், விதித்த கருமங்களை முட்டின்றிச் செய்து புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டவன் பர மான்மாவாகிய என்னை யறியுமார்க்கத்தை யுணர்வான்.

பலனை இச்சியாது செய்வதாகிய நிட்காம கருமங்க ளால் பாவங்களற்றுச் சித்தசுத்தியுண்டாகும். அதனால் நித் தியா நித்திய விவேகம் பொருந்தும். அது பொருந்தவே புண்ணிய பாவங்களில் விருப்பு வெறுப்பற்று, இலாப நஷ் டங்களில் சமத்வ புத்தி ஜனிக்கும். இதனால் ஆன்ம அநான்ம விவேகம் உண்டாகி யான் எனது என்ற பற்றுக்கள் நசிக்கும். அதன்பின் ஆன்ம ஞானமின்றி ஏனைய வைதிக இலௌகிக விஷயங்களில் விராகமுடையவனாய் ஆன்ம

சாக்ஷாத்காரத்தில் நிலைத்து நிற்பான். அவ்வாறு ஐயமின்றிச் சலியாமல் ஆன்ம சொரூபத்தில் நிலைத்து நிற்பவன், பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தை யடைவான்" என்று பகவான் அருளினர்.

(மேலே கூறப்பட்ட ஞான நிலையி லிருப்பவனுடைய இலட்சணங்களை யறிய விரும்பிய விஜயன் பகவானை வினவுகிறான்.)

அர்ச்சுனன்:—ஏ பகவான்! முன்னே தாம் அருளியவாறு சமாதி நிலையின்கண் நிலைத்திருக்கும் புருஷனுடைய இலட்சணமென்ன? அவன் அச்சமாதியினின்றும் பகிர்முகப்பட்டு எழுந்தபோது எவ்வாறு நடந்து கொள்வான்? அவன் எவ்வாறு பாகிய இந்திரியங்களை நிக்கிரகம் செய்வான்? எவ்வாறு விஷயங்களை யடைவன்? எவ்வாறு உரையாடுவன்? இவற்றை உள்ள படியே யருள் செய்யப் பிரார்த்திக்கின்றேன்.

[பிரம்மஞானத்தை யடைந்தவன் இரண்டு நிலைகளை யுடையவன். ஒன்று உண்முகத்தில் சமாதியின்கண் நிலைத்திருப்பதாம். மற்றொன்று சமாதியினின்றும் எழுந்து பகிர் முகப்பட்ட நிலையாம். முன்னையதில் உலகத்தோற்றம் அடியோடில்லை. பிரம்ம சாக்ஷாத்காரம் ஒன்றே யுளது. பின்னையதில் சமாதியின் கண்ணுள்ள வாசனையோடு கூடிய சித்தத்தின்கண் கானல் நீர்போன்ற பிரபஞ்சத் தோற்றமுண்டு.

ஆரோபவாத லக்ஷணப்படி அதிஷ்டானமான கயிற்றைக் கண்டதே ஆரோபமான பாம்பு அடியோடு மறைகிறது; பிறகு தோன்றுவதில்லை. அப்படியிருக்க தாஷ்டாந்தத்தில் மட்டும் அதிட்டானமாகிய பிரம்மத்தின் ஞானம்

உதயமான பின்னும் ஆரோபமான பிரபஞ்சம் தோன்று வானேன் என்று ஒரு கேள்வி ஈண்டு உதிக்கலாகும். இந்த சந்தர்ப்பத்தில்தான் கானல் நீர் திருஷ்டாந்தம் கூறப்பட்டிருக்கிறது. கானல் நீர் பொய்த்தோற்றம் என்று அனுபவமாய்க் கண்ட பின்னும் அது தோன்றிக் கொண்டேயிருப்பதுபோல், ஞானோதயத்திற்குப் பின்னும் உலகம் தோன்றிக்கொண்டே யிருக்கும்.

"அரவிலே பழுதை யுணர்ந்தவர்க் கதுபோ
 லகிலமெய்ப் பொருளினை யுணர்ந்தோர்க்
கொருவுரு திருந்த லெனையெனிற் கான
 லுறுசல மிலையென வுணர்ந்தும்
மருவலி றுறு விகாரமே தென்னின்
 மலிகன வினிலுறு மென்றருள்
கிருதுசெய் மறையோர் பரவிய விருத்த
 கிரியமர் பெரியநா யகியே." (குமாரதேவர்.)

கானல் நீர் பொய்த்தோற்றம் என்று அறிந்தவன் மறுபடி அதை நீர் என்று நம்பிச் செல்வான். அது போன்றே ஞானிக்கு உலகம் தோற்றரவாயினும் அது அநுர்த சட துக்கமென்று உணர்ந்து அதிக மன நாட்டம் வைக்கமாட்டான்.

"சமாதியில் நிலைத்திருப்பவனை என்ன இலட்சணங்களால் அறியலாம்? அவன் பகிர் முகப்பட்டபின் உலகில் எப்படி நடந்து கொள்வான்? எவ்வாறு இந்திரியங்களை நிக்கிரகம் செய்வான்? சுக துக்க கலப்பான உலக விவகாரங்களில் எப்படி நடந்து கொள்வான்? எவ்வாறு பேசுவான்? என்பது முதலிய விஷயங்களைக் கூறும்படி அர்ச்சுனன் வினவினான்.

இந்த ஞானி துறவியாயிருப்பின் சமாதிநிலை விட்டுப் பகிர் முகப்பட்டபோது சகச சமாதியிலே யிருப்பன்.

அவனுக் குலகத் தோற்றரவு கனவுபோலாகும். இல்லறத் திலிருக்கும் ஞானி தாமரையிலை நீர்போல் ஜகத்தோடுகூடி மற்ற அஞ்ஞானிகளைப் போலவே விவகாரங்களைச் செய் பவனுகத் தோற்றப்படுவான். அவனுடைய நடக்கை யாதிகளுக்கும் அஞ்ஞானியினுடைய நடக்கையாதிகளுக் கும் உள்ள தாரதம்மியத்தை யெவ்வாறு உணர்வது என்று அறிய விரும்பினன் தனஞ்செயன்.]

(அர்ச்சுனன் கேட்ட கேள்விகளுக்கு, ஆகாயத்தை முதலாகவுடைய பஞ்சபூதங்களால் தநுவண்ட புவன போகங்களாகிய யாவற்றையும் சிருட்டித்தருளிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பின்வருமாறு விடை யருள்கிருர்.)

பகவான்:—ஏ பார்த்த! முன்கூறிய வண்ணம் சமாதியின் கண் நிலைத்து நிற்பவன், ஆன்ம சாட்சாத்காரத்தில் நிலைத்து அந்த ஆன்மானந்தத்தையே அனுபவித்துக் கொண்டு இருப்பானுகையால், காமம், குரோதம், கோபம், தயக்கம் முதலியவை யற்றவனுய், இன்ப துன்பங்களில் மகிழ்ச்சி வாட்டமற்றவனுய், புகழிலும் நிந்தையிலும் விருப்பு வெறுப்பற்றவனுய் ஆமை தன் உறுப்புக்களை யெல்லாம் தன் தேகத்தினுள் அடக்கிக் கொள்வதுபோல் சுரோத்திராதி இந்திரி யங்களைத் தனக்குள் ஒடுக்கிக்கொண்டு ஆன்ம சொரூபத்தில் நிலைத்து, பிரம்மானந்த பரவசனுக விளங்குவான்.

[ஆன்மாவின்கண் இராகத் துவேஷாதி குணங்கள் ஒன்றுமில்லை. அவை ஆன்மாவின் சுபாவமாயின் அவற்றை நீக்க முடியாது. அக்கினியிடம் உஷ்ண குணம் பொருந்தி யிருக்கிறது. அதை நீக்கிய பின் அக்கினி என்ற ஒரு பொருள் இராது. அதுபோல் இராகத் துவேஷாதிகள்

மனத்தினிடமே பொருந்தி யிருக்கின்றன. மனம் ஒழியின் அவை யொழியும் ஆதலின் மனம் ஒழிந்த ஆன்ம சொரூப நிலையில் அக்குணங்கள் இல்லை. இச்சை யொழிந்த பின் எதனிடத்தும் மகிழ்ச்சி வாட்டமில்லை.]

அத்தகைய புருடனுக்கு எதிலும் விருப்பமாவது வெறுப்பாவது இல்லையாதலின் அவன் யாவற்றையுமே உதாசீனமாய் பேசுவான். ஆன்ம சாட்சாத்கார மடையா விடின் வேறெவ்விதத்தாலும் சர்வத்திலும் விரக்தி இயற்கையாய் உண்டாகாது. ஞான மடையுமுன் இந்திரியாதிகளைப் பழக்கத்தால் அடக்கிக் கொண்டிருந்தாலும், சித்தத்தின் கண்ணுள்ள இச்சை நிவர்த்தியாகாது.

அர்ச்சுனன்:—மனம் அடங்காமல் இந்திரிய நிக்ரகம் எங்ஙனம் கூடும்?

பகவான்:—என்னிடம் அனன்னிய பக்தியுள்ள புருடனுக்கு இந்திரியங்களை அடக்கும் சக்தி யுண்டாகாநிற்கும்.

அர்ச்சுனன்:—"ஏ பகவானே! அப்படியாயின் மனோ நிக்கிரகம் பயனற்றதுதானே," என்று வினவினன்.

பகவான்:—ஏ பார்த்த! சர்வ இந்திரியங்களையும் நிக்கிரகம் செய்யும் புருடனுக்கும் மனோ நிக்கிரகம் கிட்டா தாயின் சர்வ அனர்த்தங்களும் உண்டாகும். அவன் இந்திரியங்களை அடக்கிக் கொண்டிருந்தாலும் நான் கூறியபடி இச்சை யொழிந்ததல்ல.

ஆகையால் பாகியேந்திரிய நிக்கிரகமும், மனோ நிக்கிரகமும் நிலைத்திரா. சாத்திர ஆராய்ச்சி செய்து மனத்தை யடக்கப் பிரயத்தனம் செய்வோருடைய மனத்தைக்கூட இச்சையானது இந்திரிய வாயிலாக இழுத்து விஷயங்களில் புகுத்திவிடும்.

இதனால் ஆத்ம ஞானமின்றி இந்திரியங்களை வசம் பண்ணிப் பழகுவது கடினம் என்று நன்கு அறியலாம். அவை அடங்கியும் மனம் அடங்காவிடின் அம்மனம் இந்திரிய வழியால் விஷயாதிகளிற் செல்லும். ஆன்மஞானமில்லாதவரையில் விஷயாதிகளில் தோஷபுத்தி உண்டாவதில்லையாதலால் மனம் அவற்றை விரும்பிச் செல்லும். மனம் விரும்பும் விஷயம் சித்திக்காவிடின் குரோதம் தீப்போல் கிளம்பும். இக்குரோதத்தால் விவேகம் மங்கும், அந்த மயக்கம் நேர்ந்ததால் குருசாத்திரங்களா லுணர்ந்த அறிவு கெடும். அந்த உணர்வு கெட்டொழிந்தால் ஞான மார்க்கத்திற்குரிய எல்லாம் கெடும்.

[ஆன்ம சாட்சாத்கார மடையாமல் சாத்திர விசாரணை செய்து ஞானப்பியாசத்தில் முயல்வோன் பாகிய இந்திரியங்களை யடக்க முயன்றால் அவை யடங்குவது கஷ்டம். ஒரு சமயம் அடங்கினும் மூலகாரணமான இச்சாரூப மனம் அடங்காவிடின் பயனில்லை. ஏனெனின் இச்சை, மனதை இந்திரிய வாயில்களின் வழியாய் இழுத்துச் சென்று விஷயாதிகளில் புகுத்தும். அதன்பின் வாஞ்சித வஸ்துவை யடைய அவாவும்; அதை அடையாவிடின் குரோதாதி குணங்கள் ஒன்றின்மே லொன்றாய்க் கிளம்பிப் பூரணமாய் மாயையில் அழுத்திவிடும் என்பதாம்.]

சமாதியினின்றும் பகிர்முகப்பட்டவன், ஆமை தன் அவயவங்களைத் தனக்குள் அடக்கிக் கொள்வதுபோல் இந்திரியங்கள் சத்தாதி விஷயங்களில் செல்லவொட்டாது அடக்கிக் கொள்வான்.

[சமாதியிலிருப்பவனைப் பிராரப்தம் பகிர்முகப்படச் செய்யும்-ஆனால் இச்சையை யுண்டாக்க அதற்குச் சக்தியில்லை. இச்சா சொரூப மனம் அடங்கிவிட்டபடியால்

அது விஷய இச்சை கொண்டு இந்திரியத் துவாரா புறஞ் செல்லாது. அவ்வாறு செல்லாதிருத்தல் ஞானிக்குக் கஷ்டமின்றி இயற்கையாகவே தோன்றும்.]

(இதுகாறும் பாகிய இந்திரியங்களை நிக்ரகம் செய்யினும் மனோநிக்கிரகம் செய்யாவிடின் மனம் இந்திரிய வாயிலாய் விஷயாதிகளிற் சென்று அனர்த்தத்தை உறும் என்று கூறினர். இனி, பாகிய இந்திரிய நிக்கிரகம் செய்யா விடினும், மனோநிக்கிரகம் மட்டும் செய்திருப்பின் மேற் கூறப்பட்ட எவ்வகை அனர்த்தங்களும் உண்டாகமாட்டா வென்று அருளிச் செய்கின்றார். அதாவது, அர்ச்சுனன் கேட்ட கேள்விகளில் முதல் கேள்விகளுக்கு விடைகூறி, சமாதியினின்று வெளிவந்த ஞானி எவ்வாறு சஞ்சரிப் பான் என்பதற்கு விடை அருள்கின்றார்.)

ஏ அர்ச்சுனா! சமாதியினின்றும் வெளிவந்த ஞானி விருப்பு வெறுப்பின்றி இந்திரிய வாயிலாய் விஷயங்களில் பிரவேசித்தாலும், அவன் மனம் சற்றும் சலனமடையாது. போகங்களாலும் கலங்காது. சமாதியின்கண் அநுபவித்த பிரம்மான்ம சாட்சாத்கரமான நிர்மல நிலையிலேயே நிற்கும். அஞ்ஞானம் நீங்கும். அதனால் அதன் காரிய மாகிய சகல துக்கங்களும் நிவர்த்தியாம்.

இந்திரியங்களை நிக்கிரகம் செய்யாத புருடனுக்கு ஆன்ம ஞான அறிவு உண்டாகாது. அதில்லையாகவே ஆன்ம தரிசனம் உளதாவதில்லை. ஆன்ம தரிசன மில்லா விடின் சித்த சாந்தி தோன்றாது. அஃதில்லையேல் மோட் சானந்தம் ஜனிப்பதில்லை. அகன்ற சமுத்திரத்தில் செல்லும் கப்பலை அதனோடுகூட அதற்கு உதவியாய்ச் செல்லும் காற்றே பிரதிகூலமாய் மாறி முழுகடித்து அழித்து விடு வதுபோல், அடக்கப்படாத இந்திரியங்களின் பின்னே

விஷய இச்சையோடு அவை சென்ற வழியே செல்லும் மனமே ஆன்ம விஷயமான புத்தியைக் கலக்கி நாசம் செய்து விக்ஷேபத்தில் அழுத்திவிடும்.

இராக்காலம் யாவர்க்கும் இருள் மயமாகத் தோன் றினும் கூகைக்கு மட்டும் எங்கும் பிரகாசமாய் எல்லா வஸ்துக்களும் நன்கு புலப்படுவதுபோல், எந்த வஸ்து யாவர்க்கும் புலப்படாமல் அஞ்ஞானமாகிய இருள்மய மாய் இருக்குமோ அந்த வஸ்து ஞானிக்கு அங்கை நெல்லி போன்ற ஆன்ம சாட்சாத்காரமாய்த் தோன்றும்.

பகலில் சூரியப் பிரகாசத்தால் சகல பொருள்களும் யாவர்க்கும் நன்கு விளங்கி அவரவர்கள் உண்ணல் தொழில் செய்தல் முதலிய பலபல விவகாரங்களைச் செய் யினும், கூகைக்கு ஒன்றுமே தோன்றாமல் எல்லாம் ஒரே காரிருள் மயமாய்த் தோன்றுவதுபோல், யாவர்க்கும் நானு பேதமாகிய நாமரூப உலகம் பிரத்தியட்சமாகத் தோன்றி பலபல விவகாரங்கட்கு இடமாக விருப்பினும், இச்சையற்ற ஞானிக்கு சர்வம் பிரம்மமயமாகத் தோன்று வதால், உலக விவகாரமே அவன் புத்தியிற்றோன்றக் காணான்.

[ஞானி பிராரப்தத்தால் சமாதியினின்று வெளிக்குக் கொண்டு வரப்படுகிறான். பிராரப்தம் ஒழியுமட்டும் அவன் தேகபோஷணையின் நிமித்தம் சஞ்சாரம் செய்ய வேண்டியதாகிறது. பிராரப்த போகத்தைப் புசித்தே தீர வேண்டும். அப்படிப் புசித்தாலும் அவன் மனம் உருவ நாசமடைந்திருப்பதால், அதாவது ரஜோ தமோ குணங்கள் நசித்து சூக்குமமான சத்வகுண மட்டுமாய் இருப்பதால் போகத்தைப் புசிப்பதாய் அவனுக்குள் உணர்ச்சியில்லை. அவன் நாட்டம் பகிர்முகப் பட்டிருப்பதாய் நமக்குத்

தோன்றினும், தான் சமாதியில் அனுபவித்த ஆன்ம சாக்ஷாத்காரமாகிய உண்முக நாட்டத்தை அவன் விட்டவனல்லன். மனதின் இச்சையாகிய சொரூபம் ஒழிந்தால் விருப்பு வெறுப்பு முதலிய எவ்வித குணங்களுக்கு மின்றி இலாப லோபங்களிலும் சுக துக்கங்களிலும் மகிழ்ச்சி வாட்டம் இல்லை பிராரப்தப்படி கிடைத்த போகத்தை யுண்பவனாகமட்டு மிருக்கிறான். இறந்த காலம் எதிர்கால மென்பது அவனிடமில்லை. பிராரப்தத்தால் தோற்றரவாகும் உலக விவகாரமே அவனுக்குக் கனவுபோல் நடக்கும். கன்மம் அவனைப் பற்றாது. ஏனெனில் இச்சா ரூபமான மனம் நசித்தபின் கன்மத்தைத் தரத்தக்க இச்சையை யுண்டாக்கப் பிராரப்தத்திற்குச் சக்தியில்லை ஞானி விவகாரங்களில் பிரவேசித்தாலும் அவன் விவகாரங்கள் அனைத்தும் உலகோபகாரமாகவே இருக்கும். ஞானி அப்படி விவகாரங்களைச் செய்யினும் அவன் செய்கைகள் மனநாட்டமாவது, அக்கறையாவது, பிரதிபல நாட்டமாவது இன்றி மூன்றாவது மனிதருடைய திருமணத்தில் பலவந்தத்தால் வேலை செய்பவன் செயல் போலிருக்கும். கந்தன் என்பவன் அரிச்சந்திரன் வேடம் போட்டுக்கொண்டு தேச விசாரணை செய்யும்போது, அவனுக்குள் சந்தோஷமில்லை. பிறகு மயானத்தில் அடிமை வேலை செய்யும்போதும், உலோகிதாசன் மடிந்து சந்திரமதி பிரலாபிப்பதைத் தான் பார்க்கும்போதும் துக்கமுமில்லை. எப்படி நடிக்கும்போதும் தான் கந்தன் என்பது அவனுக்குள் நிச்சயமாய்த் தெரியும். மறந்தும் தான் அரிச்சந்திரன் என்று அவன் மனதில் கருதமாட்டான். அதுபோலவே ஞானி உலக விவகாரங்களைச் செய்யினும் எப்போதும் தான் ஆன்ம சொரூபமே என்ற திடப்பிரக்ஞை யுடையவன். அதனால் அவன் யாதொரு

அருணகிரிநாதர் "இல்லையெனு மாயையி லிட்டெனை நீ—பொல்லே னறியாமை பொறுத்திலையே" என்றருளினர்.

அப்படியாயின் இது விஷயமாகச் சிலர் வாதாடு கிறார்களே யெனின் அது தவறே. அறிவாளிகளுக்கு அப்பேதமிராது.

"வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோடஞ் சிறப்பும் பொதுவமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே." (திருமந்திரம்.)

ஆன்மாவும் ஒன்றைச் செய்வதுமில்லை செய்விப்பது மில்லை. பரமான்மாவும் அகண்டமாக எங்கும் நிறைந்திருப் பினும் ஒன்றையும் செய்பவருமல்ல, செய்விப்பவருமல்ல. ஆன்மாக்களின் பாவபுண்ணிய கருமங்களில் ஒன்றும் அவ ரைப் பற்றுவதில்லை. மற்றபடி யார் செய்தும் செய்வித்தும் பிரவிர்த்திப்பவர் எனின், தெய்வீக மாயையாகிய பிரகிரு தியே பிரவிருத்திக்கின்றது. சூரியன் எவ்வித பாரபக்ஷமு மின்றிப் பிரபஞ்சத்தின் நன்மைக்கே பிரகாசித்தபோதிலும் உலகிலுள்ள வஸ்துக்கள் அவ்வவற்றின் சுபாவத்திற்குத் தக்கபடி ஒன்றுக்கொன்று மாறுன பலவித நிலைகளையடை கின்றன எவ்வாறெனின் ஜலத்திலுள்ள தாமரை மலர்ந்து பிரகாசிக்கிறது. கரையிலுள்ள தாமரை வாடியுலர்கிறது. பனிக்கட்டி நீராக மாறுகிறது. ஜலம் நீராவியாய்ப் போகிறது.

இவ்வாறே எங்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பரமான்மாவின் சந்நிதானத்தில் ஜீவன்கள் அவ்வவற்றின் கர்மத்திற்குத் தக்க பலன்களை யனுபவிக்கவும் காரியங் களைச்செய்யவும் மாயையாகிய பிரகிருதியே பிரவிருத்திக்

கின்றது. உண்மையில் ஆன்மாவினிடம் ஒரு கருமமு மில்லை.

அஞ்ஞானம், ஆவரணம், அவித்தை, பிரகிருதி, மாயை, சக்தி என்பன ஒரே பொருளைக் குறிக்கும் சொற்களே. இந்த அஞ்ஞானம் சீவனையே பற்றி நின்று; சீவன் தன் நிஜ வுருவைக் காணவண்ணம் மறைக்கிறது. சூரியன் உதய மானதே இருள் நீங்குவதுபோல் ஞானம் உதயமானதே அஞ்ஞானம் நீங்குகிறது. ஒரு குகையில் இருள் சிருட்டி காலத்திலிருந்தே இருந்தாலும், தீபத்தைக்கண்டதே மறை வதுபோல் அஞ்ஞானம் அநாதியாயினும் ஞானோதயமா னதே நீங்கும். ஆன்மா ஞான சொரூபமே. அது தன்னை அறியாத் தன்மையே அஞ்ஞானமாம். கதையிலில்லாத பெரும் பொய் போன்றதே மாயையென்றும், "யாதொன் றில்லாதது அது மாயையாகும்" என்றும் வாசிட்டம், கைவல்லியம் முதலிய பிரபல நூல்கள் கூறியிருக்கின்றன. ஏனெனில் அறிவைக்கொண்டு பார்க்கும்போது மாயை புலப்படாது. அதனுனே மாயையும் மாயா காரியங்களுமா கிய யாவும் பொய்யென்றும், ஞானநிலையில் பொய்யாகிய ஆவரணம் கானல்நீர், கயிற்றரவு, கிளிஞ்சில் வெள்ளி இவற்றிற்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டது. அதற்கு ஒருவித சொரூபமுமில்லை யாதலின் அவாச்சிய வடிவம் எனப் பட்டது.

"போத மென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாம்
நீதி லாவினைக் கெடுத்திருள் தேடவுஞ் சிக்கா
தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
யேது மில்லையென் றெம்பிரான் கருதியே யியம்பும்."

என்று தாயுமான சுவாமிகள் கூறியருளினர்.

அந்தகாரம் எவ்வாறு வீட்டைப்பற்றி யிருந்து வீட்டையே மறைக்கிறதோ, அவ்வாறே மாயை யல்லது அஞ்ஞானம் சீவனைப் பற்றிக்கொண்டிருந்து அதன அறிவாகிய கண்ணை மறைக்கிறது.

(இதுகாறும் பகவான் ஆன்ம ஞானத்தால் பெறப்படும் விதேக கைவல்யத்தைப்பற்றிக்கூறியருளினர். இனி ஆன்ம ஞானத்தால் இத்தேகத்திலிருக்கும்போதே யடையத்தக்க ஜீவன்முக்தத் தன்மையைப்பற்றிக் கூறியருள்கின்றார்.)

ஏ அர்ச்சுனு! சத்துவ ரஜோ தமோகுண பேதங்களான எல்லாச் சீவன்களிடத்தும் அபேதமாய் என்னை எவன் காண்கிருனே அவன் தேகத்தோடிருந்தாலும் தேகம் சம்பந்தமான ஜனன மரணுதிகளைச் சயித்தவனுவான்.

சூரியன் சுத்தமான கங்கா ஜலத்திலும், அசுத்தமான சாக்கடை நீரிலும், நறுமணம் பொருந்திய மலர்மேலும், துர்நாற்றமுடைய மலத்தின் மேலும் பிரகாசித்தாலும் அந்த வஸ்துக்களின் சுத்தா சுத்தங்களால் பற்றப்படாமல், தான் பரிசுத்தமாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. ஆகாயம் இந்த அண்டரண்ட சராசரமனைத்திற்கும் இருப்பிடமாக விருந்துகொண்டு இவற்றின் உட்புறம் எங்கணும் வியாபித்து நின்றுலும் எதிலும் தாக்கற்று இருக்கிறது. அதைப்போலவே பரமான்மா யாவற்றிலும் உள்ளும் புறம்புமாய்ச் சர்வவியாபியாய் நிறைந்து நின்றுலும், எதிலும் தாக்கற்றுப் பரிசுத்தமான சச்சிதாநந்த மயமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அத்தகைய பிரம்மத்தைத் தன் ஆன்ம சொரூபத்தோடு அபேதமாய் எவன் காண்கிருனே அச்சீவன் முத்தன் பிறப்பிறப்பை யொழித்தவனே யாவான்.

[எங்கும் வியாபகமாக விருப்பவை சத்து, சித்து, ஆனந்தம், நாமம், ரூபம் என்ற ஐந்து அம்சங்களே. இவற்றில் சச்சிதானந்தமாகியது பரப்பிரம்மம். நாமரூபமாயுள்ளது உலகம். சச்சிதானந்தமாகிய பிரம்மம் அதிட்டானம். அதனிடத்தில் இந்த நாமரூபமாகிய பிரபஞ்சம் ஆரோபமாகத் தோன்றி யிருக்கிறது. ஆரோபம் தோன்றிக்கொண்டிருக்கும் வரையில் அதிஷ்டானமாகிய பிரம்மம் தோன்ருது. சாதாரணமாய் மனம் நாமரூபத்திலேயே நாட்டம் வைத்திருக்கிறது. "அந்த நாட்டம் உள்ளளவும் பிரம்ம சொரூபம் தோன்ருது. நாமரூப நாட்டம்விடின் நமது சொரூபம் தோன்றிவிடும்" என்றருளினர் ஸ்ரீ குமாரதேவர்.]

"நாம ரூபந் தனைநோக்கி நாடன் மனமும் புறமுகமும்
நாம ரூபந் தனைநீக்கி நாட லறிவு முண்முகமும்
நாம ரூபத் தெவ்வளவு நாட்டஞ் சொரூபந் தோன்ருது
நாம ரூப நாட்டம்விடி னமது சொரூபந் தோன்றிவிடும்."

(ஸ்ரீ குமாரதேவர்.)

நாமரூப நாட்டம் மறைந்தால் சச்சிதானந்தம் தோன்றும். அது தோன்றியபின் உலகத்தோற்றம் மறையும். (சூரியனை நோக்கிக்கொண்டிருந்து பிறகு உலகைப் பார்த்தால் உலகம் தோன்ருததுபோல்.)

"ஆதவன் தன்னைப் பார்த்திட் டகிலத்தைப் பார்த்த போது
ஆதவ னொளிமே விட்டே யகிலந்தோன் ருதவா போற்
சேதனச் சிவத்தை நோக்கிச் செகத்தினை நோக்குங் காலை
சேதனச் சிவமே விட்டுச் செகமெலா மறைந்து போமே."

(வள்ளலார்-பதிபசுபாசவிளக்கம்.)

ஞானி எங்கும் எல்லா வஸ்துக்களையும் சச்சிதானந்த சொரூபமாகவே காண்கிருன். அவன் யாவற்றிலும் சம திருஷ்டி யுடையவனுதலின் குதிரை, யானை, கழுதை, நாய் முதலியவற்றில் ஒரு வித்தியாசத்தையும் அவன் காண்பு

தில்லை. ஏனெனில் அவனுக்கு நாமரூபத்தில் திருஷ்டியில்லை. இத்தேகத்திலிருக்கும்போதே அவன் துவித உலகத்தைக் கடந்தவனாயிருக்கிறான். இத்தகைய ஜீவன்முக்தன் தேகம் நீங்கியதே விதேக கைவல்யத்தை யடைகிறான்.

"எல்லாம் சிவமென்னு மெண்ண முனக்குண்டே
லெல்லாநலனுமுனக் கெய்துமே." என்றனர் வள்ளலார்.

அர்ச்சுனன் "ஏ பகவான்! இந்திரியங்கள் விஷயங்களில் பிரீதி யடைந்து பிரவேசிப்பது பல ஜன்மங்களில் பழக்கமானதாதலால், பாகிய விஷயங்களில் மனம் செல்லுமே—அப்போது பிரம்ம சொரூபத்தில் எவ்வாறு நிலைத்து நிற்கும்?" என்று வினவிய சங்கைக்குப் பகவான் அருளிச் செய்கின்றார்:—

"ஏ பார்த்த! சத்தாதி விஷயங்களிற் செல்லும் இந்திரியங்களால் அடையத்தக்க விஷய சுகங்களனைத்தையும் உள்ளத்தில் வெறுத்து நிராசையுடையவனே பிரம்மானந்த சுகத்தை யடைவான். பிரம்ம சுகமே யழியாததென்றும் விஷய சுகங்கள் அழியத்தக்கவை யென்றும், பின்னர் அவற்றால் துன்பங்கள் உண்டென்றும் அறிந்த விவேகி அவற்றில் எள்ளளவும் இச்சை வையான்.

[இந்திரிய வாயிலாய் அனுபவிக்கப்படும் விஷய சுகங்களனைத்தும் அனான்ம சம்பந்தமானவை. அவை அற்பமும் ஆதிபந்த முடையவையும் துன்பங்களை யுண்டாக்கத்தக்கவையுமாகிய அனித்தியங்களாம். பிரம்ம சுகம் ஒன்றே துக்கமற்ற நித்திய நிரதிசயானந்தமாம். விஷய சுகங்களை வெறுத்தவர்க்கே நித்தியானந்தமான பிரம்மசுகம்கிட்டும்.]

(காமக் குரோதாதிகள் மோக்ஷத்திற்குப் பிரதிபந்தங்களாகையால் அவற்றை யடக்கியவனே முக்திக்குரியவனென்று பகவான் அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! எவன் சரீரத்துடனே கூடியிருந்தும் விஷயத்திற்கொப்பான காமக் குரோதாதிகளால் தங்கப் படாவண்ணம் அவற்றின் வேகத்தைச் சகித்து அடக்கி விட்டுச் சர்வ சாந்தனாக விருக்கிறானோ, அவனே தீரனும் சுத்தனும் ஞானியுமாவன். அவனே பிரம்மானந்த சுகத்தையும் மோக்ஷத்தையும் அடைதற் குரியனாவன்.

[குடும்பத்தோடு கூடியிருக்கையிலேயே காமக்குரோதாதிகளின் வேகத்தைச் சகித்துச் சுகதுக்கங்களில் சமதிருஷ்டி யுடையவனாயிருக்கப் பழகவேண்டும். அத்தகையோனே பின்னர் சந்நியாச நிலையில் அக்காமக் குரோதாதிகள் ஜனிக்காவண்ணம் தடுத்து பிரம்மஞானத்தை யடையத் தகுதி யுடையவனாவான்.]

(பகவான் காமக்குரோதாதிகளைச் சகித்தல் மாத்திரந் தானே மோக்ஷம் சித்தித்து விடாதென்றும், இன்னும் அந்தர்முக சாதனம் வேண்டுமென்றும் அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! எப்புருடன் அந்தரான்மாவிலேயே திருஷ்டி வைக்கின்றானோ, எவன் அந்தரான்மாவிலேயே சுகித்திருக்கிறானோ, எவன் அந்தரான்மாவையே தான் பிரியப்படும் ஸ்தானமாய்க் கொள்கிறானோ அத்தகைய ஞானி பிரம்மானந்தத்தை யனுபவிப்பன்.

[பாகிய விஷயங்களின் இச்சையைவிட்டு அந்தர்முகத்தில் ஆன்ம சொரூபத்தில் இலயித்திருப்பவன் பிரம்ம சுகத்தை யனுபவிப்பான் என்பதாம்.]

(இப்போது பகவான் இனி ஆறாவதத்தியாயத்தில் அருளிச் செய்யப்படும் பிரம்ம ஞானத்திற்குச் சாதனமான தியான யோகத்தைக் குறிப்பா யருள்கின்றார்.)

ஏ பார்த்த! சுரோத்திரம் முதலிய பஞ்சேந்திரியங்களை சத்தாதி விஷயங்களில் பிரவேசியாவண்ணம் தடுத்து, இரண்டு நேத்திரங்களின் பார்வையையும் இரண்டு புருவங்களின் மத்தியில் நிறுத்திவைத்து, பிராணன் அபானன் இரண்டையும் சமமாய் அசையாமல் கும்பிக்கச் செய்து, இந்திரியம் மனம் புத்திகளைச் செயித்து, இச்சை, பயம், குரோதம் இவற்றை ஒழித்துச் சகல விஷயங்களிலும் விரக்தராய்ப் பழகும் யோகிகளே ஜீவன் முக்த நிலையை அடைவார்கள்.

இத்தகைய யோகி எப்பொருளை யுணர்ந்து முக்தியடைகிறான் என்னும் அர்ச்சுனனது சங்கைக்கு ஆதிமத்தியாந்தங்களொன்றும் தனக்கின்றி, யாவுந் தானேயாய் யாவர்க்கும் புகலிடமாயுள்ள பகவான் அருளிச்செய்கின்றார்:—

ஏ பார்த்த! பிராம்மணாதி ஜாதியபிமானமுடையோர் செய்யும் ஹோமாதி யக்ஞங்களுக்கும், அறிவுடையோர் செய்யும் குற்றமற்ற தபசுகளுக்கும், ஏழுலகங்களுக்கும் சேருமிடமாயுள்ள (சச்சிதானந்த சொரூபியாகிய) என்னை வேதங்களெல்லாம் சொல்லி முடித்தபடியே உள்ளவாறு அறிந்தவர் மீண்டும் ஜனியார்.

[சுரோத்திரம் முதலிய பஞ்சேந்திரியங்களை விஷயங்களில் பிரவேசியா வண்ணம் தடுத்தல், மனதை யுண்முகப்படுத்தி அதன் சலனத்தை அடக்குவதாலும் இச்சையை ஒழிப்பதாலும் கைகூடுவதாகும். இரண்டு புருவங்களின் மையம் என்பது இலலாட மையம் என்ற ஸ்தானம். அதுவே சுழுனை அல்லது சுழிமுனை என்பது. அங்குதான் ஆன்மா சாக்கிராவஸ்தைப்போது இருக்குமிடம். கண்களைப் பாதி மூடி இரண்டு கண்களின் பார்வையையும்

ஒரே இடத்தில்—நாசி நுனியில்—நாட்டினால், நாட்டம் புருவ மையத்தில் சேரும்.]

ஆன்மா மனதோடு சம்பந்தப்படின் மனதின் இரஜோ தமோ குணங்களால் சலனமடைகிறது. ஆன்மா லலாட மையத்தில் தனித்து நிற்பதே இங்கு வேண்டிய விஷயம்; கண்கள் முழுமையும் மூடிக்கொண்டால் கேவலம் (நித்திரை) உண்டாகும். முழுமையும் திறந்துகொண்டால் சகலம் அதாவது பகிர்விஷயங்கள் தோன்றும். சகல கேவலங்கள் யோகாப்பியாசத்திற்கு விரோதிகள். சகல கேவலங்கள் தாக்காத இடமே நாம் அடைய வேண்டிய இடமாகும். ஏககாலத்தில் மனதை ஒடுக்கிப் புருவ மைய ஸ்தானத்தில் நிலைத்து நிற்கக்கூடியவர்களுக்கு இரு விழிகளின் பார்வையையும் ஒரு இடத்தில் நாட்டுதல் முதலிய தொழில் வேண்டுவதின்றும். ஆனால் அது எல்லாருக்கும் சாத்தியமான காரியமல்ல அதனாலே இந்த அப்பியாசம் விதிக்கப்பட்டது.

அபானன் பிராணன் என்ற இரண்டு வாயுக்களில் அபானன் அதோமுக (கீழ்நோக்கி) யாகவும், பிராணன் ஊர்த்துவமுக (மேல்நோக்கி) மாகவும் செல்வன. கும்பகத்தால் இவற்றை நிறுத்தல். மனமடங்குவதற்காகவே. வாயுவடங்கிடின் மனமடங்கும் என்பது ஒருவழி ஆனால் வாயு மறுபடி கிளம்பின் மனமும் அலையத்தொடங்கும்; மன ஒடுக்கமே வேண்டுவது. ஆதலின் நேரே மனதை ஒடுக்குவதே உத்தம மார்க்கம் என்பது மேலோர்க் கருத்து.]

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# 6-வது * யோக அத்தியாயம்

(ஐந்தாமத்தியாயத்தி னிறுதியில் கூறப்பட்ட யோகத்தைப்பற்றி இந்த ஆறும் அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்படுகிறது.)

முன் அத்தியாயத்தில் பகவான் சர்வ கர்மங்களின் தியாகமே யோகம் என்று அருளினர். இதனுல் சர்வ கர்மங்களும் விடற்பாலன வென்ருகிறது. ஆகவே சந்நியாசத்தினும் யோகத்தினும் கர்மம் மிக்க கீழானதாகிற தென்று அர்ச்சுனனுக்குண்டாகும் சங்கையைப்பற்றி, அவனை யுத்தரூபமான கர்மத்திற் பிரவிர்த்திப்பித்தற் பொருட்டுப் பகவான் மீண்டும் அக்கர்ம யோகத்தின் சிறப்பைக் கூறியருள்கின்ருர்:—

ஏ பார்த்த! தான் செய்யும் கர்மங்களின் பயனை இச்சியாமல் செய்யவேண்டிய நித்தியகர்மங்களைச் செய்கிறவன் சந்நியாசியும் யோகியுமாவான்.

தம்மிடத்துப் பொருந்தின சங்கற்பங்களனைத்தும் தியாகம் செய்யாதோர் யோகிகளாகமாட்டார்கள். பல இச்சையோடு சர்வ கர்மங்களின் தியாகமே சரியான சந்நியாசமும் யோகமுமாகும்.

நிஷ்காம கர்மம் செய்வோர் யாகாதிகளையும் நித்திய கர்மங்களையும் விட்டவரல்லரேனும், கர்மபலனைத் தியாகம் செய்தவர்களாதலின் சந்நியாசிகளும் யோகிகளுமாவர் சந்நியாசம் என்பது சகல இச்சைகளையும் தியாகம் செய்தல். யோகமென்பது சித்தத்தின் கண்ணுள்ள விக்ஷேபத்தை ஒழித்தல். நிஷ்காம கர்மம் செய்வோனிடம்

* வடநூலில் 'அத்தியாத்ம யோகம்' என்று பெயர்.

கர்மபலத் தியாகமும், கிடையாதவற்றில் இச்சையில்லாத தால் சுத்தத்தில் விசேஷபமின்மையும் உளவாமாதலின் அவன் சந்நியாசியும் யோகியுமாவான்.

[இச்சையற்ற விடத்தில் யோகம் சுலபமாய்ச் சித்திக் கும்—ஏன்? ஞானமே சித்திக்கும். மனம் இச்சாசொரூ பம். இச்சையற்றால் மனம் ஒடுங்கும். உலக சம்பந்தமான இச்சை எப்போதும் நாமரூபத்திலே நாட்ட முடையது. அதனால் இச்சை ஒழியின் நாமரூப நாட்டமும் மனதில் தரியாது. நிஷ்காம கருமம் செய்பவன் இச்சையற்றவனு கவே இருக்க வேண்டும்; ஆதலின் அவனிடம் சந்நியாசம் யோகம் இவற்றின் குணம் உண்டு என்பது கருத்து.]

பகவான் கர்மயோகமே சிரேஷ்டமானதென்று உப தேசித்தாலும், சுருதியும் ஒருவன் ஜீவியகாலம் முழுமை யும் கர்மயோகம் செய்யத்தக்கது என்று கூறியிருப்பதா லும், யாவருமே (யோகசாதனை கைவந்த அதிகாரிகூட) ஜீவிய பரியந்தம் கருமயோகம் செய்யவேண்டுமோ என்று அர்ச்சுனனுக்கெழும் சங்கையை ஒழிக்கப் பகவான் அக்கர்ம யோகத்தின் கால அளவைப் பற்றிக் கூறியருள் கின்றார்:—

ஏ பார்த்த! யோகசாதனம் கைவர இச்சையுடையவ னுக்கு நிஷ்காமகருமம் சாதனமாகும். அச்சாதனத்தால் சித்தசுத்திபெற்று யோகத்தை அடைந்தபின் (யோகத்தில் ஆரூடனாயின்) அவன் சகல கர்மங்களையும் தியாகம் செய்ய வேண்டுமேயன்றி, பின்னும் கர்மத்தில் ஈடுபடுதல் உசித மன்றாம். யோகபூமி கைவந்தபின் கர்மங்கள் விக்கினங்க ளாகும்.

[சித்தசுத்தி வாயிலாக யோகம் கைவருமட்டுமே நிஷ் காமகருமம் அதற்குச் சாதனமாக வேண்டுவதாகும். இச்

சையற்று மனோலயம் வாய்ந்து யோகம் கைவந்தபின் சகல கர்மபரித்தியாகம் செய்துவிட்டு, ஞான நிஷ்டைகூடமுயல வேண்டுமாதலின், பின்னும் கர்மம் செய்துகொண்டிருப்பது ஞான நிஷ்டைக்கு இடையூறாகும் என்பது கருத்து. நிஷ்காம கர்மம் சித்த சுத்தியை யளிப்பதற்காகவே வேண்டப்படுவது. மற்றபடி சாதாரண கர்மங்கள் அஞ்ஞானத்தையொழிக்கா. சித்தசுத்திபெற்றுத் தன்னை யறிந்தாலன்றி எவ்வளவு காலம் கர்மம் செய்யினும் ஞானமுதியாது.

"பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள்
பகைசெயா துறவாக்கும்
துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச்
சுடுகின்ற நெருப்பாமே."

"மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன்
வருடநூ றழுதாலும்
நினைத்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த
நின்மல வான்மாவும்
அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத்தன்
னறிவினாற் காணுமல்
கனத்த கர்மங்க ளாறுகஞ் செய்யினுங்
காணுமோ காணுதோ." (கைவல்லிய நவநீதம்)

(ஆன்மாவைச் சம்சாரத்தினின்றும் கரையேற்றுவதைப்பற்றிப் பகவான் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! இவ்வாறு யோகத்தின்கண் ஆரூடனானவன் தனதான்மாவை விவேகத்தோடுகூடிய மனதால் சம்சாரத்தில் மூழ்காவண்ணம் பாதுகாக்கவேண்டும். தனதான்மாவல்லாமல் தனக்கு மேன்மை செய்யத்தக்கவர் வேறு யாருமில்லை. ஆன்மாவல்லாமல் தனக்குக் கீழ்மை செய்யத்தக்கவரும் யாருமில்லை. தனதான்மாவே தனக்குச் சத்துருவும தனதான்மாவே தனக்கு மித்துருவுமாகும்.

(விவேகத்தால் மனதை வசப்படுத்தி சம்சார பந்தத்தில் யான் எனதென்ற அபிமானங்கொள்ளாது தடுக்கவேண்டுமென்பதாம்.)

(எவ்வாறான ஆன்மா மித்துரு எவ்வாறான ஆன்மா சத்துருவென்று அர்ச்சுனன் கேட்ட சங்கைக்குப் பகவான் அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்தா! இப்பிறப்பிறப்பாகிய சாகரத்தைக் கடக்கும் வண்ணம் விவேகத்தோடுகூடிய மனதால் தன் தேகேந்திரியாதிரூபமான கூட்டத்தைத் தன் வசப்படுத்துபவன் எவனோ அவன் தனக்குத்தானே மித்துருவாகிறான். அப்படிக்கின்றி மனம்போன போக்கில் விட்டுவிடுவோன் தனக்குத்தானே சத்துருவாகிறான்.

(குருமுகமாக) சாத்திர ஆராய்ச்சி செய்து சாத்திரங்களாலறியத்தக்க பலனை யபரோக்ஷமாயறிந்து, இந்திரியங்களைத் தன் வயப்படுத்தி விஷயாதிகளால் கலங்காத சித்தமுடையவனாய் ஓட்டையும் பொன்னையும் சமதிருஷ்டியாய்ப் பார்க்கக்கூடிய யோகியே இச்சம்சாரத்தின்கண் யாவரும் நடிக்கும் மாயா நடனத்தில் சிக்காமல் தான் சாக்ஷிமாத்திரமாய் அதைப் பார்த்துக்கொண்டு சலனமற்றவனாகவே யிருப்பான்.

ஏ அர்ச்சுனா! பிரதிபலன் கருதாமலே தனக்கு உபகாரம் செய்வோன், மிக்க அன்பான சினேகன், தனக்குத் தீமை செய்வோன், தன்னை யலட்சியம் செய்வோன், தனக்குச் சினேகனுமல்லாமல், பகைஞனுமல்லாமல் மத்தியஸ்தனாயிருப்போன், தன் விரோதி, தன் பந்து, அன்னியன், ஈசுவரபக்தியுடைய சாதுவாகிய புண்ணியபுருடன், மகாபாவி ஆகிய யாவரிடத்தும் சமசித்தனாயிருப்பவனே யோகி எனப்படுவான்.

மேலான இந்த யோகத்தை எவ்வாறு முயல்வதென் பதைப் பற்றிக் கூறுகிறோம் கேட்பாயாக.

இந்த யோகத்தைச் செய்ய முயல்வோன் ஆசையை யொழித்து, ஒருவரிடம் சென்று தனக்கொன்று வேண்டு மென்று யாசிக்காமல், யோக சித்திக்கென்று நூல்களில் கூறப்பட்ட மலைக்குகை முதலிய ஏகாந்த ஸ்தலத்தை யடைந்து, சுத்தமாயுள்ள ஒரு ஸ்தானத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

அந்த இடம் அதிக உயரமாகவாவது தாழ்வாகவாவ திராவண்ணம் சமமாக தர்ப்பை பரப்பி அதன்மேல் மான் றோல் விரித்து அதன்மேல் மிருதுவான வஸ்திரம் விரிக்க வேண்டும். அப்புறுடன் அத்தகைய ஆசனத்திலமர்ந்து இந்திரிய நிக்கிரகம் செய்து மனதை யொடுக்கி, அந்தக் கரண சுத்தியின் பொருட்டுச் சமாதியப்பியாசம் செய்ய வேண்டும்.

(யோகாப்பியாசத்தின் பொருட்டு இதுகாறும் வாகி யாசனம் முதலியவற்றைக் கூறி இனி அந்தர் முகத்தில் செய்யவேண்டிய விஷயங்களைப்பற்றிக் கூறத்தொடங்கி, தேகத்தை எவ்வாறு நிறுத்தல் வேண்டும் என்பதைக் கூறி யருள்கின்றார்.)

ஏ அர்ச்சுனு! அவ்வாறு ஆசனத்தில் அமர்ந்த புரு டன் சிரசும், கழுத்தும், தேகமும் நேராகத் தண்டம்போ லிருக்கும் வண்ணம் நேரே அசையாத நிலையில் இருந்து நாசி நுனியின்மேல் தன் கண்களின் பார்வையை நிறுத் திக் கடல்போலலையும் சஞ்சல ரூபமான ஆசையும், தேக பயமும் தன்னை விட்டு நீங்கச்செய்து அலையு மனத்தை யகத் தடக்கிப் பரமேசுரனுகிய என்னிடத்தில் சித்தம் நிலைத் திருக்கச் செய்வதுவே யோகமாம்.

மேற்கூறிய நியமப்பிரகாரம் நிரந்தரமும் சமாதி யோகம் பயில்வோர் முடிவில் சித்த நிரோதமுடையவராய் நிருவாண சொரூபனாகிய என்னையே யடைவார்கள்.

(இனிப் பகவான் அந்த யோகம் பயில்வோனது ஆகார நியமம் முதலியவற்றைப் பற்றிக் கூறி யருள் கின்றார்.)

ஏ அர்ச்சுன! அதிக ஆஹாரம் புசிப்போனுக்கும் ஆஹாரத்தை அடியோடு நிக்கிரஹம் செய்வோனுக்கும் இந்த யோகம் கைகூடாது. அவ்வாறே நித்திரை, தொழில் முதலியவற்றிலும் அதாவது அதிகமுமில்லாது மிகக் குறை வாகவுமல்லாது மிதமான உணவும், அவ்வாறே மிதமான நித்திரையும், மிதமான தொழில் முதலியவையும் உடையவ னுக்கே இந்த யோகம் கைகூடும்.

[இந்த யோகம் பயில்வோர் தமது வயிற்றின் அரைப் பாகத்தை ஆகாரத்தால் நிரப்பவேண்டும். அதாவது அரை வயிறு ஆகாரமே புசித்தல்வேண்டும். மீதி அரை வயிற்றில் கால் வயிற்றை ஜலத்தால் நிரப்பி மற்ற கால் வயிற்றைக் காலியாகவே விட்டுவிட வேண்டும் என்பது யோகநூல் விதியாகும். நித்திரை அதிகமாயின் தமோகுண மதிகரித்து யோகத்தைக் கெடுத்துவிடும். நித்திரை யதிகங் குறைந் தால் யோகம் பயிலுங் காலத்தில் உறக்க முண்டாகி யோகங்கெடும். அவ்வாறே அதிகத் தொழிலால் தேக சிரம முண்டாகி ஆயாசம் தோன்றி யோகங்கெடும். தேகத்திற்குக் கமனுதி ரூபத்தொழில் அடியோடின்றேல் சோம்பலும், ஆரோக்கியத் தாழ்வுமுண்டாகி யோகங் கெடும். ஆதலின் ஊண், துயில், தொழில் யாவும் மிதமாக வேண்டும் என்று விதிக்கப்பட்டது.]

(உணவாதிகளின் அளவைப்பற்றிக் கூறியபின் யோகம் பயிலத்தக்கதாக காலங்கள் முதலியவற்றைப்பற்றிப் பகவான் அருளிச் செய்கின்றார்.)

"ஏ பார்த்த! இந்த யோகி அதிக அன்னம் புசித்துப் பொருமுதலுடையவனாக விருக்கும்போது, ஆயாசமுள்ளவனாக விருக்கும்போதும், மனதில் வியாகூலம் கலக்கம் உடையவனாக விருக்கும்போதும் யோகாப்பியாசம் செய்யலாகாது. அப்படியே மிகுந்த குளிர் காலத்தும், மிகுந்த உஷ்ண காலத்தும், காற்று மிகுதியாயிருக்குங் காலத்தும் யோகம் செய்யலாகாது.

ஹே அர்ச்சுன! மிதமான ஆகாரம், நித்திரை தொழில் உடையவனுக்கே இந்த யோகம் கைகூடும்.

அர்சுனன்:—ஏ பகவான்! இவ்வாறு முயன்று சம்பாதித்த யோகத்தால் அவன் அடையத்தக்க பலன் யாது?

பகவான்:—இந்தச் சமாதி யோகத்தை மேற்கூறியபடி அநுஷ்டிக்கின்ற யோகியின் சித்தமானது, காற்றில்லாத விடத்திலுள்ள தீபம் எவ்வாறு சற்றும் சலிக்காது சித்திர தீபம்போல் நிற்கின்றதோ அவ்வாறே சலனமற்று நிற்கும். இவ்வாறு எப்போது அவன் சித்தம் சொப்பிரகாச சொரூபமான ஆன்மாவின் கண் இலயப்பட்டு விடுகிறதோ, அப்போது அவன் ஆன்ம சாட்சாத்காரத்தால் உண்டாகும் பரமானந்தத்தை யடையா நிற்பான்.

எந்தச் சுகமானது இவ்விந்திரியங்களுக்கு விஷயமாகாமல் கேவலம் சுத்தபுத்தியால் கவருவதோ, எது காலதேச வஸ்து பரிச்சேத ரகிதமான பிரம்மரூப சுகமாகுமோ, எதை யடைந்தோர் அதினின்றும் அக்கியமாகார்களோ,

னதை யடைந்தோர் அதற்கு ஒப்பானதும் உயர்வானதும் உண்டென்று கருதார்களோ, எந்தச் சுகமானது சத்துவப் பிரதானமான புத்திக்கே கவரும்படியான விஷயமாய் நிற்குமோ அதன் கண்ணே அந்த யோகி இலயித்திருப்பன்.

இத்தகைய நிலையில் நிற்கும் யோகிகள், கொடிய பகைவர் தம்மை வேல் முதலிய ஆயுதங்களால் துன்புறுத்தினும் தீக்ஷணியமான நஞ்சையுடைய கொடிய நாகம் தீண்டினும் எதற்கும் அஞ்சமாட்டார்கள். சர்வ விருத்திகளுமொழிந்த அச்சமாதியின் கண்ணே அவர்களடைந்துள்ள நிலை நிரதிசயானந்தமே யாகும். அந்த நிலையில் அவர்களுக்கு யாவும் பிரம்மானந்தமயமே.

அத்தகைய யோகம் எவ்வித உபாயத்தால் அப்பியசிக்கத்தக்கது? என்று அர்ச்சுனன் வினவ, நீலமேக சொரூபியாகிய கிருஷ்ண பகவான் அவ்வுபாயத்தை யருளிச் செய்கின்றார்:—

ஏ அர்ச்சுன! சங்கற்பத்தினால் எழாநின்ற சர்வ காமங்களையும் அவற்றின் வாசனைகளோடு கூட பரித்தியாகம் செய்து, இந்திரியங்களை விஷயங்களில் செல்லவொட்டாது தடுத்து, மனதை அப்புறம் போகவொட்டாமல் பிரத்தியகான்மாவிடத்தில் நிலைக்கச் செய்வாய்.

நேத்திராதி இந்திரிய வாயிலாய்ப் புறம்போந்து நாமரூப விஷயங்களில் சஞ்சரிக்கும் மனதை உபாயமாய் அந்தர்முகத்திலிழுத்து, கேவலமாகிய நித்திரை யடையாதபடி பிரத்யகாத்மாவின்கண் நிலைக்கச்செய்து சித்தம் சற்றும் சலிக்காது வைக்கும் அப்பியாசத்தையே செய்வாயாக.

[மனம் இந்திரியவாயிலாகப் புறம்போந்து நாமரூபங்களாகிய விஷயங்களைப்பற்றுவதும், நாமரூபமான அனுன்ம

யதார்த்தங்களைச் சிந்திப்பதுமாகிய இவை சகலம் என்னப் படும். மனதைச் சகலாவஸ்தையடையாதபடி தடுத்து இலயப்படுத்தும்போது தன் நிலை மறந்து சுழுத்தி மூடிக்கொள்ளுதல் கேவலம் இந்தச் சகல கேவலங்களிரண்டும் ஞான யோகம் கைகூடற்கு விக்கினங்களாமாதலின் சகல கேவலங்கள் தாக்காதபடி மனம் பிரத்யகான்மாவில் இலயிக்கச் செய்யவேண்டும். அப்போதுதான் ஆன்மதரிசனம்கிட்டும். இச்சகல கேவலங்களையே முறையே பகல் இரவென்றும், நினைப்பு மறப்பென்றும் நூல்கள் கூறும். ஆதலின் சகல கேவலங்களற்ற நிலையை, நினைப்பை மறப்பற்ற விடமென்றும், இராப்பகலற்ற விடமென்றும் கூறுப.

இவ்வாறு மனதை இந்திரியங்களின் வழிச்செல்லாது தடுத்துச் சகல கேவலங்களற்ற நிலையில் நிறுத்தினால்தான் அருள் கிட்டும் என்பதை ஸ்ரீ அருணகிரிநாதர் பின்வருமாறு அருளியிருக்கிறார்:—

"அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்த வன்பாற்
குராப்புனை தண்டையங் காலொடாழல் வேண்டுங் கொடிய வைவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பற வேண்டுமென்று
லிராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளி தல்லவே.

(கந்தரலங்காரம்)

"மறவா நினையா மௌனத் திருக்கிற்
பிறவா ரிறவார் பினை. (ஔவைக்குறள்)

இந்த நிலையில் சித்தம் சற்றும் சலனமின்றி சாக்கிரத்திலமட்டும் அதாவது தன்னிலையை மறவாதுமட்டு மிருக்க வேண்டும். சலித்தலாவது சிந்தித்தல்—சமாதி நிலையின் சுகத்தை எதிரிட்டு நோக்குதல் இப்போது நாம் எவ்வளவு காலமாகச் சமாதி நிலையிலிருக்கிறோம் என்று நினைத்தல் முதலியவைகளாம்—இத் தோஷங்களால் சகலம் தோன்றி

நிஷ்டைகெடும்—சகலம் உண்டாகாளிடினும், மனதை யிரண்டிலும் செல்லவொட்டாது தடுத்தும் சித்தம் அந் நிலையை எதிரிட்டுணர்ந்துகொண்டிருக்கின், சித்தம் நடுநிலையில் நிற்குமன்றி ஆன்ம சாக்ஷாத்கார மடையாது. ஆதலின் சித்தம் சலனமற்று நிற்றல்வேண்டும். சித்தம் இவ்வாறு நிற்கும் நிலையே தானற்ற நிலை.

"நீயற்ற வந்நிலையே நிட்டையநி னீயிலையே
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா." (தாயுமானவர்)

(பகவான் இத்தகைய யோகியடையும் ஆனந்தத்தைப் பற்றிக் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! சகல கேவலங்களற்ற தெளிந்த சித்தத்தையுடையவனும் தன்னிலையன்றி வேறு கற்பிதமற்றவனும் இத்தேகத்திலிருந்தே இதற்கு விலக்ஷணமான பிரமத்தை யடைந்து ஆரூடனாய் நிற்கும் சீவன் முக்தன் நிரதிசயானந்தத்தை யடைவன்.

இந்த யோகத்தில் எப்போதும் நிலைத்து நிற்பவன் என்று மழியாத இன்பத்தினை அநாயாசமாகவே யநுபவியா நிற்பன். அத்தகையோன் சர்வ பூதங்களையும் தன் ஆன்மாவினிடத்தும், சர்வ பூதங்களிலும் தன் ஆன்மாவையும் காண்பான். (அதாவது தானாகிய ஆன்மா யாவற்றிலும் வியாபித்திருப்பதாகவும், சகலமும் ஆன்மாவிலிருப்பதாகவும் அபேதமாய்க் காண்பான். யாவும் தானாகவும் தன்னையன்றி இரண்டாவ தொன்றில்லை யென்றும் காண்பான்.)

முன்பு தேவர்களின் பகைவர்களாகிய அசுரர்களைச் சங்கரித்த கிரீடி! எந்த யோகி புருஷன் சர்வ வுலகங்களி

லும் பரமேசுரனை என்னையும், என்னில் எல்லா வுலகங் களையும் அபேதமாகக் காண்கின்றானோ அவனுக்கு நான் அன்னியமன்று, அவனும் எனக்கன்னியமன்று.

எந்த யோகி புருடன் சர்வ பூதங்களிலுமுள்ள தத்பத இலக்ஷியார்த்தமாகிய என்னைத் துவம்பத இலக்ஷியார்த்த மாகிய தன்னோடு அபேதமென நிச்சயித்து அனுபவிக்கி றானோ, அந்த யோக புருடன் எத்தகைய விவகாரங்களைச் செய்யினும் நான் அவனாகின்றேன் என்று ஐயமற அறிவா யாக. (இது சாமவேதம் சாந்தோக்கிய உபநிடத மகா வாக்கியமாகிய "தத்துவமசி" என்பதன் பொருளாகும்.)

ஏ பார்த்த! எந்த யோக புருடன் அந்நிய உயிர்களின் சுகதுக்கங்களைத் தான் அனுபவிப்பதுபோல் சமமாய்ப் பார்க்கிறானோ அந்த யோகி மேலானவனாவான்.

[இதுவே ஜீவகாருண்யம் என்பதன் பூரண அர்த்தம். எவ்வகைச் சன்மமெடுத்த போதிலும் அததற்கு அததன் ஜீவன்மேல் மிகப் பிரியமே. மனிதன் கழுதையை மிக அல க்ஷியமான பிராணி எனக்கருதுகிறான். உண்மையில் மனி தனுக்குத் தன் உயிர் எவ்வளவு இனிமையாய்த் தோன்று கிறதோ, அதுபோலவே கழுதைக்கும் அதன் உயிர் அவ் வளவு இனிமையாகவே தோன்றும். இது மாயையின் இரகசியங்களிலொன்றாகிய இயற்கையாகும். ஆதலின் எல்லா உயிர்களையும் நம்முயிரெனவே கருதல் வேண்டும் என்பது விதி.

"எவ்வுயிர்த் திரளுமுலகி லென்னுயி
ரெனக்கு ழைந்தாருகி நன்மையாய்
* * * * " என்றும்.

"எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ."

என்றும் தாயுமான சுவாமிகள் கூறியருளினர்.]

(மனதில் சஞ்சல சுபாவத்தால் எல்லா உயிர்களையும் சமமாகப் பார்க்கத் தன்னால் இயலாமையைப்பற்றிப் பார்த்தன் வினவுகிறான்.)

அர்ச்சுனன்:—"ஏ பரந்தாமா! யோக புருஷன் எல்லா உயிர்களையும் சமமாகப் பார்க்கவேண்டுமென வருளினீர். ஆனால் இம்மனமானது மிகச் சஞ்சல சுபாவமுடையதாய்ச் சரீரேந்திரியங்களைக் கலங்கச் செய்து விடுகின்றது. பலம்பொருந்திய இம்மனத்தை க்ஷண நேரமேனும் ஒரு நிலையில் நிறுத்துவது முடியாத காரியமெனத் தோன்றுகிறது. ஏனெனில் இம்மனதை நிறுத்துதல் வாயுவை நிறுத்துதலுக்குச் சமமாகுமெனக் கருதுகிறேன்," என்றான்.

(பார்த்தன் கேட்ட வினாவிற்கு விடையாகப் பகவான் மனோ நிக்கிரகம் செய்ய உபாயங் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! நீ கூறியவாறு மனதை அடக்குவது அரிதேயாயினும் அப்பியாசத்தாலும், வைராக்கியத்தாலும் நிக்கிரகம் செய்யலாகும். இதில் ஐயமில்லை. கரணங்களை வசம்பண்ணினவர் யோகசித்தி பெற்றவராவர்.

ஓர் மதயானையை அங்குசமின்றி அடக்கமுடியாது. அதுபோலவே மனதை யுத்திகளால் வசப்படுத்தவேண்டும். ஞானேந்திர கருமேந்திரியங்களை அடமாய் நிக்ரகம் பண்ணுவதுபோல் மனதைச் செய்யமுடியாது. மனதை அடக்குவதற்குள்ள உபாயங்களில்,

1-வது உபாயம்—அத்தியான்ம வித்தையாம்:—அதாவது நித்தியா நித்திய வஸ்து விவேகத்தால் தேகாதிப் பிரபஞ்சமாகிய காணப்படும் வஸ்துக்கள் யாவும் அநித்தியம். சடம் துக்கம் என்ற நிச்சயம் உதித்தால் அவற்றிலுள்ள

ஆசையொழியும். மனம் இச்சாசொரூபமானதால் இச்சை ஒழிந்தால் விறகற்ற தீப்போல் மனம் மாயும். இதுவே உத்தம மார்க்கமாம்.

2-வது சாது சங்கம்—தத்துவ விசாரத்தை உணரக் கூடாதவர்களுக்கும் அதை மறக்கும் சுபாவமுடையோர்க்கும் சாதுசங்கமே மனநிக்கிரகம் செய்ய உபாயமாம். சாது சங்கத்தால் அடிக்கடி தத்துவ உணர்ச்சியும், சிந்தனையும் உண்டாகும், இவையே வைராக்கியம் எனப் பகவான் கூறியது.

3-வது பிராணனை அடக்கல்—குரு மூலமாய் பிராணயாம அப்பியாசத்தில் திடமுண்டாவதாலும், யுத்தியாலும், பிராண சலனம் அடங்குகிறது. அது அடங்க மனமடங்கும். இதுவே அப்பியாசத்தால் மனவொடுக்கம் பெறுவதாம்.

[முக்கியமாய் இச்சை ஒழியவே மனம் ஒடுங்குதற்குபாயமாகும். அப்போது மனம் தானே ஒடுங்கும். மனம் எழற்கு மூலமாயுள்ளது இச்சையே. இச்சை ஒழிந்தால் உலக வாசனையே ஒழியும். அதோடு நாம ரூப நாட்டம் ஒழியும். அது ஒழியின் ஞானேதயம் உண்டாகும். உலக சம்பந்தமான யாவற்றையும் வெறுத்தாலன்றி மோக்ஷம் கிட்டாது.

"மனநாசமே ஞானத்திற்கு முக்கிய சாதனம். மனமே மாயை, இச்சையே மனதின் சொரூபம். இச்சை ஒழியின் மனம் மாளும். ஆதலின் இச்சையே மாயையின் சொரூபம்; இச்சா நாசமே மோக்ஷம்," என்று வசிஷ்ட முனிவர் ஸ்ரீ இராமருக்குக் கூறினர்.

"அறிபவற் றுரைசை யறிவது தானே
யவித்தையு மனமுமாண் டதுவாம்
பொறிபயி லாசை துன்பமா நிராசை
புகலரு முத்தியா மின்பம்
பிறிவறு தனது முயற்சியா லுண்டாம்
பேதைய ருண்டெனு மவித்தை
செறிதரு பொய்யாய் நாமமாத் திரமாய்ச்
சித்தெனத் தேர்ந்திடி லிலதாம்.
பிறப்பெனு மாயைக் கலையதா யெங்கும்
பிரிவரு பெரும்பொரு டோன்றி
விறப்புறு மாயைக் கிச்சையே வடிவா
மிதனிடை நாசமே வீடு
சிறப்பில்சங் கற்பஞ் சிதைந்திடி லிதுதான்
றேய்ந்திடுஞ் சித்தெனுங் கதிரோன்
புறப்படி லிதய விசும்பில்வா தனையாம்
பொங்கிருள் போமெனப் புகல."

(ஞானவாசிட்டம்-உற்பத்திப் பிரகடனம்)

அவரவர்கள் தரத்திற்குத்தக்கபடி மேலே கூறப்பட்ட உபாயங்களில் ஒன்றால் மனதை அடக்கவேண்டுமேயன்றி முரட்டுத்தனமான அடத்தால் மனதை அடக்கமுடியாது. "மனதை மனதாலேயே வெல்லவேண்டும். மாயையை மாயையாலேயே வெல்லவேண்டும்," என்றே ஆன்றோர் கூறியுள்ளனர். அதாவது, மனோ நிக்ரகம் என்றது கண்டு மனதின் ரஜோ தமோ குணங்களின் ஒழிவேயாகும். இதுதான் முதலில் வரவேண்டும். சத்துவ குணமாகிய மனதால் இரஜோ தமோ குணங்களை வெல்லவேண்டும். பிறகு சமாதி அனுபவத்தில் அச் சத்துவகுண மாயையும் விலீனமாகிவிடும்.

"கருதி மலத்தான் மலமறுக்குங் காருவென்ன மாயைதனைப்
பெருமா யையினுற் செறல்வேண்டும்........." (வாசிட்டம்)

"இம்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யும்
அம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே."

(கைவல்லியம்)

(யோக முயற்சியில் யோகசித்தி யடையாது இடையில் மரித்தவன் என்ன பலனை யடைவான் என்று அர்ச்சுனன் வினவுகிறான்.)

"ஏ பரந்தாம! ஒருவன் சிரத்தையோடு யோகாப்பியாசம் செய்துகொண்டிருந்து மரணகாலத்தில் அதை மறந்து இறப்பானாயின் அவன் எக்கதி யடைவன்? ஞானசித்தியின் பொருட்டு கர்மோபாசனைகளைக் கைவிட்டவன் மோகமுடையவனாயின் யோகசித்தி யடைவான். அத்தகையவன் மரணமாயின் எக்கதி யடைவான்?

அடியேன் மனத்லுதித்த இந்த ஐயத்தை நீக்கவல்லோர் தங்களையன்றிவேறொருவருமில்லை" என்ற பார்த்தனை நோக்கி பரமேசுரராகிய பகவான் பின்வருமாறு அருளிச் செய்கின்றார்:—

ஏ கிரீடி! பொய்யான சம்சாரபந்தங்களில் சம்பந்தப் படாத அறிவுடைய யோகப்பிரஷ்டர் இகலோகத்தும் பரலோகத்தும் விநாசமடைவதில்லை. ஏனெனில் அவர்கள் எப்போதும் மெய்யான பிரமவிசாரத்தை விட்டவர்களல்ல.

யோகம் முடிவுபெறாது இடையே மடிந்தவன், அசுவமேதாதி பலயாகங்களைச் செய்தவன் அடையத்தக்க பிரம்ம உலகத்தை யடைந்து அதில் துன்பமின்றி பிரம்மன் ஆயுள் பரியந்தம் நல்ல போகங்களை யனுபவித்துப் பிறகு செல்வமும், சுத்தமும், குணமுமுடைய மகா சக்கிரவர்த்தி (ஜனக

ஞரியர் போன்றவர்கள்) வீட்டில் ஜன்மத்தையடைவன், அவன் பூர்வம் அனுபவித்த போகவாசனையிருத்தலின் அவ்வாறு ஜன்ம மடைவன். இகபர போகங்களின் இச்சையற்ற வைராக்கிய முடையவனான யோகப்பிரஷ்டன், விஷயபோக வாசனை யில்லாததால், புண்ணியவான்கள் அடையத்தக்க உலகத்தை யடைந்து, பிரம்ம வித்தையும் யோகாப்பியாசமுடைய தரித்திரராகிய பிராம்மணர் குலத்தில் பிறந்து, அதில் அடையத்தக்கன யாவுமடைந்து, பின்னும் முன் ஜன்மத்தில் அநுஷ்டித்து மரண காலத்தில் மறந்த யோகத்தை வருத்தமில்லாமலே அடைவான்.

இவர்களிருவரில் முதல் கூறப்பட்ட யோகப்பிரஷ்டனைவிட இரண்டாவது யோகப்பிரஷ்டன் விசேஷமானவன். ஏனெனில் முதல் யோகப்பிரஷ்டன் செல்வந்தன்குடியிற் பிறப்பதால் மனதைக் கலக்கத்தக்க பலவித நிமித்தங்கள் அவனுக்குப் பிராப்தமாகின்றன. தரித்திரன் குடும்பத்திற் சனித்த இரண்டாவதுயோகப்பிரஷ்டனுக்கு இயல்பாகவே அத்தகைய நிமித்தங்களில்லை. ஆயினும் இருவருக்கும் முயற்சி யில்லாமலே முன் சன்மத்தின் முடிவில் மறந்த யோகாப்பியாசம் தானே வந்தெய்தும்—பூர்வ அப்பியாசமே மறுபடி அவர்களை யதில் முயல்விக்கும். பூர்வ ஜன்ம ஞானவாசனை அற்பகாலாப்பியாசமா யுள்ளதேனும், இவர்களைப் போகங்களில் விருப்பங் கொள்ளாவண்ணம், தடுத்துத் தன் வசம் செய்துகொள்ளும்.

ஏ பார்த்த! விஷயங்களிற் செல்லும் மனமானது நிலைத்து நிற்கப் பெறுதவனாயினும், ஓடு மனதை யோடாது தடுக்க அதிகப் பிரயத்தனஞ்செய்யும் யோகியானவன் பல ஜன்மங்கள் சிரவணாதிகளைச் செய்தாயினும் (அச்சன்மங்களில் செய்யும் புண்ணிய கருமத்தின் பலத்தால் முடிவான

ஜன்மத்தில்) பிரம்மான்ம ஐக்கியமாகிய முத்தியை யடைவான்.

(அர்ச்சுனனுக்கு முன்சொன்ன யோகத்தில் சிரத்தை யுண்டாகும்படி பகவான் பின்வருமாறு அருள்கின்றார்.)

ஏ பார்த்த! சாந்திராயண முதலிய எல்லாத் தவங்களையும் செய்தவனைக்காட்டிலும், சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தோனைக் காட்டிலும், அநுபவியாது ஒழியாத யாகாதிகருமங்கள் அனைத்தும் செய்தவனைக் காட்டிலும், மனோ நிக்கிரகம் செய்து, தத்துவ ஞானம்பெற்று, விஷய வாசனையற்ற யோகியே மேலானவன். நீ இப்படிப்பட்ட யோகத்தையே அடையக்கடவாய்.

(இப்போது பகவான் எல்லா யோகத்திலும் ஞான யோகமே சிறந்ததெனக் கூறியருள்கின்றார்.) ஏ பார்த்த! இருவினைகளை யளிக்கும் கருமங்களனைத்தையும் விலக்கும் அடயோகி முதலிய எல்லா யோகிகளினும், மனதையும் அன்பையும் சதா என்னிடத்தே பதியவைக்கும் ஞான யோகி யொருவனே எனக்குப் பிரியமானவன்.

["அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்றபடி, ஈசுவரன் அருள்பெற்றாலன்றி மோக்ஷம் சித்திக்காது. அவனிடத்து அத்தியந்த பக்தி வைத்தலே அவனருள் பெறுதற்கு மார்க்கமாம். ஆதலின் பக்தியின்றி எத்தகைய சாதனங்களைச் செய்யினும் பயனில்லை. அன்பே சிவமாதலின் நாம் அன்புருவ மடைந்தாலன்றி அவனை யடைதலும் அவனில் கலத்தலும் இல்லையாம். பனிக்கட்டி கடலில் மிதக்கினும் அது கடலுக்கு வேறாகவே பிரிக்கப்படக்கூடியதாக விருக்கிறது. ஆனால் அது கரைந்து கடல்போல் ஜல உருவ மடைந்தால் உடனே பிரிக்கக்கூடாதபடி கடலோடுகலந்து

விடுகிறது. அதுபோல் நாம் அன்புருவ மடைந்தாலன்றி அன்புருவமான சிவத்தோடு கலக்கமாட்டோம்.

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தாரு மறிகிலா
ரன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே." (திருமந்திரம்)

இவற்றால் மோக்ஷப்பிரயத்தனம் செய்வோர்க்கு பக்தி இன்றியமையாததென்று நன்குணரலாம்.

(இந்த ஆறத்தியாயங்களும் பிரதமஷட்சொரூப கரும காண்டமெனவும் கூறப்படும். இவற்றில் துவம்பதார்த்தம் நிரூபணம் செய்யப்பட்டது. இனி "மனதையும் அன்பையும் என்னிடம் வைத்தவன்" என்ற வாக்கியங்களால் குறிப்பிடப்பட்ட பக்தியோகத்தையும் அதற்கு விஷயமான தத்பதார்த்தத்தையும் நிரூபணம் செய்ய, இன்னும் ஆறு அத்தியாயங்களால் உபாசனை காண்டம் அருளப்படும்.

ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# 7-வது * மாயாரூப அத்தியாயம்

சர்வ கருமங்களின் சந்நியாச ரூபமான சாதனம் பிரதானமாயுள்ள முதல் ஷட்கத்தால் (6-வது அத்தியாயங்களால்) ஸ்ரீ பகவான் யோகத்தோடுகூட துவம்பத இலட்சிய ரூபமான ஞேய வஸ்துவைத் திருவாய் மலர்ந்தருளினர். இப்போது பிரம்மத்தின் பிரதிசாதனமே முக்கியமாகவுடைய இம்மத்திய ஷட்கத்தால் தத்பதரூபமான பரமான்மாவைக் கூறியருள்கின்றார். பகவத் சேவையைப் பற்றி கூறுவதற்காக இந்த ஏழாம் அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகிறது. இங்கு பகவானை எத்தன்மைய சொரூபமாக சேவிக்க வேண்டும். பகவானது சொரூபத்தில் மனமானது எவ்வாறு நிலைபெறும் என்ற கேள்விகளை அர்ச்சுனன் கேட்க வேண்டும். அவன் கேட்காதிருந்தும் பரம கிருபா மூர்த்தியாகிய பகவானே அக்கேள்விகளுக்கு விடையருள்கின்றார்.

இலக்ஷ்மீ காந்தனுகிய ஸ்ரீ பரந்தாமன் அர்ச்சுனனை நோக்கிக் கூறுகிறார்:—"ஏ பார்த்த! மோக்ஷமடையும் பொருட்டு அன்போடு என்னையே சரண்புகுவதாகிய யோகத்தைப் பயிலும் யோகியானவன் ஐயமின்றி என் சொரூபத்தை எவ்வாறு அறிவானே அதைக் கூறுதும் கேட்பாயாக.

(அந்த பரமேஸ்வரனது சொரூப ஞானத்தில் அதிகாரிகளை யபிமுகமாக்கும் பொருட்டு அந்த ஞானத்தின் அருமை பெருமைகளைப் பகவான் புகழ்ந்து கூறுகிறார்.)

---

* வடநூலில் ஞானயோகம் என்று பெயர்.

ஏ அர்ச்சுன! அழியத்தக்க மாயையினால் மறைக்கப் படாத மனத்தினிடை என் சொரூபத்தை உள்ளபடி உண் மையாக அறிந்திருப்பவர்கள் அறியாத பதார்த்தம் ஒன் றுமேயில்லை. ('என் நிஜ சொரூபத்தை யறிந்தவன் யாவற் றையு மறிந்தவன்' என்றபடி.)

இத்தகைய பெருமை வாய்ந்த எனது சொரூப ஞான மானது எனதருளின்றிக் கிட்டுவ தருமை. பல்லாயிரம் மனிதர்களில் ஒருவனே எனது சொரூப ஞானத்தை யடைய மனம் வைத்து முயல்வான். அப்படி முயலும் பல்லாயிரம் பேரில் ஒருவனே என் சொரூபத்தை யுள்ள வாறுணர்வான்.

[விசாரித்துப் பார்க்கும்போது இல்லாமற் போவ தாலும் ஞானோதயத்தில் ஒழிந்துபோவதாலும் மாயை அழி யத்தக்க தென்றார். சித்த சுத்தி வாய்ந்து ஆசை யொழிந்த விடத்து மாயையின் மறைப்பு நீங்குவதால் அத்தகையோர் மனம் மாயையால் மறைக்கப்படாதது என்றார். தேவர் கள் முதலிய பேர் சங்கு சக்கர கதா கட்க கோதண்ட பாணியும் இலக்ஷ்மீ சமேதனுமாகிய பகவானை யறிந்திருக் கின்றார்களெனினும் அது பகவானது உண்மை வடிவமன்றாம். அவரைப் பிரத்தியகான்மாவிற்கு அபின்னமான பிரம்ம சொரூபமாய் உணர்ந்தவர்களே அவரது நிஜசொரூபத்தை யுணர்ந்தவராவர்.]

ஏ பார்த்த! மண், நீர், தீ, வாயு, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் இவ்வெட்டுவிதமான அபரப் பிரகிருதி யினும் வேறாய் உலகின்கணுள்ள அனைத்தையும் தாங்கிக் கொண்டு தேகத்தின் கண்ணும் சிவரூபமாய் நிற்பது என்று மாயையேயாகும். இச் சீவ வடிவ பரப்பிரகிருதியே உலகனைத்தையும் தரித்திருப்பது. இவ்வுலகிலுள்ள சேதன

சேதனங்களனைத்தும் மேற்கண்ட இரண்டு பிரகிருதிகளா லும் உண்டாகின்றவைகளே.

ஏ அர்ச்சுன! பூதங்களனைத்தும் இவ்விரண்டு பிர கிருதிகளின் காரியங்களே யென்பதை யுனதறிவினால் நிச்சயித் துணர்வாயாக. நானே ஜீவ வடிவத்தால் பிர வேசித்து இந்நாமரூபத் தோற்றமாகிய யாவற்றையும் தாங்கி நின்கிறேன். என்னின் வேருக எந்தப் பொருளும் ஒரு பொருளைத் தாரணம் செய்யும் சமர்த்துடையதல்ல. ஆகையால் பிரபஞ்சத்தின் உற்பத்திக்கும் நாசத்திற்கும் நானே காரணன்.

(இப்போது பகவான் பரமேசுவரனை நானே எனது மாய சக்தியால் சிருஷ்டித்து இரக்ஷித்துச் சங்கரிக்கிறே னுதலின், உண்மையில் எனக்கயலாக ஒரு பொருளுமில்லை யென்று அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! யாவற்றிற்கும் காரண பூதமாகவுள்ள என்னையன்றி இப்பிரபஞ்சத்தை தாங்கத்தக்க பொருள் வேறெதுவுமில்லை. பல வர்ணமான அனேக மணிகளி னிடையே ஒரு நூலானது சென்று கோவையான அம் மணிகளைத் தாங்கி நிற்பது போல, பல பேதங்களாகக் காணப்படும் எல்லா வஸ்துக்களிலும் நானே அந்தர்யாமி யாய் நின்று அவையனைத்தையும் தாங்கும் தன்மையை கூறுதும் கேட்பாயாக.

சகல ஜலங்களிலுமுள்ள இரசதன்மாத்திரை வடிவ மதுரம் நானுகின்றேன். சூரிய சந்திரர்களிடத்துள்ள ஒளி நானுகின்றேன். வேதங்களிலுள்ள பிரணவம் நானுகின் றேன். ஆகாயத்திலுள்ள ஒளி நானுகின்றேன். பிருதிவியி லுள்ள காந்தம் நானுகின்றேன். அக்னியிலுள்ள உஷ்ணம் நானுகின்றேன். சர்வ புருடர்களிடத்திலுள்ள ஆண்மை

நானாகின்றேன். சகலப் பிராணிகளிடத்துமுள்ள சீவனும் நானாகின்றேன்.

அறிவாளிகளிடத்துள்ள அறிவாகிய யுக்தி நான். தவசிகளிடத்துள்ள தவம் நான். புகழ்ச்சி பொருந்தினவர்களிடத்துப் புகழ் நான். வீரர்களிடத்துள்ள வலிமை நான். சத்துவம், இராசதம், தாமதம் என்ற மூன்று குண பேதமாய் விளங்கா நின்ற சகல பொருள்களும் பரமேசுரனாகிய என்னிடத்தே தோன்றுகின்றன. அவை பற்றி நிற்பதும் என்னையே. ஆனால், ஏ அர்ச்சுனா! அக் கற்பிதமான யதார்த்தங்களில் நான் தோன்றுவதில்லை. நான் அவற்றில் சாட்சிமாத்திரமாக நிற்பேனேயன்றி அவற்றை ஆதாரமாகக் கொண்டிரேன். இப்போது நான் கூறிய மயங்கத்தக்க முக்குணங்களின் வயப்பட்டு விவேக மிழந்திருக்கின்ற உயிர்களனைத்தும எக்குணங்களையும் கடந்து நிற்கும் பரமேசுரனாகிய என்னை யறியமாட்டா.

(அநாதியாகிய மாயையின் முக்குண வயப்பட்ட உயிர்களனைத்தும் சுதந்தரமின்மையின் முக்குண வடிவமாகிய மாயையை நிவர்த்தி செய்ய சக்தியுடையவனல்லவே என்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான், அந்நிய உபாயங்களால் மாயநிவர்த்தி யுண்டாகாதெனினும், ஈசுரபக்தியால் உண்டாகும் தத்துவ ஞானத்தால் மாயா நிவர்த்தி கூடும் என்று அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! இம் முக்குண சுபாவத்தையுடைய என் மாயையை வெல்வது யார்க்கும் அரிதே. என்னையே எப்போதும் மெய்யன்போடு வழிபடும் மனமுடையோர் மட்டுமே தத்துவ ஞானத்தால் இம்மாயையை நிவர்த்திக்கக்கூடும்.

அர்ச்சுனன் "ஏ பகவன்! உன்னைச் சரணடைந்து பக்தியோடு சிந்திப்பதினாலேயே இம்மாயை வெல்லக்கூடுமெனின், வேறு எவ்வழியாலும் ஒழிக்கக்கூடாத இம் மாயையை நிக்கிரகம் செய்யும்பொருட்டு யாரும் உம்மையேன் சரணமடைவதில்லை?" என்று வினவியதற்குப் பகவான் அருளிச் செய்கின்றார்:—

"ஏ பார்த்த! பூர்வ ஜன்மங்களிற்செய்த பாப கன்மங்களின் வலியால், உள்ளம் பாழாகி, இது நமக்கு நன்மையளிக்கும், இது நமக்கு தீமையளிக்கு என்ற விவேகம் குன்றி மாயையின் வயப்பட்டோரும், மூடரும், இடம்பம், அகங்காரம் முதலிய அசுர பாவத்தை யடைந்தவரும் என்னைப் பூஜியார்கள். ஆயினும் என்னைப் பூஜிப்போரும் சிலர் உளர். அவர்கள் யாரென்பதைக் கூறுதும் கேட்பாயாக.

(1) உலகபோக சம்பந்தமான தனம், ஸ்திரீ, புத்திரர் முதலிய ஐசுவரியங்களை யடைய விரும்புவோர்; (2) ஆபத்தை யடைந்து அதினின்று தப்ப விரும்புவோர்; (3) இது நித்தியம் இது அநித்தியம் என்பதை யறிந்து ஜனனத்தை யொழிக்கும் பொருட்டு ஞானமடைய இச்சிப்போர்; (4) எனது வாஸ்தவ சொரூபத்தைச் சாக்ஷாத்கரித்த மெஞ்ஞானி. இந்நால்வரும் தத்தம் சக்திக்குத் தக்க படி என்னை யாராதிக்கும் தவமுடையவர்களாவர்.

இந்த நால்வரில் ஞானி (பிரத்யகான்மாவாகிய தன்னை, பரமான்மாவாகிய என்னில் அபேதமா யறிவனாதலின்) மேலானவனாவன். அவன் எனக்கத்தியந்தம் பிரியன், அவனுக்கு நானும் அத்தியந்தப் பிரியன்

[பொருளை விரும்பி ஈசுவரனைப் பூஜிப்பவன் அர்த்தார்த்திரி எனப்படுபவன் (அர்த்தம் = பொருள்), ஆபத்தினின்

றும் தப்புவதற்காக ஈசுரவனைப் பூஜிப்பவன் ஆர்த்தன் எனப் படுவன் (ஆர்த்தி = ஆபத்து), மோக்ஷமடைய இச்சித்து ஈசுவரனைப் பூஜிப்பவன் சிஞ்ஞாசு எனப்படுவன் (சிஞ் ஞாசு = மோக்ஷவிச்சை யுடையவன். இவர்கள் மூவரும் சுயநலமாகிய ஒன்றை யிச்சித்தே பகவானைப் பூஜிப்பவர் கள் ஞானி யொருவனே நிட்காம பூஜை செய்பவன்.

சுக்ரீவன், விபீஷணன், உபமன்யு முதலியவர்கள் இகலோக போகங்களை விரும்பியும், துருவன முதலியோர் பரலோக போகங்களை விரும்பியும் பகவானைப் பூஜித் தார்கள். இவர்கள் [illegible].

துரோபதை, கஜேந்திரன் முதலியோர் ஆபத்திலிருந்து காப்பாற்றப்படவேண்டிப் பகவானை பூஜித்தார்கள். இவர் கள் ஆர்த்தர்கள்—முசுகுந்தச் சக்கிரவர்த்தி, ஜனகராஜா, உத்தவர் முதலியோர் ஞான மடையவேண்டிப் பகவானைப் பூஜித்தார்கள். இவர்கள் சிஞ்ஞாசுக்கள். இந்த மூவரில் சிஞ்ஞாசு ஞானமடைவதால் நேரே மாயையைக் கடக் கிறான். மற்ற இருவரும் சிஞ்ஞாசுக்களாகி ஞான மடைந்த பின்பே மாயையைக் கடப்பார்கள்.]

"ஏ பகவன்! ஞானியே தங்களுக்குப் பிரியன் எனில் ஆர்த்தன் முதலிய மற்ற மூவரும் அப்பிரியர்களோ?" என்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் "அவர்களும் பிரியர்களே, ஆயினும் ஞானி மிகப் பிரியன்" என்று காரணத்தோடு கூறியருள்கிறார்:—

ஏ பார்த்த! ஆர்த்தன் முதலிய மூவரும் உத்கிருஷ்ட மானவர்களே. எனினும் ஞானி என் உண்மைச் சொரூ பத்தின்கண்ணே சாட்சாத்காரமாய்ப் பொருந்தி யிருத்த லின் அவன் எனது ஆன்மாவே என்பது நிச்சயம். இத்தகைய ஞானியாதல் பல ஜனனங்களில் கொஞ்சங்

கொஞ்சமாய் ஆசையொழிந்து நிராசையுதிக்கும் கடைசி ஜன்மத்தில் சித்திப்பதாகும்.

> "இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான
> மெளிதிலுண்டாம்......" (வாசிட்டம்-சனகராசன் கதை)

(அத்தகைய ஞானியின் அருமையைப்பற்றி பகவான் அருள்கிறார்.)

அந்த ஞானி அறியப்பட்ட எல்லா வஸ்துக்களும் அதிஷ்டானமாகிய என்னையன்றி யில்லை என்கிற உண்மையைப் பரோக்ஷமாயறிந்து, பரமாத்மாவாகிய என்னில் அபேதமாய்ப் பொருந்தியிருப்பன் ஓ கூர்மைபொருந்திய வேலாயுதத்தையுடைய அர்ச்சுனா! அத்தகைய ஞானி அடைதற்கு மிக்க அரியவனாகும்.

ஏ பார்த்த! பூர்வ வாசனையால் தம் அந்தக்கரணங்களில் வைத்த காமாதிகளை யுடையோரின் அந்தக்கரணங்கள் முழுமையும் நம்மினின்று பராமுகம் பண்ணப்பட்டு தமக்கு வேண்டுவனவற்றை அளிக்கும் க்ஷுத்திர தேவதைகளை உபாசியா நிற்கும்.

(மாரணம், மோகனம், உச்சாடனம், ஸ்தம்பனம், ஆகர்ஷணம், வசீகரணம் முதலியவற்றின் சம்பந்தமான தாழ்ந்த இச்சைகளையுடையோர் அவற்றை ஈசுர சேவையால் அடைய விரும்புவது அசங்கியமெனக் கருதி அத்தகைய அல்ப இச்சைகளைப் பூர்த்தி செய்விக்கும் க்ஷுத்திர தேவதைகளை ஜபம், உபவாசம் முதலியவற்றால் உபாசிப்பார்கள்.) எவன் சிரத்தையோடு ஒரு தெய்வத்தைப் பூஜிக்கிறானோ அந்தச் சகாமபுருஷனுக்கு அத்தெய்வத்தினிடத்து நிலையான பக்தியை அந்தர்யாமியாகிய நான் அளித்திடுவேன். என்னாலளிக்கப்பட்ட பக்தியோடு அந்த

அந்நிய தெய்வங்களை நாடோறும் நம்பிக்கையோடு ஆரா திப்பவர் கோரும் காமிய பதார்த்தங்களையெல்லாம் நானே அவர்களுக்கு அளித்திடுவேன்.

ஏ பார்த்த! இந்த க்ஷுத்திர தெய்வங்களைத் தம் மன தில் மெய்த்தெய்வங்களென்றே கருதி ஆராதனம் செய்யும் அற்ப மனமுடையவர்கள் அடையும் பலன் வீணாக நாச முடையது. அவர்கள் ஆராதிக்கும் அத்தெய்வங்களும் நாசமுடையனவாம் அத்தேவதைகளை யாராதிப்பவர்கள் அத்தேவதைகளையே யடைவார்கள். பரமான்மாவாகிய என்னை யாராதிப்பவர்கள் என்னையே யடைவார்கள்.

[எவனெவன் எதையெதை யாராதிக்கிறானோ அதை யதையே யடைவன். பிரத்யகான்மாவான தன் நிஜவடிவை யறிந்து பரமாத்மாவை அபேதமாய்ச் சாட்சாத்கரித்தவன் அப்பரமான்மாவையே யடைகிறான்.

* * * *

ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போ
மியா தொன்று பாவிக்க நான்
அதுவாத லாலென்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்க முறலாம்

* * * " (தாயுமானவர்)

"ஓ பகவானே! தங்களை நேரே உபாசிப்பதால் அழி வற்ற உத்தமப் பயனை அடையலாமெனில், யாவரும் தங் களையே உபாசிக்காத காரணமென்ன?" என்னும் அர்ச்சு னன் சங்கைக்குப் பகவான் அருளிச்செய்கின்றார்:—

ஏ பார்த்த! விவேகமில்லாத புருடர்கள் பகவானாகிய நான் நித்தியன், அழிவற்றவன், ஒப்புவமையில்லாதவன், அத்துவிதானந்த சொரூபன் என்று அறிகிறார்களில்லை.

மற்றோ இவன் கிருஷ்ணன், நந்தகோபன் மகன், நம்போல் விவகாரங்களோடு கூடியிருப்பவனுதலின் நித்தியானந்தனவன், சாதாரண சீவர்களில் இவனும் ஒருவன் என்றே கருதாநிற்பர்.

"ஏ பகவான் தாங்கள் யாவரிடத்துமில்லாத அநேக விசேஷ குணங்களும் சகல ஐசுவரியங்களும் பொருந்தியுள்ள சர்வேசுரனுக விருக்கத் தங்களை அவிவேகிகள் சாதாரண மனிதனுகவும் சீவனுகவும் கருதுவானேன்?" என்று அர்ச்சுனன் ஐயத்தை நீக்குவான் வேண்டி பகவான் அருளிச்செய்கிறுர்:—

ஏ பார்த்த! நான் பிரகிருதியாகிய மாயையில் மறைந்திருப்பவனுதலின், உலக மாயையில் மனம் பொருந்தியுள்ள ஞான சூரியர்கள் ஜனன மரணமற்ற என்னை அறிந்து கொள்வதில்லை. முன் சென்றவைகளும், இப்போதுள்ளவைகளும், இனிமேல் உண்டாகுபவைகளுமாகிய சர்வ பிராணிகளையும் நான் அறிந்துளேன். உலகிலுள்ள சகல பிராணிகளும் ஜனிக்கும்போதே இச்சை துவேஷம் என்னும் குண வேறுபாட்டால் உண்டாகும் மோகத்தில் அழுந்தியவர்களாய்த் தேகபாவனையைப் பொருந்தி யிருப்பதால் அந்தரியாமியாகவுள்ள என்னை அறியமாட்டார்கள்.

[சீவர்கள் இராகத்துவேஷங்களோடு பொருந்தியவர்களாய் மனமாயையின் வழியே உழன்று கொண்டிருப்பதால் அத்தகையோர் பரமான்மாவின் உண்மைச் சொரூபத்தை அறியமாட்டார்கள். பரமேசுவரனை உபாசிக்கிறவர்களாயினும் இச்சையை ஒழித்து மனதின் பசை அறுத்து பிரத்யகான்மாவாகிய தன்னை அறிந்தாலோ பரமான்ம சொரூபத்தை அறியலாகும்.]

(மற்றப்படி எத்தகையோர் தம்மை சாராதிருப்பவர்கள் என்பதை பகவான் அருளிச் செய்கின்றுர்.)

ஏ பார்த்த! முன் ஜன்மங்களிற் செய்த நல்வினைப் பயனையுடைய அதிகாரிகள், பாவகருமங்கள் முழுமையும் ஒழியப்பெற்று, மாயையின் மயக்கில் சிக்காதவராய் பரமேசுவரனாகிய என்னிடத்தில் நிலைக்கப்பெற்ற மனதோடு என்னையே ஆராதிப்பார்கள்.

(இப்போது பகவான், சில கேள்விகள் கேட்கும்படி அர்ச்சுனனைத் தூண்டும் பொருட்டுப் பின்வரும் விஷயத்தைக்கூறியிருக்கின்றார். பின்வரும் 8-வது அத்தியாயத்தில் அதன் பொருள் விவரித்துக் கூறப்படுகிறது.)

ஏ பார்த்த! பிணி, மூப்பு, பிறப்பு, இறப்பு ஆகிய வற்றையொழிக்கும்பொருட்டு ஞானத்தை அடையக்கருதி பரமேசுவரனாகிய என்னை யாசிரயித்து பலேச்சையின்றி கருமங்களைச் செய்யும் அதிகாரிகள், தத்பத இலக்ஷியார்த்தமான பிரத்யகான்மாவையும், அனுஷ்டிக்க வேண்டிய சிரவணாதி கருமங்களையும் அறியா நிற்பர்.

அவ்வாறு என்னைச் சதா சிந்தியாநிற்கும் அதிகாரி புருடர், என்னிடத்தில் பொருந்திய மனதுடையவர்களாய், இத்தேகத்தை விட்டு நீங்கும்போது பரமான்மாவாகிய என்னை உள்ளபடியே அறிவார்கள்.

[பகவானை மேற்கண்டபடி சதா சிந்திக்கும் புருஷர்களின் இந்திரிய முதலிய கரணங்கள் ஒருமைப்படாவிடினும், பகவானது அருளாலும் பூர்வாப்பியாச சமஸ்கார வலியாலும் மரண காலத்தில் அவர்களுடைய அந்தக் கரணம் பரமான்மாகாரத்தையே அடையும். ஆதலின் அவர்கள் பக்தியோகத்தால் கிருதார்த்தராவார்கள் என்று பகவான் அருளிச் செய்தார்.]

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# 8-வது * எழுவகை வினவுரைத்த அத்தியாயம்

[முன் அத்தியாயத்தின் முடிவில் பகவான் குறிப்பாய்க் கூறிய பிரமம் முதலிய எழு பதார்த்தங்களையும் பற்றி எட்டாம் அத்தியாயத்தில் வியாக்கியான ரூபமாக அருளிச்செய்கிறார்.]

(பகவான் கூறிய எழு பதார்த்தங்களையும் பற்றி விசேஷமா யறிய விரும்பிய அர்ச்சுனன் அவற்றைப்பற்றிப் பகவானை வினவுகின்றனன்.)

இவ்வுலக முழுவதையும் அபிமானத்தால் பந்தித்து, தாம்மட்டும் எதிலும் பந்தப்படாமலிருந்தும் எசோதா பிராட்டியின் கயிற்றால் பந்திக்கப்பட்டுப் பாலலீலை செய்தருளிய பகவானை நோக்கிப் பார்த்தன் பின்வரும் வினக்களைக் கேட்கின்றான்:—

ஏ பகவான்!

1. முன்பு ஞேய வடிவமாய்த் தாங்கள் அருளிய பிரம்மம் என்பது எது? சோபாதிகமா? அல்லது நிருபாதிகமோ?

2. அத்யாத்மம் எது? அந்த அத்யாத்மம் சுரோத்திரம் முதலிய கரணங்களின் கூட்டமோ? அல்லது பிரத்தியக் சைதன்யமோ?

(ஆன்மாவோடு சம்பந்தமுடையதாய்த் தேகத்தைத் தழுவி நிற்பது அத்தியான்மம் எனப்படும்.)

---

* வடநூலில் அக்ஷரப்பிரமயோகம் என்று பெயர்.

3. தாங்கள் விதித்தருளும் கருமம் யாது? அது ஞான ரூபமா அல்லது வேறு விதமானதா?

4. அதிபூதம் என்பது எது? பிருதிவி முதலிய பூதங்களைத் தழுவி நிற்கும் அற்ப காரியமா? அல்லது எல்லாக் காரியங்களுமா?

(பூதங்களை ஆசிரயித்திருப்பது அதிபூதம் எனப்படும்.)

5. அதிதெய்வம் எது? அது தேவதா விஷயமான தியானமா? அல்லது தேவதைகளின் ஆதித்ய மண்டல முதலியவற்றில் கலந்திருக்கும் சைதன்யமா? (தெய்வத்தை ஆசிரயித்துள்ளது அதிதெய்வம்.)

6. அதி யெஞ்ஞம் என்பது எது? அது யாதேனுமொரு தேவதா சம்பந்தமானதா? அல்லது பரப்பிரம்மமோ? அந்த அதியெஞ்ஞம் எவ்வாறு சிந்திக்தற்குரியது? அதாவது தாதான்மிய ரூபமாகவா அல்லது முற்றும் அபேதமாகவா? அவ்வதியெஞ்ஞம் தேகத்திலுள்ளதா அல்லது புறம்பாக உள்ளதா? தேகத்தின்கண் எனின், எந்த ரூபமாயிருக்கிறது? புத்தி முதலிய வடிவமாகவா அவற்றிற் கயலாகவா?

7. மரணமடையும் காலத்தில் இந்திரியங்கள் கலக்கமடைவதால், அச்சமயம் மனம் ஒருமித்துத் தங்களை உள்ளபடி அறியும் மார்க்கம் எவ்வாறு?

ஏ பரமாத்மா! தாங்கள் சர்வஜ்ஞராதலின் அடியேனுக்கு இவற்றின் பொருள்களை யெல்லாம் விவரமாக உரைத்தருளப் பிரார்த்திக்கின்றேன்.

(பகவான் விடையளிக்கத் தொடங்கி முதலாவது பிரம்மத்தைப் பற்றி யருள்கின்றார்.)

ஏ பார்த்த! பிரம்மம் என்று கூறியது நிருபாதிகப் பிரம்மமேயாகும். அது ஒருவரால் அறிதற்கரியது, அழியாதது, எவற்றிலும் பெரியது.

[தேசம் காலம் முதலிய எதனாலும் அழியாதது எதுவோ அதற்கு 'அக்ஷரம்' என்று பெயர். இத்தகைய அக்ஷரம் என்ற பிரம்மத்தைப்பற்றி பிரகதாரணிய உபநிடதத்தில் யாக்ஞவல்கிய முனிவர் கார்க்கி என்பவரை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார்.

ஏ கார்க்கி! இப்பிரம்மம் தூலமன்று, அணுவன்று, குறிலன்று, நெடிலன்று, எவ்வித உபாதிகளுமில்லாதது; சூரிய சந்திராதி சர்வ ஜகத்தையும் தனதாரணையில் நிறுத்துவது; சர்வப் பிரபஞ்சத்தையும் தாரணம் செய்வது; சொப் பிரகாச பரமானந்த சொரூபமாயுள்ளது; சர்வத்திற்கும் சாட்சியாயுள்ளது.]

2-வது கேள்விக்கு விடை:—

அந்தக்கரணங்களில் நிற்கும் (பிரம்மத்தின் சொரூபமான) பிரத்தியக் சைதந்நியம் இத்தேகத்தை ஆசிரயித்திருப்பதால் அத்தியாத்மம் எனப்பட்டது. பிரத்யக் சைதந்நியத்தின் வேறான சுரோத்திரம் முதலியவற்றின் கூட்டமல்ல.

3-வது கேள்விக்கு விடை:—

தாவர ஜங்கம ரூபமான பூதங்களின் உற்பத்தியைச் செய்கின்ற யாகம் முதலியவை கருமம் எனப்படும். அதாவது இந்திராதி தேவதைகளைக் குறித்துச் செய்யும் யாகம். ஏஞ்ஞம், தானம் முதலியனவாம்.

4-வது வினாவிற்கு விடை:—

தேகம் முதலிய அழியத்தக்க பொருள்களும், அவற்றிலுள்ள நான் என்னும் அபிமானமும் அதிபூதம் எனப்படும்

5-வது வினாவிற்கு விடை:—

பக்தப்படும் இச்சரீர வடிவ சர்வபுரங்களினும் நிறைந்திருக்கும் புருஷனாகிய இரண்ணியகருப்பன் அதிதெய்வம் ஆகும்.

(இரண்ணியகருப்பன் சூரியன் முதலிய தேவதைகளை ஆசிரயித்து சட்சு முதலிய கரணங்கட்கு அநுக்கிரகம் செய்வதால் அதிதெய்வம் என்று கூறப்பட்டான். தேவதா விஷய தியானம் முதலியவை அதிதெய்வமன்று.)

6-வது வினாவிற்கு விடை:—

அத்தியஞ்ஞும் நானே ஆகின்றேன்.

(சர்வ எஞ்ஞுங்களுக்கும் அதிஷ்டானத் தன்மை வடிவாயும், சர்வ எஞ்ஞுபலனைத் தருபவராயும், சர்வ யஞ்ஞுங்களின் அபிமானியாயும் உள்ள விஷ்ணுவே அதியெஞ்ஞும் ஆதலின் பகவான் அதியஞ்ஞும் நானுகவே யிருக்கிறேன் என்றருளினர். இத்தகைய சர்வ வியாபியாதலின் அவ்வதியஞ்ஞும் இத்தேகத்திலுள்ளதா? புறம்பேயுள்ளதா? புத்தியாதிரூபமா? என்ற சகல சந்தேகங்களும் நிவர்த்தியாயின.)

7-வது வினாவிற்கு விடை:—

ஏ பார்த்த! அதியஞ்ஞு வடிவ சகுணப் பிரம்மமாகிய என்னையேனும், நிர்க்குணப் பிரம்மமாகிய என்னையேனும் சிந்தித்து, அச்சிந்தனையின் வலியால் மரணகாலத்தில் ஐந்திந்திரியங்களையும் சத்தாதி விடயங்களையும் நிக்கிரகித்து, இத்தேகத்தில் நான் எனதென்னும் அபிமானத்தைவிட்டு, சித்தத்தை என்னிடமே வைத்து மரிப்போர் எனது சொரூபத் தன்மையையே அடைவர். அது எவ்வாறெனில் கூறுதும். ஒருவன் மரணகாலத்தில் யாதொரு தேவதை

மாகிய எனது விசுவரூபத்தை முன்னே யாவரும் அறிந்திலர். இவ்வுலகில் (நீ தவிர மற்ற) எவரும் வேதாத்தியயனத்தாலும், யக்ஞங்களின் அத்தியயனத்தாலும், மேலான தவங்களினாலும், தானங்களைச் செய்வதாலும், கருமங்களாலும் தரிசிக்கமுடியாது. அத்தகைய விசுவரூபத்தைத் தோஷரகிதமான எனது யோகமாயையின் சாமார்த்தியத்தால் நீ தரிசிப்பிக்கப் பெற்றாய்.

ஏ அர்ச்சுனா! எனது விசுவரூபத்தைத் தரிசித்ததால் நீ பீதியடைந்து கலக்கப்படவேண்டாம். பயமின்றி சந்தோஷ மனத்தனாய் என் முந்திய சொரூபத்தையே தரிசிப்பாயாக

(இங்கு சஞ்சயர் திருதராட்டிரனுக்குப் பின்வருமாறு கூறுகிறார்.)

"அய்யா திருதராட்டிர பூபதியே! தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாத பரந்தாமனாகிய பகவான் அர்ச்சுனனுக்கு அவ்வாறு கூறியபின், சங்கு, சக்கிரம், கதை, பத்மம் இவற்றைத் தரிசித்தருள சதுர்ப்புஜ மூர்த்தியாகிய தமது திவ்விய சொரூபத்தைக் காட்டியருளி அவனுக்குண்டாகியிருந்த பீதியை யகற்றிக் கிருபை பாலித்தார்" என்று சஞ்சயர் திரிதராட்டிரருக்கு மொழிந்தார்.

(பகவான் அர்ச்சுனனுக்குத் தாம் காட்டியருளிய விசுவரூப தரிசனத்தின் அரியதன்மையை அருளிச் செய்கின்றார்.)

"ஏ பார்த்த! இப்போது நீ தரிசித்த அந்த விசுவரூபத்தை இதுகாறும் ஒருவரும் தரிசித்ததில்லை. இனியும் தரிசிப்போரில்லை. இந்திரன் முதலிய தேவர்களும் அந்த விசுவரூபத்தைத் தரிசிக்க மிக்க ஆவலுள்ளவர்களாக இருக்கிறார்கள். இத்தகைய என்னை எத்தகையோர் அடை

யவாகுமெனின், என்னிடத்து அநந்நிய பக்தி பூண்டவ ராய் என்னையன்றி வேறு எதனுடைய சம்பந்தமும் கொள் ளாதவரா யிருப்போரே என்னை யபேதமா யடையத்தக் கோராவர்" என்றருளிச் செய்தார்.

"ஏ பார்த்தா! எவ் வதிகாரி எனது பிரசன்னத்தின் பொருட்டே சகல கருமங்களையும் செய்கிறனே, எவ் வதி காரி நானே அடையத்தக்க வஸ்து என்னும் நிச்சயமும், ஏனைய சுவர்க்காதி பலன்கள் அடையத்தக்கவை யன்று என்று நிச்சயமும் உடையவனே, எவன் தனம் தாரம் புத் திரன் முதலிய எல்லா பதார்த்தங்களிலும் பற்றில்லாதவ னாய் என்னிடத்து மட்டுமே பற்றுவைத்து யாவற்றையும் எனது சொரூபமாகப் பாவித்துப் பஜிக்கிறனே, எவன் தனக்குத் தீங்கிழைத்தவர்களிடத்தும் துவேஷம் கொள் ளாதவனே இத் தன்மைய அதிகாரியே என்னை யபேதமா யடைதற்குரியவன்" என்று அருளினர்.

பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.

---

# 12-வது பக்தியோக அத்தியாயம்

[ஸ்ரீ பகவான் இது காறும் சகுணம் நிர்க்குணம் ஆகிய இரண்டையும் உபதேசித்தருளினர். இவ் விரு வகை உபதேசங்கள் அதிகாரி பேதத்திற்குத் தக்கபடி கொள்ளற் பாலனவாம். ஆகையால் அர்ச்சுனன் தனது அதிகார நிச்சயத்தின் பொருட்டு சகுண வித்தை நிர்க்குண வித்தை இரண்டின் தன்மையையும் அறிய இச்சித்துப் பகவானை நோக்கி வினவுகிறான்.]

அர்ச்சுனன்:—"ஏ பரந்தாமா! பெரியோர்கள் தங்கள் மனதிற்குப் பொருந்திய உருவமாகவே பரமேசுவரனை உம்மைச் சிந்தியா நிற்பரோ; அல்லது பரிசுத்தமான நான்மறைகளுக்கு மெட்டாதான நிர்குணப் பிரம்மமாகிய உம்மையே நிரந்தரம் சிந்திப்பார்களோ?" என்று வினவியதற்கு ஆயர்பாடியில் அவதரித்து ஆவினங்களை மேய்த்த கண்ணபிரான் அருளிச் செய்கின்றார்:—

"ஏ அர்ச்சுனா! நீ தரிசிக்கும்படி நாம் முன்பு காட்டிய விசுவரூபத்தை ஏகாக்கிர சித்தத்தோடும், சாத்விக சிரத்தையோடும் மனதினால் சிந்தித்து வாக்கினால் துதிப்பவர்கள் எல்லோரும் என்னையே அடைவார்கள். அவர்கள் யாவரினும் சிரேஷ்டராவர். இனி இவர்களையன்றி நிர்க்குண உபாசகர்களின் நெறியையும் கூறுதும் கேட்பாயாக.

(இப்போது பகவான் நிர்க்குணோபாசனையைப் பற்றி கூறுகிறார்.)

ஏ காண்டீபனே! வாக்கினால் இன்னவிதமானதென்று வசனிக்கக் கூடாததாய், மனத்தினால் இத்தன்மையதென

ஒரு விஷயமாக அறியப்படாததாய், எங்கும் நீக்கமின்றி நிறைந்து போக்குவரவற்றதாய், சர்வசாட்சியாய்ப் பிரகாசிக்கும் நிர்க்குணப்பிரம்ம சொரூபத்தை, கடத்தற்கரிய இந்திரியங்களை நிக்கிரகம் செய்து, சாட்சாத்காரமாய் அறியாநிற்பவன் என்னின் அன்னியனாக மாட்டான்.

(பகவான் முன்பு சகுணோபாசகரை யாவரினும் நல்லவர் என்று கூறிவிட்டு இப்போது நிர்க்குண உபாசகர் நானே யாகும், என்னின் அன்னியமல்ல என்று கூறியதால் அர்ச்சுனனுக்கு உண்டாகும் சந்தேகத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டுப் பகவான் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! ஒரு காரணமுமில்லாததாய், அந்தர் இந்திரிய பகிர் இந்திரியங்களுள் ஓர் இந்திரியத்திற்கும் விடயமாகாததாயுள்ள நிர்க்குணப் பிரம்மத்தை அடையாநிற்பவர்களுடைய வருத்தம் செப்பத்தரமானதன்று. அது வேறொரு கஷ்டத்தோடு ஒப்பிட்டுக் கூறத்தக்கதன்று. அறிதற்கரிய இப் பிரம்ம நிஷ்டை தேகேந்திராதி அபிமானமுடைய மனிதரால் சுலபமாய் அடையத் தக்கதன்று. ஆதலின் அதை யடைந்தவர்களின் மகிமையை அளவறுத்துக் கூறவல்லார் யார்? (ஒருவருமில்லை என்றபடி.)

[ஈண்டு பகவான் சகுண உபாசனை நிர்க்குண உபாசனை இரண்டிற்குமுள்ள பேதத்தைக் கூறியருளினார். இரண்டு உபாசகர்களும் தம்மையே யடைவர் என்று கூறியதனால் இருவர்க்கும் பலன் ஒன்றே யென்றாயிற்று. ஆனால் நிர்க்குண உபாசகர்க்கு வருத்தம் அதிகம் என்றும் சகுண உபாசகர்க்கு அதனினுங்குறைந்த வருத்தம் என்றும் தெரிகிறது. இப்போது இரண்டு மார்க்கங்களுக்கும பலன் ஒன்றாகவே யிருக்கிற வகையில் குறைந்த வருத்தமுள்ள மார்க்கத்தையே ஏன் கைக்கொள்ளலாகாது? அதிக வருத்

தமான மார்க்கத்தில் செல்வோரை ஏன் அதிகமாகச் சிறப்பிக்க வேண்டும்? என்ற ஐயங்கள் எழலாகும்.

அதிகாரிகளின் தன்மையால் இரண்டு மார்க்கங்களும் வேண்டற்பாலனவே. ஏனெனில் தீவிரதர, தீவிர அதிகாரிகளே நிர்க்குண உபாசனைக்குரியோர். ஏனெனில் அவர்கள் சூக்ஷும அறிவுடையோர் ஆதலின் தேகம் தனக்கன்னியம் என்பதை எளிதிலுணர்ந்து, மனதையும் ஆன்மாவையும் வேறு பிறித்தறிந்து பிரம்ம சாக்ஷாத்கார நிலைமையடைவார்கள். மந்தம் மந்தரமுடைய அதிகாரிகள் வேறு பிரித்தறியும் சக்தியுடையவர்க ளல்லவாதலின் அவர்கள் சகுண உபாசனைக்கே உரியவர். இவர்கள் சகுண உபாசனையால் தான் அலையும் மனதைக் கொஞ்சம் கொஞ்சமாய் ஒடுக்க வேண்டும். இவர்கள் தாங்கள் துதிக்கும் சொரூபத்தினிடம் பக்தி முகிர்ந்து அப் பக்தி அநந்திய பக்தியாய் மாறியபின் ஞாதுரு ஞேயங்களற்று, பிறகே ஞானமாத்திரமாய்ச் சேஷித்தலாகிய ஆன்ம சாக்ஷாத்கார மெய்தி பிரம்மான்ம ஐக்கிய நிலையை யடைவார்கள்.

இந்த இருவரில் சகுண உபாசகர்கள் தம் உபாசனார்த்தமாகிய சொரூபத்தினிடத்தில் மனம் நிலைத்து நிற்கும்படிச் செய்ய வேண்டிய கஷ்டத்தை யுடையவர்கள். இவர்களுக்கு வாக்கும் காயமும் உதவியா யிருக்கின்றன. எவ்வாறெனின், வாக்கு மந்திரத்தை யுச்சரிப்பதாலும், காயம் அர்ச்சனையாதி கிரியைகளைச் செய்வதாலும் மனதை யலையவிடாது காக்கின்றன. ஆதலின் இவர்கள் வருத்தம் குறைவானதே.

நிர்க்குண உபாசகரோ தேகம் இந்திரியங்கள் கரணங்கள் யாவற்றையும் அடியோடு நிக்கிரகஞ் செய்து சகல

கேவலங்கள் தாக்காத நிலையை அடையவேண்டி யிருத்த லால் இவர்கள் கஷ்டம் மிக்க அதிகமானதே. இவர்கள் நேரே பிரம்மத்தை அடைகிறார்க ளாதலின் பகவான் "அத் தகையோன் நானே" என்றார். சாதாரணமாய் ஒருவன் யாரும் செய்ய முடியாத காரியத்தைச் செய்து விட்டதாய் தன்னைப்புகழ்ந்து கொள்ளும்போது "இவன் என்ன பிரம்ம வித்தை கண்டு பிடித்து விட்டானோ" என்று உலகோர் கூறுவதே இதனுண்மையை விளக்குகிறது.

சகுண உபாசனையே மனோலயம் பெறுதற்கு ஓர் சுலபமான மார்க்கமாகும். எவ்வாறெனின் மனம் எப் போதும் நாமரூபங்களிலேயே நாட்ட முடையது. நாம ரூப நாட்டத்தை விட்டாலன்றி ஆன்ம சொரூபம் தோன் றாது. மனமோ நாமரூப நாட்டத்தை எளிதில்விடும் சுபாவ முடையதல்ல. சகுணோபாசகன் அது செல்லும் வழியே அதை விட்டுப் பிறகு சுலபமாய் அடக்கி விடலாகும். சதா ஒரு விஷயத்தை விட்டு ஒரு விஷயத்தில் பாய்ந்தோடி அலைந்து கொண்டேயிருக்கும் மனம், சகுணோபாசனையின் மூலமாய் முதலில் குறித்த ஒரு நாட்டத்திலேயே நிலைத்து நிற்கப் பழகி நம் வயப்படுகிறது. பிறகு அதை அடக்கு வது சுலபமாகும். ஆகையால் பெரும் பாலான அதிகாரி களுக்குச் சகுணோபாசனையே பயனளிக்கத் தக்கதாகும். சகுணோபாசகன் பக்தி யொன்றையே நாட்டத்தில் கண்டு அதை அப்பியசிக்கத் தொடங்குவானேல் ஞானமடை தற்கு வேண்டிய எல்லாச் சாதனங்களும் ஈசுவரனருளால் தானே கைகூடும். இம் மார்க்கத்தால் அரிய சித்திகளை யும் முத்தியையும் பெற்ற மகான்கள் எண்ணிறந்தோர்.]

(என் பக்தர் எனது அருளால் முத்தியடைவார் என்று பகவான் அருளிச் செய்கிறார்.)

ஏ பார்த்த! யாவர் சகல கர்மங்களையும் என்னிடத்தே அர்ப்பணம் செய்து தமது சித்தத்தை என்பால் நிலைக்கச் செய்வார்களோ அவர்களை இறப்பும் பிறப்புமாகிய துக்க சாகரத்தினின்றும் கரையேற்றிச் சிறிது காலத்தில் அவர்களை முத்தியடையச் செய்வேன்.

நீ உண்மையாகவே உனது சித்தத்தைப் பூர்ணமாக என்னிடத்தில் வைப்பாயாயின், என்னில் அன்னியமாக இராது அபேதமாய்க் கலந்திருப்பதற்குச் சற்றும் சந்தேகமே யில்லை. அவ்வாறு சகுணப் பிரம்மமாகிய என்னிடத்தில் சித்தத்தை நிலைநிறுத்த முடியாதாயின், அதற்குரிய அப்பியாசத்தைச் செய்வாயாக. அதையும் செய்ய முடியாதாயின் நீ திரிகரணங்களாற் செய்யும் கர்மங்களை என் பொருட்டாகச் செய்வாய். அப்படிச் செய்யவும் முடியாதாயின் பலனை இச்சிக்காமலே கர்மங்களைச் செய்வாயாக.

அப்பியாசத்தினும் ஞானமே சிரேஷ்டமாம். அந்த ஞானத்திலும் உண்மையான தியானம் சிறந்ததாம். அத் தியானத்திலும் கர்மபலனைத் தியாகம் செய்தல் மேன்மையானதாகும். அதன் பின்னர் சித்த சாந்தி யுண்டாகுமாதலின்.

ஈண்டு அப்பியாசம் என்பது சிரவணாதிகளைக் குறிக்கும். ஞானம் என்பது ஆன்ம நிச்சயமாகிய பரோக்ஷ ஞானம். சிரவண மனன ஞானம் நிதித்தியாசனவாயிலாக ஆன்ம சாக்ஷாத்கார ஞானத்தை யளிக்கும். நிதித்தியாசன ரூபமான தியானமோ ஈசுவரனது அருளைப் பெறச் செய்வதால் நேரே ஆன்ம சாக்ஷாத்கார ஞானத்தை யளிக்கும். ஆதலின் படிப்படியாய் ஒன்றினொன்று மேலானதென்றார்.

[ஞானத்திலும் தியானம் மேற்கண்ட காரணத்தால் சிரேஷ்டமாயினும், கருமபலத்தியாகம் அத்தியானத்திலும் சிரேட்டமாம். ஏனெனில், கருமபலனைத் தியாகம் செய்தால் இச்சை யொழிந்ததாகும். அதன் சித்தசுத்தி வாயிலாய் எளிதில் ஆத்மஞானம் கைகூடும்.]

ஏ பார்க்குண! சர அசரமாகிய உயிர்களிடத்து (ஓரறிவு முதல் ஆறறிவு வரையிலுள்ள பிராணிகள்) அன்புடையவனாய், இன்ப துன்பங்கள் நான் எனது என்றவைகளில் ஒன்றையு மறியாதவனாய் (சுக துக்கங்களில் சமதிருட்டியுடையவனாய், அகங்கார மமகாரங்களற்றவனாய்), எந்தப் பதார்த்தங்களிலும் இச்சை வெறுப்பு இல்லாதவனாய், சித்தத்தை ஒரு வழியில் நிறுத்தியவனாய், ஆன்மாவின்கண் திடநிச்சயமும் கருணையும் உடையவனாய், புத்தியை விஷயங்களிற் செல்ல வொட்டாது தடுத்து என்னிடத்தே அர்ப்பணஞ் செய்திருக்கும் யோகியே எனக்கு அத்தியந்தப் பிரியன்.

ஒரு பொருளிலும் ஆசையின்றி இந்திரியங்களின் வழியில் தான் செல்லாது அவற்றைத் தன்வசமாக்கி, ஒருவர் செய்யும் உபகார அபகாரங்களில் சம மனமுடைவனாய், நற்கரும துர்க்கருமங்களைப் பரித்தியாகம் செய்து, தேகத்திற்குச் சுகமுண்டாயினும் வேதனையுண்டாயினும் மகிழ்தல் வாடுதல் இன்றி, பிரியவஸ்து கிடைத்தால் சந்தோஷமடைதலும் அப்பிரிய வஸ்து கிடைத்தால் துக்கமடைதலும் இன்றி, இழந்த பொருட்குத் துக்கியாது வரும் பொருட்கு இச்சை வையாது; சத்துரு மித்துரு என்ற பேதம் வையாமல், மானம் அவமானம், இன்பம் துன்பம், சீதம் உஷ்ணம், துதி நிந்தை இவற்றில் சம சித்தமுடையவனாய், தான் வசிப்பது இன்னவிடமென்று

ஒன்றைக் குறித்துக் கொள்ளாதவனுய்ச் சஞ்சரிக்கும் யோகியே எனக்கு அத்தியந்தப் பிரியனுவன்.

தாம் அறிவித்தாலன்றி ஒருவராலும் அறிதற்கரிய பகவான் பார்த்தனை நோக்கி, "ஏ அர்ச்சுனு! முயற்சி செய்து அடையத்தக்கதும், அடைந்தோரைச் சம்சார துக்கத்தினின்றும் விடுவித்து முத்தியிற் சேர்க்கக்கூடியதுமான பொருளை நான் அருளிச்செய்தபடியே சுபாவமாகப் பொருந்தும் வண்ணம் அறிந்து கொள்கின்றவர்களுக்கு நான் மிக்க பிரியனுக விருக்கின்றேன்" என்று அருளிச் செய்தார்.

பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# 13-வது க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாகயோக அத்தியாயம்

[முதல் அத்தியாயம் தொடங்கி ஆறும் அத்தியாயம் வரையில் துவம் பதார்த்த நிரூபணமும், ஏழாம் அத்தியாயம் தொடங்கிப் பன்னிரண்டாம் அத்தியாயம் வரையில் தத்பதார்த்த நிரூபணமும் கூறப்பட்டது. இப்போது தத் துவம் பதார்த்தங்களின் அபேதரூபமான மகாவாக்கியத் தின் பொருளை அருளிச்செய்யக் கருதித் தத்துவஞானத் தைப் பிரதானமாகவுடைய பதின்மூன்றும் அத்தியாயம் முதல் பதினெட்டாவது அத்தியாயம்வரையில் பகவான் கூறத்தொடங்கினர். ஆன்மஞானம் ஒன்றே பிறப்பிற்குக் காரணமாகிய அஞ்ஞானமென்னும் அவித்தையை யழிக் கத்தக்கதாகும். ஆதலால் அத்தகைய ஆன்மஞானமே இப்போது கூறப்படுகிறது.]

பகவான் பிறவி, பிணி, மூப்புச் சாக்காடாகியவைக ளோடு பொருந்தியிருக்கும் தேகமும், அதில் வசிக்கும் ஜீவனுமாகிய, க்ஷேத்திரம், க்ஷேத்ரக்ஞன் என்பவைகளைப் பற்றிக் கூறத் தொடங்குகிறார்.

ஏ பார்த்த! உயிரால் அனுபவிக்கப்படும் சுக துக்க போகங்களை யுண்டாக்கும் இந்திரியங்கள் கரணங்கள் பிரா ணாதி வாயுக்கள் முதலியவைகளுக்கு இருப்பிடமாகிய இத் தேகமே க்ஷேத்ரம் எனப்படும். இந்தச் சரீரத்தை ஆராய்ந் தறிந்துணருவதும், இதில் வசிப்பதுமான உயிர் க்ஷேத்ரக் ஞன் எனப்படும்.

(இப்போது இச்சீவான்மா அசம்சாரியாகிய பரமான்மாவோடு ஏகத்வரூபமான பரமார்த்திக சொரூபத்தைப் பகவான் அருளிச் செய்கின்றார்)

ஏ அர்ச்சுனா! இந்திரியாதிகளோடு பொருந்திய க்ஷேத்ரம் என்ற உடல்கள் யாவற்றிலும் அறிவு சொரூபமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் க்ஷேத்ரக்ஞன் என்ற உயிர் பிரம சொரூபமான நானே என்று அறி. இந்த க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் என்ற இரண்டினையும் அவற்றின் தன்மைகளோடு எது அறிகிறதோ அதுவே ஞானம் என்று அறிவாயாக. இது சுருதி சம்மதமாம்.

(மேலே கூறிய விஷயங்களை இப்போது பகவான் விரிவாய்க் கூறத்தொடங்குகிறார்.)

ஏ பார்க்குண! இந்தத் தேகமானது எத்தன்மையது என்பதையும், ஜடரூபமான இத்தேகத்தின் உற்பத்தியும், இச்சை துவேஷம் முதலிய தருமங்களும், இந்திரியாதி விகாரங்களும், சீவன்களது சைதன்ய ஆனந்த சொரூபமும் ஆகிய இவைகளைப்பற்றி வசிஷ்டாராதி மகரிஷிகள் பலவகையாகக் கூறியிருக்கின்றனர். அவற்றை நான் சுருக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக.

பிருதிவியாதி பஞ்சபூதங்களும், அப்பூதங்களுக்குக் காரணமாகிய அகங்காரமும், அகங்காரத்தின் காரணரூபமான புத்தியும், புத்தியின் உற்பத்திக்குக் காரணமான அவ்வியக்தமும், ஆகிய இந்த எட்டு வகையான பிரகிருதிகளும், வினைகளைச் செய்விக்கும் அந்தக்கரணமும், ஞானேந்திரியங்கள், கருமேந்திரியங்களும், ஐம்பொறிகளும, சப்தாதி ஐந்து விஷயங்களும், ஆகிய இவற்றோடு இராகத்துவேஷாதி குணங்களும், சுகதுக்கங்களும், இவை யாவும் பொருந்திய விகாரத்தன்மையோடு கூடிய இத்தொகுதியையே பெரி

யோர் தேகம் என்று கூறுகிற்பர். இனி இந்த க்ஷேத்ரத்திற் குரித்தாகிய ஞானசாதன குணங்களைக் கூறுதும் கேட்பாயாக.

(இப்போது பகவான் ஞானத்தை அடைவதற்கு வேண்டிய சாதனங்களைக் கூறி யருள்கின்றார்.)

தனது குணங்களைப் புகழ்தல், பிறர் தன்னை நன்கு மதிக்கும்படித்தன் தருமங்களைச்செய்தல், மோக்ஷத்திற்கு இடையூறான குறைகள், அந்நிய பிராணிகளுக்குத் தீங்கிழைத்தல், நான் என்ற அகங்காரம், இகபரபோகங்களை அனுபவிக்க வேண்டுமென்ற பேராசை ஆகிய இவற்றையெல்லாம் கெடுக்கும் வல்லமை.

அழகிய மாளிகை, மனைவி, மக்கள் இவர்களிடம் உண்டாகும் ஆசை, தேகத்திலுள்ள பற்றால் அதைச் சுத்தமாகவும் அழகாகவும் வைத்துக்கொண்டிருத்தல், இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களில் செல்லும்படிவிடல், கோபம், மூடர் (உலகபோக இச்சையுடையோர்) சகவாசம் ஆகிய இவற்றை விட்டொழித்தல்.

(இவைகள் அனைத்தும் விடத்தக்கவை. இனி கொள்ளத்தக்கவைகளைக் கூறி யருள்கின்றார்.)

ஒப்பற்ற பிரம்மசொரூபமாகிய என்னையே சித்தத்தின்கண் வைத்தல், இருவினைகளையும் ஒழிப்பவர்களாகிய ஞானிகள் வசிக்குமிடங்களில் (ஏகாந்தத்தலம்) சேர்தல், குரு பணிவிடை செய்தல், ஆன்ம அனான்ம பதார்த்தங்களின் சொரூபத்தை உள்ளவாறு பகுத்தறியும் விவேகம், பிறப்பு, மூப்பு, வியாதி, மரணம் இவற்றால் உண்டாகும் துக்கங்களை அடிக்கடி சிந்தித்தல் ஆகிய இவை அனைத்தும் ஞானசாதனங்களாகும். இனி இத்தகைய சாதனங்களால்

முழுமுட்சுக்க ளடையாகிற்கும் ஞேயவஸ்துவின் சொரூபத்தைக் கூறுதும் கேட்பாயாக.

ஏ பார்த்த! அந்த ஞேயவஸ்துவானது உற்பத்தி நாசமற்றது. எப்போதுமிருக்கும் மகிமைபொருந்தியது. கூறும் பட்சத்தில் சத்து அசத்து என்று கூறும் குறைபாடில்லாமல் பிரகாசிப்பது தான் பூரணமாய் நீக்கமற எங்கும் நிறைந்து நிற்றலின், எங்கும் கை, கால், காது, சிரசு முதலிய அங்கங்களை யுடையதாயிருக்கிறது.

விஷயங்களைக் காணுகிற்கும் இந்திரிய முதலிய வனைத்திலும் அறிவாய் நின்று தோற்றுவிப்பது. தனக்கென இந்திரியங்கள் ஒன்றுமில்லாமலே இருக்கும் தன்மையது. தான் எவ்வித வஸ்துவோடும் சம்பந்தியாமலே சகல பிரபஞ்சங்களையும் தானே தரித்துநிற்பது. சத்வாதி குணங்கள் ஒன்றுமில்லாமலே அக்குணங்களைப் பொருந்தி யனுபவிப்பது. பஞ்சபூத பௌதிகங்களின் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பது. தனக்கெவ்வித விகாரமுமின்றியே ஸ்தாவர ஜங்கம ரூபங்களாய் இருப்பது. இத்தன்மையதென்று சொல்லவும் அறியவும் கூடாதபடி அதி சூக்குமமானது. உண்மையில் அது ஏக சொரூபமாகவிருந்தும், பேதமுண்டானதுபோலச் சரீரங்கள்தோறும் இருந்து பிரகாசிக்கின்றது. மேலும் அந்த ஞேயவஸ்து உருவமற்றதாய், அதிக தூரமாய், யாவும் தானாய், அதிக சமீபமாய் உள்ளது. சகல நாமரூப வஸ்துக்களையும் சிருட்டித்து மீண்டும் சங்காரம் செய்வது. ஒப்பற்ற சூரிய சந்திராதி ஜோதிகளுக்கெல்லாம் உள்ஜோதியாகி யொளிர்வது. ஞானரூபமாயும், ஞானத்திற்கு விஷயமாயும் உள்ளது.

ஏ பார்த்த! இத்தகைய பெருமைவாய்ந்த ஞேயவஸ்துவானது முன்பு கூறப்பட்ட ஞானசாதன குணங்களால்

அனுபவமாக அறியத்தக்க பொருளாம். இப்போது தேகமாகிய க்ஷேத்திரத்தின்கண் பொருந்தியுள்ள ஞானசாதன குணங்களையும், அக்குணங்களால் சாக்ஷாத்கரிக்கப்படும் ஞேயவஸ்துவின் இலக்கணங்களையும் சுருக்கமாக உனக்கருளிச் செய்தேன்.

(இப்போது பகவான் இதற்கு அதிகாரிகள் யார் என்பதைக் கூறியருள்கின்றார்.)

ஏ அர்ச்சுனா! எனது வாக்கை யலட்சியம் செய்யாமல் யான் முன் உரைத்த க்ஷேத்ரம், ஞானம், ஞேயம் என்ற முப்பொருள்களையும் என்னிடத்து அனன்னிய பக்தியுடையோரே யுள்ளபடி உணர்வார்கள். அவ்வாறுணர்ந்த எனது பக்தர்கள் பிறப்பிறப்பை யுண்டாக்கும் மாயையாகிய கடலைக் கடந்து முமூட்சுக்களால் இச்சிக்கப்படும் நிரதிசயானந்த சொரூபனாகிய என்னை யடைவார்கள்.

(பகவான் தேகம் ஜீவன் இவற்றின் அநாதித்தன்மையை அருளிச்செய்கின்றார்.

ஏ பார்த்த! நாம் கூறிய பிரகிருதி புருடன் (தேகம் ஜீவன்) இவை யிரண்டிற்கும் உண்மையின் காரணத்தைக் கண்டறிபவர் ஒருவருமில்லை. ஆதலின் இவை அநாதியென நீ யறிதி. இனி இவற்றின் செய்கைகளைப்பற்றிக் கூறுதும் கேட்பாயாக.

செய்யப்படும் வினைகளுக்கு பிரகிருதியாகிய தேகமே காரணம். இத்துன்பங்களை உண்ணுநிற்பது புருடனாகிய ஜீவனாகும். இந்தச் சீவன் மாயாரூபப் பிரகிருதியாகிய உடலின்கண் இருந்து, அவ்வுடலால் உண்டாக்கப்பட்ட சுகதுக்கங்களை அநுபவியா நிற்பன். இச்சீவன் இது நான், இவை என்னுடையவை என்ற தாதான்மியங்களைப்

பொருந்தி யிருத்தலால் யோனிகளில் ஜனித்தும் மரித்தும் உழன்றுகொண்டிருப்பன்.

என் நண்பனான பார்த்தா! இந்த ஜீவரூபமான க்ஷேத்திரக்ஞன் என்னும் புருடன் இத்தேகத்திலிருப்பினும் இவன் சர்வத்திலும் வேறானவன். ஆதலின் இவனே (சுக துக்காதிகள் அனைத்தையும் புஜிக்கும் போக்தாவும்,) (தேகேந்திரியாதிகள் அனைத்தையும் அறிவு சொரூபமாக விருந்து பார்க்கின்ற) உபதிருஷ்டாவும், எப்பொருட்கும் அது அதுவாய் ஒத்திருக்கும் நாதனும் மகேசுரனும் பரமாத்மாவுமாக விளங்குகிறான்.

(பகவான் பிரகிருதி புருஷ விவேகமுடைய ஞானியின் பெருமையை அருளிச்செய்கிறார்.)

(ஹே அர்ச்சுன! மேலே கூறியபடி க்ஷேத்ரக்ஞனாகிய புருடனையும், சுக துக்காதி குணங்களையுடைய அவித்தியா வடிவப் பிரகிருதியையும் உள்ளபடி எவன் அறிந்தானோ அப்புருடன் பிராப்த கர்மவசத்தால் கிடைத்த போகங்களை எப்படி (சாத்திரவிதியைக் கவனியாமல் புஜித்துக் கொண்டு) ஜீவிப்பினும் பிறவியை அடையமாட்டான்.

[இத்தேகம் மித்தையாகிய அநித்திய சடப்பொருள் என்றும், இதில் வசிக்கும் சாக்ஷியாகிய ஆன்மசொரூபமே தானென்றும் குருசாத்திர மூலமாய், அனுபவமாய் எவன் அறிகிறானோ அவன் பிறப்பிறப்பற்ற முத்தியை யெய்துவன் என்பதாம். அத்தகையபுருடன் பிராரப்த கர்மபலனாகிய போகங்களை அனுபவித்துக்கொண்டிருப்பவனாகக் காணப்படினும், அவன் தான் ஒன்றைச் செய்கிறவன் அல்லது செய்விக்கிறவன், ஒன்றைப் புசிக்கிறவன் என்ற அபிமானமின்றிச் சாக்ஷிமாத்திரமாகவே இருப்பன்.]

(ஆன்ம ஞானத்தை யடையவும அதிகாரிகளின் பேதத்தால் சாதன வகைகளில் வித்தியாச முண்டென் பதை ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! சகல தேகங்களிலும், எங்கும் நிறைந்து அகண்ட சொரூபமாக நிற்கும் பரமான்மாவைச் சிலர் தியான ரூபமான சிந்தனத்தினுல் தமது உள்ளத்தின் கண் சாக்ஷாத்கரிப்பர்.

வேறு சிலர் சாங்கிய யோக மார்க்கத்தால் அப்பர மான்ம சொரூபத்தின் சர்வ வியாக நிலைமையைச் சாக்ஷாத்கரிப்பர்.

இந்த இரண்டு மார்க்கங்களாலும் அந்த ஞானத்தை அடையத்தக்க அறிவு விளக்கமில்லாதோர் ஆசாரியன் இதுவே தெய்வம் என்று உபதேசித்த ஒன்றையே சிரத்தை யோடு தியானம் செய்து, அத்தியான வாயிலாக அவர் களும் பிறவியை யொழித்துக் கொள்வார்கள்.

[இப்போது கூறப்பட்டவற்றில் முதல் மார்க்கத்தால் ஞானத்தை அடைவோர் உத்தம அதிகாரிகளாவர். இரண் டாவது மார்க்கத்தை அனுசரிப்போர் மத்திம அதிகாரிகள். மூன்றாவதாகிய கடைசி மார்க்கப்படி ஞானமடைவோர் மந்ததர அதிகாரிகளாவர்.]

மற்றபடி சரமும் அசரமுமாகிய தேகங்களைத் தரித்துக் கொண்டிருக்கும சகல ஜீவர்களும் துக்கத்தை அனுபவிப் பதன் காரணம் என்னவெனில், அவர்கள் க்ஷேத்திரக்ஞன் (பிரகிருதி புருஷன்) ஆகிய இரண்டின் தன்மையை விசாரித்தறியாத குற்றமேயாகும்.

(இங்கு பகவான் "சரமும் அசரமுமாகித் தேகங்களைத் தரித்துக்கொண்டிருக்கும் சகல ஜீவர்களும்" என்றருளிய தில் ஆன்மாவின் வியாபக இலக்ஷணம் அடங்கியுள்ளது.

இதனால் தாவர ஜங்கமமாகிய இரண்டு உருவங்களிலும் ஆன்மா உள்ளது என்று அறியக் கிடக்கிறது. ஆனால் கல்லிலும், மரத்திலும், மிருக பட்சிகளிலும், மனிதனிலும் உள்ள ஆன்மா ஒரே விதமாயினும் அறிவு விருத்தியில் தாரதம்மியமுண்டு. அவஸ்தா பேதம் என்று கூறலாம். மனிதனிடத்திலேயே அவஸ்தா பேதத்தால் அறிவு விருத்தியில் தாரதம்மியம் காணக்கிடக்கிறது. சாக்கிரத்திலுள்ள மனிதனுக்குப் பூரண அறிவிருக்கிறது. சொப்பனத்தில் அறிவு விளக்கம் குறைவே, சுழுப்தியில் அறிவு சாக்ஷிமாத்திரமாக இருக்கிறதேயன்றி அதன் விருத்தி பூரணமாய் ஒடுங்கியிருக்கிறது. இவ்வாறே மற்றப் பிராணிகளில் ஓரறிவு முதல் ஐந்து அறிவுவரை யுளது. தாவரங்களுக்கு ஸ்பரிச உணர்ச்சி ஒன்றேயுண்டு. கல் முதலியவற்றில் ஆன்மநிலை சுழுத்தியின் நிலைமையிலிருக்கிறது. தாவரங்களின் இலை காய் கனி முதலியவற்றைப் பற்றி நமது உரோமம், நகம் இவற்றைக் கழிப்பது போல் அவற்றிற்கு இம்சையை உண்டாக்குவதில்லை யென்றும், ஆகையால் இலை, காய், கனி முதலியவற்றை யுண்பதில் ஜீவ இம்சையில்லை யென்றும் மற்ற ஈரறிவுமுதல் உடைய பிராணிகளை வதைத்தல் கொலை பாதகமாகும் என்றும் தெள்ளிதின் விளங்கும்.]

ஏ பார்த்த:—நாசத்தையுடைய பூதங்கள் தோறும், நாசமற்றதாய் நிர்விகார ரூபமாய்க் கலந்துள்ள வேதப் பொருளான பரமான்மாவை சர்வ பூதங்களிலும் ஏகரூபமாய்ச் சாக்ஷாத்கரிக்கிறவன் எவனோ அவன் மங்களமான வனைத்தும் கண்டவனாவன்.

ஸ்தாவர ஜங்கமரூபமாகிய சகல வஸ்துக்களிலும் நிறைந்திருப்பதாகிய ஆன்ம சொரூபத்தை அத் தன்மையா

கவே சாக்ஷாத்கரிக்கும் அறிஞனே பிறப் பிறப்பாகிய துக்கத்தை ஒழித்து நித்தியானந்தமாகிய மோக்ஷ நிலையை அடைகிறான்.

(இவ்வாறு ஆன்ம சொரூபத்தைச் சாக்ஷாத்காரமாக அறிந்தவனே முத்தி யெய்துவான் என்றருளிய ஸ்ரீ பகவானை நோக்கி அர்ச்சுனன் வினவுகிறான்.)

அர்ச்சுனன்:—"பரந்தாமனே! சுகாசுக கருமங்களை உண்டாக்குகிறவனும், தேகங்கள் தோறும் வேறுவேறாய் இருந்து சுக துக்கரூபமான பலன்களைப்பூஜிக்கிறவனுமாகிய ஆன்மாவைச் சர்வ பூதங்களிலும் ஏகமாய்க் காண்பது எவ்வாறு?" என்று வினவினான்.

பகவான்:—ஏ பார்த்த! க்ஷேத்திரக்ஞனை புருடன் விகாரமற்றவனென்றும், மாயாவடிவப் பிரகிருதியாகிய தேகமே சகல கருமங்களையும் செய்கின்றது என்றும் கண்ட விவேகியாகிய புருடனே உண்மையைக் கண்டவனாகும். ஆன்மா நிர்க்குணனாதலின், தேகம், எல்லாக் கருமங்களையும் செய்யினும், அவற்றோடு சம்பந்தித்திரான்.

(மேலே கூறியதை ஸ்ரீ பகவான் இப்போது திருட்டாந்த பூர்வமாய் அருளிச் செய்கின்றார்.)

ஆகாசம் நல்லன தீயனவாகிய எல்லாப்பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித் திருந்தாலும் அவற்றோடு சம்பந்தப்படாமலே தாக்கற்று நிற்பதுபோல், பரமான்மா சகல தேகங்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருந்தாலும் அத் தேகங்களின் சுபாசுப கருமங்களோடு சம்பந்தியாமலே யிருப்பன்.

ஆதித்தன் தான் ஒருவனாகவே நின்று உலகிலுள்ள சகல வஸ்துக்களிலும் பொருந்தியிருக்கும் இருளை நீக்கிப் பிரகாசிக்குந் தன்மைபோல் க்ஷேத்திரக்ஞனை பரமான்மா ஒருவனே சரா அசரங்களாகி எல்லாச் சரீரங்களிலும் வியாபித்து நின்று அவற்றைப் பிரகாசிப்பான்.

(சூரியன் பல பேதங்களாய் உள்ள சகல வஸ்துக் களின் இருளை நீக்கிப் பிரகாசித்துக் கொண்டிருந்தாலும் அவ் வஸ்துக்களின் பேதத்தால் தான் பேதமடையான். அவற்றின் சுத்தம் அசுத்தங்களால் தான் எவ்வித விகாரமு மடையான். அதுபோலவே பரமான்மா சகல சரீரங்களி லும் வியாபகமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தாலும் எவ்வித பேதமாவது அடையான் என்பதாம். இத்தகைய திருட்டாந்த தாட்டாந்தங்களின் விஷயத்தில் எவ்வளவு சம்பந்தப்பட் டிருக்கிறதோ அது வரையில் மட்டுமே ஒத்திட்டுப் பார்த்துக் கொள்ளவேண்டும்.)

ஏ பார்த்த! தேகேந்திரியாதிக ளனைத்திற்கும் அதீத மாய் நிற்கும் க்ஷேத்திரக்ஞனோடு உடம்பிற்குரிய நாமம், ஜன்மம், ஜராமரணம் என்ற தருமங்களையும் இப் பூமியின் கண் வேறு பிரித்தறியா நிற்பவர் முத்தியை யடைந் தவராவர்.

பதின்மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

# 14-வது * குணத்ரய அத்தியாயம்

[முன்பு க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞாது சம்யோகத்திற்கு ஈசுவராதீனத் தன்மையுளதென்றும், அதில் குணசங்கத்தையே ஜன்மத்திற்குக் காரணமென்றும் அருளிச் செய்ததால், இப்போது எந்த எந்த குணத்தில் எந்த எந்தப் பிரகாரமாக சங்கமுள தென்பதையும், அக் குணங்கள் எவை என்பதையும், அவை எவ்வாறு ஜீவனைப் பந்திக்கின்றன வென்பதையும் சத்துவாதி குணங்களினின்றும் அதிகாரிக்கு எவ்வாறு முத்தியுளதா மென்பதையும், முத்தனை புருஷனுடைய லட்சணங்கள் எவை என்பதையும் விவரமாக அருளிச் செய்யும் பொருட்டு பகவான் இப் பதினான்காவது அத்தியாயத்தை ஆரம்பிக்கிறார்.]

ஏ பார்த்த! மிக்க உத்தமமானதும் சிரேஷ்டமானதுமாகிய ஞானத்தின் சுபாவமான அநுஷ்டானத்தால் என்னை அபேதமாகவடைந்த ஞானிகள் சிருஷ்டி காலத்தில் மறுபடி பிறவார்கள்; பிரளய காலத்தில் இறவார்கள். இந்த ஞானத்தின் சுபாவம் எத்தன்மைய தென்று வினவுவாயாயின் அதனையும் இனிக் கூறுதும் கேட்பாயாக.

ஏ புண்ணியத்தையுடைய அர்ச்சுன! சத்துவாதி முக்குணங்களால் பேதமாகப் பரிணமங்களையடையும் எனது மாயையே கருப்பாதானத்தின் தானமாம். அம்மாயையில் நான் (உலகைச் சிருஷ்டிக்க வேண்டும் என்னும்) சங்கற்பரூபமான கருப்பத்தைத் தரிப்பிப்பேன். அதனாலே பூதங்களனைத்தும் உற்பத்தியாகும்.

---

* இதற்கு வடமொழியில் "குணத்ரய விபாக யோகம்" என்று பெயர்.

இவ்வாற்ருல் நால்வகை யோனிகளும் உண்டாகும். தேவர்; மநுடர் முதலிய எல்லாச் சரீரங்கட்கும் அம்மாயையே மாதா வடிவினளாவள். பரமேசுவரனுகிய நாமே கருப்பாதான கர்த்தாவான தந்தையாவோம்.

(பரமேசுராதீன பிரகிருதி புருட சம்பந்தத்தால் பிராணிகளின் உற்பத்தியை நிரூபணம் செய்தபின் பிரகிருதியாகிய மாயை சீவனுக்குப் பந்தத்தை யுண்டாக்குவதைப் பற்றி பகவான் அருளிச் செய்கின்ருர்.)

ஏ திண்ணிய புயங்களையுடைய பார்த்த! நாம் கூறிய மாயையாகிய மூலப்பிரகிருதி முக்குணங்களையுடையது. அம் முக்குணங்களையுடைய மாயையானது சீவான்மாவைப்பற்றி பந்தித்துள்ள விதத்தை அறிவிக்கிருேம்.

அம் மாயையின் மூன்று குணங்களுக்கும் சத்துவம், இரஜசு, தமசு என்று பெயர். இவையே சுகதுக்காதிகளான சகல பலன்களையும் ஜீவனுக்களிப்பனவாகும். அத்தகைய சத்துவாதி குணங்களின் செயல்களைக் கூறுவோம் கேட்பாயாக.

இந்த மூன்று குணங்களில் சத்துவகுணம் நிர்மலத் தன்மையால் படிகத்தை யொத்தது, சொச்சமானதால் பிரகாச முடையது. ஞானத்தை யுண்டுபண்ணத் தக்கது. சாந்த முடையதாதலின் துக்கமற்ற சுகமானது. இது சுக துக்கத்தாலும் ஞான சங்கத்தாலும் ஆன்மாவைப் பந்திக்கின்றது. இது பிரகாசமுடையதாதலால் மூலப்பிரகிருதியின் தமோ குணத்திலுதித்த ஆவரணமாகிய இருளை அழிக்குந் தன்மையுடையது.

இரசோகுணம் இராகரூப முடையது. (கிடையாத வஸ்து கிடைக்க வேண்டு மென்னும் ஆசையையும், கிடைத்த வஸ்துவில் பிரீதியையும், உண்டாக்குவது.

காவிக்கல் போன்ற (சிவந்த) நிறம் பொருந்தியது. இது இலௌகிக வைதிக கருமங்களோடு ஜீவான்மாவைப் பந்திப்பதற்கு ஏதுவாக விருப்பதாகும்.

தமோகுணம் கருநிற முடையது. அஞ்ஞானத்திற் கேதுவானது. மயக்கம், சோம்பல், நித்திரை யிவற்றால் ஜீவான்மாவைப் பந்திப்பது.

ஏ கீர்த்தி பொருந்திய அர்ச்சுனு! சத்வகுணமானது ஆன்மாவைச் சுகத்திற் பொருத்துகிறது. இராசோகுணம் கருமங்களில் பொருத்தும். தமோகுணம் ஞானத்தை மறைத்து அறியாமையாகிய அஞ்ஞானத்தில் பொருத்துவிக்கும் என்று உணர்வாயாக.

இந்த மூன்று குணங்களும் மாறி மாறித் தத்தம் காரியங்களைச் செய்யும். இவற்றில் ஒன்று மேலெழும்போது மற்றை யிரண்டும் கீழடங்கும். சத்துவம் மேலெழும்போது இரஜசு தமசு என்ற இரண்டு குணங்களும் கீழடங்கி விடும். இரஜோ குணம் மேலெழும்போது சத்துவ தமோகுணங்கள் கீழடங்கிவிடும். தமோகுணம் மேலோங்கின் சத்துவ இரஜோ குணங்கள் கீழடங்கிவிடும்.

(கவனம் வைத்து நோக்கின் இதை யநுபவமாக உணரலாகும். இந்த மூன்று குணங்களின் விருத்திகள் இத் தன்மையவென வறிந்தாலன்றி அவற்றில் நீக்க வேண்டியவற்றை நீக்கவும் கொள்ள வேண்டியவற்றைக் கொள்ளவும் ஒருவரால் இயலாது. ஆதலின் பகவான் அக் குணங்களின் சுபாவத்தைக் கூறுகிறார்.)

ஏ பார்த்த! எப்போது அறிவின் பிரகாசம் மிகுந்து நிறைந்த சாந்தம் தோன்றுகிறதோ, அதுவே சத்துவகுணம் என்று அறிதி. கருமங்கள் செய்வதில் மனம் நாடி ஆசையானதுண்டாகி லோபகுணம் வந்தடையின் அப்போது

இரஜோகுணம் மேலோங்கிய தென்று அறிவாயாக. ஒரு கருமத்தைப் பற்றி சிந்திக்கையில் இது தக்கது தகாதது என்று அறியாதபோதும், சோம்பல், மயக்கம், உறக்கம் இவை நேரிடும்போதும் தமோகுணம் அதிகரித்ததென்று உணர்வாயாக.

(இப்போது மரணகாலத்தில் விருத்தி யடைந்துள்ள சத்துவாதி குணங்களின் பலனைப்பற்றி பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ கிரீடி! மரணகாலத்தில் சத்துவகுணம் மேலோங்கி யிருக்கப் பெற்றோர் தேவ யோனிகளில் ஜனிப்பார்கள். இரஜோகுணம் மேலோங்கி யிருக்கும் காலத்தில் இறந் தோர் மனித யோனிகளிற் பிறப்பார்கள். தமோகுணம் விருத்தி யடைந்திருக்கையில் மரித்தோர் மிருகாதி மூட யோனிகளிலே பிறப்பார்கள். இச் சத்துவாதி குணங் களின் வேறு பயன்களையும் நீ யறியும்படி உரைக்கிறோம் கேட்பாயாக.

சாத்துவிக தருமத்தின் பலம் நிர்மலமானதாம். இரா ஜஸ தருமத்தின் பலம் துக்கத்தை யனுபவித்தலாம். தாமஸ தருமத்தின் பலம் அஞ்ஞானமாம். மேலும் சத்துவ குணத்தினின்றும் ஞானமுண்டாம். இரஜோ குணத்தி னின்றும் உலோபமுண்டாம். தமோ குணத்தினின்றும் மோகங்களும் அஞ்ஞானமுமுண்டாம்.

எப்போதும் சுத்தமான சத்துவகுணத்தைப் பிரதான மாகவுடைய மனிதர் மேலுலகமாகிய பரலோகத்தை யடையா நிற்பர். மத்தியகுணமாகிய இரஜோகுணத்தைப் பிரதானமாக வுடையோர் மத்திய உலகில் மாநுட ஜன்ம மாய் வாழ்வார்கள். அதமமாகிய தமோகுணத்தைப் பிர தானமாக உடையோர் அதோகதியாகிய பசுவாதி ஜன்மங் களை யடைவார்கள்.

ஏ பார்த்த! எவன், "இச் சத்துவாதி குணங்களே சர்வ கர்மங்களுக்கும் கர்த்தாவாம். வேறு கர்த்தாயில்லை. நான் அவற்றின் கர்த்தாவல்ல. நான் விகார மற்றவன்" என்று அக்குணங்களையும் சாக்ஷியான ஆன்மாவாகிய தன்னையும் வேறு பிரித்தறிகிருனே அப் புருடன் பிரம்மத் தன்மையை யடைகிருனுதலின் அவன் முத்தி இன்பத்தை யடைந்தவனுவான்.

(அப் புருடன் எவ்வாறு முத்தியின்ப மெய்துவான் என்பதைப் பகவான் அருளிச் செய்கிருர்.)

"ஏ பர்க்குண! இத் தேகத்தோடு கூடி சீவிக்கையி லேயே பிறப்பிறப்பிற்குக் காரணமாகிய இம் முக்குணங் களையும் மாயாமயம் என்றறிந்து அவற்றைப் பரித்தியாகம் செய்தவன் பிறப்பு மூப்பு இறப்பு என்ற இவற்றின் துக் கங்களனைத்தையும் பரித்தியாகம் செய்து மோட்ச வின் பத்தை யடைகிருன்" என்று பகவான் அருளிச் செய்த தைக்கேட்ட அர்ச்சுனன் பின்வருமாறு வினவுகின்றுன்.

அர்ச்சுனன்:—"ஏ பரந்தாமா! கடத்தற்கரிதாகிய இச்சத் துவாதி முக்குணங்களையும் கடந்த புண்ணிய புருடர் களின் சுபாவமும், அவர்கள் அக் குணங்களை எவ் வித உபாயத்தால் கடந்தார்க ளென்பதையும், அவர் களது இலக்ஷணங்களாகிய குறிகளையும் அடியேற் கருளிச் செய்ய வேண்டுகிறேன்" என்றனன்.

(பகவான் முக்குணங்களைக் கடந்தவனது இலக் கணத்தை அருள்கின்றுர்.)

பகவான்:-ஏ பார்த்த! மாயாமயமாகிய சத்துவம், இராஜசு, தமசு என்ற முக்குணங்களின் காரியங்களாகிய பிர காசம், பிரவிர்த்தி (தொழில்) மோகம் இவற்றை

அடையாதபோது இச்சித்தலும், அடைந்தபோது துவேஷித்தலும் செய்யாதவன் குணாதீதன் எனப் படுவான்.

(இப்போது அவன் சுபாவத்தை அருளிச் செய்கிறார்.) அவன் உதாசீன புருடன் போல் இராகத்துவேஷங்களை யடையாதவனாய், அக் குணங்களோடு கூடி யிருந்தே அவற்றால் அசைக்கப் படாதவனாக விருப்பன். மானம் அவமானங்களிலும், சுக துக்கங்களிலும், மண் பொன்னி லும், சத்துரு மித்திரரிடத்திலும், ஸ்துதி நிந்தைகளிலும், சமதிருஷ்டி யுடையவனாக விருப்பான். இக் குணங்க ளோடு எனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை. இவற்றை யெல்லாம் பிரகாசிக்கும் ஆன்மாவே நான் என்ற திடநிச் சயமுடையவனே குணாதீதனாவான்.

(இனிப் பகவான், அந்த அதிகாரி எந்த உபாயத்தால் அம் முக்குணங்களைக் கடந்து விடுகிறான் என்பதை அருளிச் செய்கிறார்.)

இவர்கள் எவ்வகையாலேனும் ஒப்புயர்வற்ற பரமேசு வரனாகிய என்னிடத்தில் வைத்த அநந்நிய பக்தி யோகத் தினால் சத்துவாதி முக்குணங்களையும கடந்து நித்தியமாகிய மோக்ஷவீட்டை யடையா நிற்பர்.

ஏ பார்த்த! என்றும் கெடாத ஞானமும், அழியாத மோக்ஷமும், நிரதிசயமான ஆனந்தமும், சாசுவதமான தருமமும் என்னிடத்தினின்றே உண்டாகின்றனவாதலின் என்னிடத்து வைத்த நீங்காத அநந்நிய பக்தியினால் அதி காரிக்கு மோக்ஷம் உளதாகும்.

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

# 15-வது * பிரபஞ்ச அத்தியாயம்

[முன்பு பதினான்காம் அத்தியாயத்தின் முடிவில் அநந்நிய பக்தியினால் பரமேசுரனை என்னைச் சிந்தனம் செய்வோர் ஞானவாயிலாக முத்தியடைவர் என்று பகவான் கூறியருளினார். அத்தகைய அநந்நிய பக்தியும் ஞானமும் சம்சாரத்தில் விரக்தியடைந்த வைராக்கிய புருடனுக்கே உளவாமாதலின், வைராக்கிய பூர்வமாக ஞானோபதேசம் செய்யக் கருணை கூர்ந்த பகவான் சம்சாரத்தை விருக்ஷ ரூபமாக வர்ணித்தருளுகின்றார்.]

(இப்போது பகவான் சம்சாரரூபமான மாயையைத் தலை கீழாகவுள்ள ஒரு விருக்ஷத்திற்கு ஒப்பிட்டு விவகரித்தருள்கிறார்.)

ஏ பார்த்த! மஹா மாயையால் உண்டாக்கப்பட்ட இச் சம்சாரமாகிய விருக்ஷமானது வேர் மேலாகவும் கிளைகள் கீழ் நோக்கியு முடையது. அழியாதது வேதத்தினுள்ள கர்ம காண்டங்களாகிய இலைகளையுடையது இது அசுவத்தம் (அரசமரம்) என்ற பெயருடையது. இதன் சுபாவமாகிய வகை யாதெனின் கூறுதும்.

இது தனக்குச் சமானமான தொன்றும் இல்லாதபடி மஹத்தாகிய பிரமசொரூபத்தின் கண்ணின்றே உண்டாகும். கிரமப்படி ஆகாய முதல் தூல உருவங்கள் ஈருகவுடைய சகல பிரபஞ்சங்களும் உண்டாகின்றபடியால் மூல காரணமான பிரம்மமே வேராகவுடையது. பிராணிகளின் வினைவசத்தால் வராநின்ற உலகங்களாகவும் உயிர்களாகவும் எழுகின்றதால் காரிய உபாதிகளையுடைய

---

* இதற்கு வடமொழியில் "புருஷோத்தம யோக"மென்று பெயர்.

இரண்ய கருப்பாதிகளைத் தலைகீழ் நோக்கியிருக்கும் சாகை களாகவுடையது. தோற்றம் ஸ்திதி நாசம் உடைய பந்த ரூபமாகிய பிறவித்தொடர் என்ற அச் சம்சார விருட்சத் தின் பிரவாகமானது, ஒரு காலத்தும் முழுமையும் சூனிய மாகும்படி அழியாமையின் ஒரு தன்மையதாயுள்ளது.

ஏ பார்த்தா! கருப்பத்தில் உண்டான காலமுதல் இச் சம்சார விருட்சம் புண்ய பாவ கருமங்களால் வளரா நிற்கும் விருப்பமுடையதாதலால் அரிய நான்கு வேதங் களையே இலைகளாக வுடையதென அறிதி. இச் சம்சார விருட்சம் எதிர்காலத்தில் ஒரு நாள் இருக்குமென விரும்படி யில்லாததால் இதற்குப் பிரசித்தமான அசுவத்த விருட்சம் என்ற நாமம் சூட்டப்பட்டது.

[பிரம்மமே பிரபஞ்சங்கட்கும் மூலகாரணமாகையால் இச் சம்சார விருக்ஷத்திற்கு பிரம்மம் வேர் எனப்பட்டது. அது ஆனந்தமும் நித்தியமுமானதால் ஊர்த்துவமாம். அதாவது மேல்நோக்கி இருப்பதாம். அச் சம்சாரம் மாயாசம்பந்த முடையதாயும் பிறப்பிறப்பாகிய பெரும் பிணியை யளிப்பதாயும் இருப்பதால் அச் சம்மார விருக்ஷத் தின் சாகைகள் அதோமுகமா யிருப்பனவாம். அதாவது கீழ்நோக்கி யிருப்பனவாம். விருக்ஷம் எப்படி கந்தத்தினின் றுண்டாயிற்றோ அவ்வாறே இச்சம்சார விருக்ஷமும் புத்தி யினின்றும் நானுவகையான பரிணமங்களை யடைந்திருக் கிறது. சாதாரண விருக்ஷத்தில் துவாரங்கள் இருப்பது போல் இதில் சுரோத்திரம் முதலிய இந்திரிய துவாரங்கள் இருக்கின்றன. விருக்ஷத்தில் கிளைகளிருப்பது போல் இச் சம்சார விருக்ஷத்தில் ஆகாசாதி பூதங்கள் முதலிய தத்து வங்கள் பரந்து கிடக்கின்றன. இந்த விருக்ஷம் ஸப்த ஸ்பரிச முதலிய பத்திரங்களை யுடையது. தருமாதரும ரூப மான புஷ்பங்களையும், அவற்றினின்றும் உண்டாகும் சுக

துக்கங்களாகிய கனிகளையுமுடையது. கனிகளையுடைய விருக்ஷத்தில் பக்ஷிகள் வந்து சேர்வதுபோல் இச் சம்சார மாகிய அசுவத்த மென்னும் விருக்ஷத்தில் ஜீவகோடிகள் இருக்கின்றன. இச் சம்சார விருக்ஷத்தில் சுத்தம் பிரம்மம் சர்வ சாக்ஷிமாத்திரமாய், அதன் குணதோஷங்களில் சம்பந்தப்படாமல் தாக்கற்று நிற்கிறது.

இத்தகைய சம்சார விருக்ஷத்தை ஆன்ம ஞானமாகிய வாளால் மூலத்தோடு அழிப்பவனே முத்தியடைவான். [அதாவது அதன் சுகதுக்காதிகளாகிய கனிகளைப் புசியா மல் அவற்றில் இச்சை வையாமல் யாவற்றிற்கும் சாக்ஷி மாத்திரமாய் இருக்கும் நிலையாகிய ஆன்ம சாக்ஷாத் காரத்தை யடையும் அதிகாரி புருடனே மீண்டும் பிறவா முத்தியாகிய வீடடைவான்.]

(பகவான் மேலே கூறிய சம்சார விருக்ஷத்தின் அவய வங்களை இன்னொரு விதமாக விளக்கிக் காட்டுகிறார்.)

ஏ பார்த்த! இம் மாயா சம்சார விருக்ஷத்தின் கூறு பாடுகள் இவையாகும். இவற்றை நான் கூறியபடியே உள்ளபடி நுட்பமாக உணரா நிற்பவர் வேதத்தின் பொருள் முழுவதும் உணர்ந்தோராவார். இப் பெரிய சம் சார விருட்சத்தின் அவயவ கற்பனைகள் இன்னும் சில உள. அவற்றைக் கூறுதும் கேட்பாயாக.

எனது கண்மணிக் கொப்பாகிய பார்த்த! இச் சம் சார விருட்சமானது நானுவித யோனிகளின் வழியே பூமி முதலிய கீழ் உலகத்து வளர்வனவும், தேவலோக முதலிய மேல் உலகத்துள்ளனவுமான அளவிறந்த பிறவிகளாகிய கிளைகளையுடையது. (ஜீவர்கள் புண்ணிய கருமவசத்தால் ஊர்த்துவ யோனிகளிலும், பாவ கருமவசத்தால் அதோ யோனிகளிலும் பிறக்கின்றன.)

பல ஜன்மங்களில் புசித்த போகானுபவத்தா லுண்டாகும் இராகத் துவேஷாதிக ளென்கிற வேரானது பல மாநுட வுலகின்கண்ணே (மாநுட தேகங்களில்) அஞ்ஞானத்தோடு கூடி வீழ்ந்திருத்தலின், இச் சம்சார விருக்ஷத்தின் வேர் கீழேயு முளதாகும். இந்த விருக்ஷம் பிரியாதுண்டாகின்ற சத்துவாதி குணங்களாகிய ஜலத்தால் வளரா நிற்கும். இந்திரிய சம்பந்தமான சப்தாதி விஷயங்களாகிய தளிர்களை யுடையது.

[முன்பு சம்சார விருக்ஷத்திற்கு மூலமாகிய பிரம்மமென்ற வேர் மேலாக உள்ளது என்று கூறப்பட்டது. அது முக்கியமான வேர். இராகத்துவேஷாதி வாசனைகள் அவாந்தர மூலமாகும். அதாவது இச் சம்சார விருக்ஷத்திற்கு உள்ளுக்குள்ளாக விருக்கும் வேர் போன்றது.]

(இச் சம்சாரம் அநிர்வசனீயம் என்று பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! இந்த மாயா சம்சார விருக்ஷமானது விழித்தால் பொய்யாகும் சொப்பனக் காட்சி போலவும் பொய்யாகிய தோற்றம் மாத்திரமாகவுள்ள பேய்த்தேர் (கானல் நீர்) போலவும், (ஜாலக்காரன் காட்டும்) தோன்றி உடனே மறையும் கந்தர்வ நகரம் போலவும் உள்ளதால் தனக்கென யாதொரு உருவமுமில்லாதது முதலில் இல்லாதிருந்து உண்டாவது. ஆதிகாலமும் பின்னர் அபாவமாகும் காலமும் இல்லாமையாலே அந்தமும் ஆதியும் அறியப் படாதது.

(இப்போது பகவான் இம் மாயா சம்சார விருக்ஷத்தைச் சோதிக்கும் உபாயம் கூறியருள்கின்றார்.)

இந்த மாயா விருக்ஷத்தினைத் திடவைராக்கிய மென்ற வாளால் வெட்டி, பிரம்ம சொரூபமாக இருந்தபடி

யிருந்தே இந்திர சாலம்போல மாயா சொரூபமான இப்பிரபஞ்ச மனைத்தையும் தோற்றுவிக்கின்ற ஆதியந்தமற்ற என்னைச் சரணமடைதலே, ஏ பார்த்த! பிரம்மத்தையறிதற்குத்தக்க உபாயமாகும்.

[மாயை அநிர்வசனீயம். அதுபோன்றே மாயாகாரியமாகிய சம்சார விருக்ஷமும் அநிர்வசனீயமாகும். அதனுடைய அநித்தியத்தன்மையை யுணர்ந்து அதனிடத்து, பூரண விரக்தியடைந்து அதனிடத்துண்டாகும் சந்தோஷம் துக்கமாதிகளில் தாக்கற்றவனாகி, ஈசுவரனிடத்து அநந்நிய பக்தி பொருந்தி யிருப்பதே பிரம்மான்ம ஐக்கிய ஞானமடைதற்கு மார்க்கமாகும்.]

ஏ அர்ச்சுனா! தம்மை யடைந்துள்ள இராகத்துவேஷாதி குணங்களை நிக்கிரகம் செய்த ஞானிகள் தரிசிக்கும் வண்ணம் தோன்றா நிற்கும் எனது சொரூபம் எத்தகைய சுபாவமுடையதெனின், சகல பிரபஞ்சங்களையும் பிரகாசிப்பிக்கின்ற சூரியன், சந்திரன், அக்கினி என்ற இவைகளின் ஒளியால் பிரகாசிப்பிக்கப்படாத தன்மையையுடைய சொப்பிரகாச சொரூபமானது வந்தடைந்தோர், பிறகு தமது சொரூபம் வேறொருவிதமாக தன்மையையுடையது. (அதாவது அச்சொரூபத்தை யடைந்தோர் அச்சொரூபமயமாய் விடுவார்களே யன்றி மறுபடி பிறவார் என்பதாம்.)

(சுவர்க்காதிகளை யடைந்த கர்மிகளும் பிரளயங்களிலுள்ள பிராணிகளும் மீண்டும் ஜனியாநிற்க உம்மை யடைந்தோர் மட்டும் ஏன் ஜனியார் என்ற அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் காரணம் அருள்கின்றார்.)

ஏ பார்த்த! குடத்தில் தோன்றும் கடாகாயம் அசைதற்போலும், தடாகத்தில் பிரதிபலித்துள்ள பிரதிபிம்பச் சந்திரன் போலும் சரீரங்கள் தோறும் அன்னியமாய் ஜீவன்

போல் நின்றே சுரோத்திராதி புலன்களையும் மனதையும் அவ்வவற்றின் சுபாவ விஷயங்களில் நான் பிரேரிப்பேன்.

[கடம், தடாகஜலம் ஆகிய உபாதிகள் நசித்ததே கடாகாயம் மகாகாயத்திலும், பிரதிபிம்ப சந்திரன் அதிஷ்டான சந்திரனிலும் கலந்து விடுவது போல், ஆன்ம ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கியதும் சீவான்மா தனது சொரூபமான பிரம்மத்தில் கலந்து மறுபடி ஜனியாதென்பது பெறப் படுகிறது.]

(இச் சீவான்மா எக்காலத்திலும் மனம் முதலிய ஆறு இந்திரியங்களையும் ஆகர்ஷணம் செய்கின்றான் என்ற அர்ச் சுனன் சங்கைக்குப் பகவான் கூறியருள்கின்றார்.)

ஏ பார்த்த! மலர்களிலுள்ள இனிய மணத்தைக் காற் றானது எப்படி கிரகித்துக்கொண்டு செல்கின்றதோ அவ் வாறே ஈசுவர அம்சமாகிய சீவன் ஓர் சரீரத்தை விட்டு நீங் கும்போது மனம் முதலிய ஆறிந்திரியங்களையும் கிரகித்துக் கொண்டு செல்வான். நிலையில்லாத தேகத்தை விடுவதும் அடைவதுமாகிய இச் சீவான்மா சுரோத்திரம் முதலிய இந்திரியங்களை ஆசிரயித்தே சப்தம், இரசம், ரூபம் முதலிய விடங்களை நுகருகின்றான்.

அத் தன்மைய ஆன்மாவை அசுத்த அந்தக்கரண முடைய அவிவேகிகள் முயற்சி செய்தாலும் காணார்கள். சுத்த அந்தக்கரண முடைய அறிவாளிகள் மட்டுமே ஞானத் தாலும் தியானாதி யோகங்களாலும் பிரத்தியட்சமா யறியா நிற்பர். இவ் வான்மாவின் சுபாவத்தை இன்னும் கூறுதும் அறிவாயாக.

ஏ தோள்வலியுள்ள வீரனாகிய அர்ச்சுனா! சட்சு முத லிய இந்திரியங்களைப் பிரகாசிப்பிக்கும் ஒளி நானாகவிருக் கிறேன். சர்வ அண்டங்களுக்கும் ஒளியளிக்கும் சூரிய

சந்திர அக்னியாகிய இவைகளினிடத்துள்ள பிரகாசமும் நானுகின்றேன். பிருதிவி ரூபமாக நின்று அதற்குக் கந்தமும், எனது பலமாகிய உரத்தையும் அதில் வைத்து அதிலுள்ள தாவர ஜங்கமரூபமான யாவற்றையும் தாங்கி நிற்பவனும் நானுகவே யிருக்கிறேன். ஆகாயத்தினிடத்தில் சர்வரசங்களின் ஆகாரமான சந்திரரூபமாய் நின்று உண்ணத்தக்க பண்டங்கள் யாவற்றிற்கும் அதற்குத் தகுதியான சுவையையளித்து அவைகள் கெடாதபடி வளர்க்கின்றவனும் பரமேசுரனுகிய நானுகின்றேன். தின்பன, நக்குவன, சுவைப்பன, உண்பன என்ற நான்கு வகையாகவுள்ள உணவுப் பொருள்களும் சுகத்திற்கேதுவாகும்படி, பிராணிகளின் சரீரங்கள்தோறும் ஜடராக்கினியாய் நின்று அவ்வுணவுப் பொருள்கள் ஜீரணிக்குமாறு பக்குவப் படுத்துவோனும் நானே.

ஏ பார்த்த! புண்ணிய கருமங்களையுடைய நல்ல மாந்தரின் சிறந்த அறிவும், பாவிகளாகிய கெட்ட மாந்தரின் அற்ப அறிவும் நானேயன்றி வேறில்லையென் றறியக்கடவாய். நான்கு வேதங்களின் பொருள்களை யறிபவனும், அவ்வேதங்களின் மெய்ப் பொருள்களைச் சுரங்களினுல் போதிக்கும் ஆசாரியனும் நானுகவே யிருக்கின்றேன்.

(இப்போது பகவான் அழியும் பொருள் இன்னது அழியாப்பொருள் இன்னதென அருளிச்செய்கின்றுர்.)

ஏ பற்குன! இன்னெரு விஷயமும் கூறுகின்றேம், கேட்பாயாக. அதாவது, இப்பிரபஞ்சத்தின்கண்ணே அழிதலையே உருவமாகவுடைய ஒரு பொருளும், அருவமாய் எதனுலும் அழிவில்லாமையாகிய தன்மையையுடைய ஒரு பொருளும் உண்டு. அழிவது அழியாதது என்ற இந்த இரண்டு பொருள்களையும் அறிவினுல் நன்றுக உற்று

நோக்கி ஆராய்ந்திடின், பிரம்மாமுதல் ஸ்தாவர மீருகவுள்ள நாமரூபத் தோற்றமான சரீரங்களனைத்தும் அழியுமென்றும், நாமரூபமற்ற ஆன்மா அழியாததென்றும் விளங்கும்.

(இப்போது பகவான் மேற்கண்ட இருவகைப் பொருள்களுக்கும் விலட்சணனாய் அவற்றோடு தாற்கற்று நிற்கும் பரமான்ம சொரூபத்தைப் பற்றி அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! அழிவது மழியாததுமாகிய இருவகைப் பொருள்களுக்கும் அந்நியமாய், அவற்றின் தோஷங்கள் ஒன்றும் பற்றாமல், உற்பத்தி நாசமின்றி, எவ்வகைக் குறைபாடுமின்றிச் சகலப் பிரபஞ்சங்களிலும் தனது சக்தியால் வியாபித்து நிற்பது எதுவோ அதுவே சச்சிதானந்த சொரூபமாகிய பரமான்மா என்பது.

இத்தகைய நிர்விகார நிரதிசயானந்த ரூபியாகிய என்னை யுள்ளவாறு உள்ளத்தில் அறிந்தவர்கள் எவ்விதப் பந்தமுமடையார். அனாதியாய் ஆதிகாரணனாயுள்ள இப் பரமான்மாவிற்கு ஆதியும் அந்தமும் உண்டென்று கூற முடியாது.

ஏ பார்த்த! இருக்காதி நான்கு வேதங்களையும் மொத்தமாய்ச் சொல்லத் தொடங்கினும் இப்பரமான்ம ஞானம் கொஞ்சமும் சொல்லக்கூடியதன்று. உலகமே இதை யறிந்திலது. இத்தகைய மிகவும் இரகசியமான ஒன்றைத் தோழனாகிய உன்மேல் வைத்த கருணையால் உனக்கு உபதேசித்தோம். இதையுடையவன் ஆன்மஞானம் பெற்று முத்தியின்ப மெய்துவன்.

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# 16-வது தேவாசுர சம்பத்து விபாகயோக அத்தியாயம்

[முன் அத்தியாயத்தில் பகவான் கூறியருளிய, மானுட தேகத்தில் பூர்வம் செய்துள்ள சுபாசுப கருமங்களின் வாசனையை தெய்வ சம்பத்து அசுர சம்பத்து என இரண்டாய்ப் பிரித்து விவரிக்கிறார். இவற்றில் தெய்வ சம்பத்து என்ற சுபவாசனை மோக்ஷத்திற் கேதுவாதலால் கொள்ளத்தக்கதாகும். அசுர சம்பத்தென்ற அசுபவாசனை பந்தத்திற்கு ஏதுவாதலின் தள்ளத்தக்கதாகும். ஆனால் ஒன்றைக் கொள்ளற்கும் மற்றொன்றைத் தள்ளற்கும் அவற்றின் தன்மை தெரிந்தாலன்றி கூடாது. ஆதலின் ஸ்ரீ பகவான் அந்த இரண்டு சம்பத்துக்களின் சொரூபத்தையும் அருளிச் செய்கின்றார்.]

ஏ பார்த்த! இப் பூவுலகின் கண்ணுள்ள மாந்தர், தேவர் அசுரர் என்ற இரு பகுப்பினராய வாழ்வார்கள். அவர்களுடைய சுபாவங்களைக் கூறுகிறோம் கேட்பாயாக.

(முதலில் பகவான் கொள்ளத்தக்கதான தெய்வ சம்பத்துடையோரின் சுபாவத்தை அருளிச் செய்கின்றார்.)

ஏ அரிய காண்டீபமெனும் வில்லையேந்திய அர்ச்சுனா! பயமின்மை, அந்தக்கரணங்களைச் சுத்தியாக்குதல், ஆன்ம சொரூப நிச்சயத்தில் இடம் பெற்றிருத்தல், கோபமின்மை, சத்தியம் மொழிதல், தியானம் தவம் உடைமை, வேத ஆராய்ச்சி செய்தல், தன்னைப் பெருமையாக எண்ணாமை, கோட் சொல்லாமை, கொல்லாமை, அன்னியர் செய்யும் அபசாரங்களைச் சகித்தல், பெருந்தன்மையான நடக்கை,

தானதருமங்கள் செய்வதில் விருப்பம், சகல ஜீவர்களிடத்திலும் கருணை, அகக்கரண புறக்கரண சுத்தம், இந்திரியங்களை விஷயங்களில் செல்லாதபடி தடுத்துத் தன் வயப் படுத்தல், ஆகிய குணங்களை யுடையோரே தேவ சம்பத்து உடையவர்களாம்.

(இனிப் பகவான் தள்ளத்தக்கதான அசுர சம்பத்துடையோரின் சுபாவத்தை அருளிச் செய்கிறார்.)

ஏ பார்த்த! இனித் தீய செயல்களைச் செய்யா நிற்கும் அசுர சம்பத்துடையவர்களின் சுபாவத்தைக் கூறுகிறோம். அவர்கள் இன்னது செய்யத்தக்கது என்றும் இன்னது செய்யத் தகாததென்றும் அறியமாட்டார்கள்; இந்திரிய சுத்தத்தையும் புனிதமாகிய ஆசாரங்களையும் கைவிட்டவர்கள்; சத்தியமில்லாதவர்கள்; அவிவேக முடையோர்; ஜகத் அதைச் சிருட்டிக்கும் கடவுள் ஒருவர், பாவ புண்ணியம் இவையாவும் பொய்யென்று கருதுவோர்; பெண் ஆண் இரண்டின் சேர்க்கையால் இயற்கையாகவேயாவும் உண்டாகின்றன வாதலால் ஈசுவரன் முதலியவை அனுவசியம் என்று வாதிப்போர்.

("யாவும் பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலும் ஆண் பெண் சேர்க்கையாலுமே இயற்கையாகவே உண்டாகின்றன. மற்றப்படி ஈசுவரன் பாவபுண்ணியம் முதலியயாவும் பொய். இவ் வுலக போகத்திற்கு மிஞ்சிய போகம் வேறில்லை. இவ்வுலக போகங்களில் ஸ்திரீ போகமே யாவற்றினும் உயர்ந்தது. மாதரே பெண் தெய்வம்" என்று இவ்வாறு கருதுவோர் உலகாயதர் எனப்படுவார்கள்.)

[முற்கூறிய உலகாயதர்களின் திருஷ்டியும் சாஸ்திரீய சிருஷ்டிபோல் இஷ்டந்தானோ என்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் கூறியருள்கின்றார்.]

ஏ பார்த்த! மேலே கூறப்பட்ட உலகாயதர்போன்ற அசுர சுபாவமுடையோர் விரும்பப்படாதவர்களாய், வருணாச்சிரம தருமங்களை வெறுத்துவிட்டனர். சத்தியத்தையும் ஆசாரத்தையும் கைவிட்டார்கள். விவேக புத்தியை இழந்து விட்டார்கள். அற்ப புத்தியோடு கூடிக்கொண்டார்கள். பெரும் பழியான காரியங்களையே செய்வார்கள். தங்கள் காரியங்களால் வரும் இலாப நஷ்டங்களையறியார்கள். இவர்கள் இவ்வுலகத்தை யழிப்பதற்காகவே அவதரித்தவர்கள் என்றறிதி.

(மேற்கண்ட உலகாயதன்போன்ற அசுரசம்பத்துடையோர் பூலோகத்தை யழிக்கும் குணம்பொருந்திய துஷ்ட ஜெந்துக்களாகிய தாமதயோனிகளில் ஜனிப்பார்கள். ஆதலின் அத்தகைய அதோகதிக்காளாகா திருக்கவேண்டினோர் அத்தகைய குணங்களை விட்டொழிக்க வேண்டும்.)

மேலும் அவர்கள் எவ்வளவு காலமாயினும் விஷய போகங்களில் பூரண மாகாதவைகளைப் பூரணமாக்க விரும்பி, உலகோர் தம்மை மெய்ப்பக்தர் என்று கருதுமாறு இல்லாத நற்குணங்களை இருப்பனபோல் காட்டி, அவிவேகம், குரோதம், துவேஷம் முதலிய தீயகுணங்களோடு பொருந்தியிருந்தும், தங்களுக்குத் தகுதியல்லாத அசத்தான தவங்களையே செய்யா நிற்பர்.

இன்னும் அவர்கள் மரணபரியந்தம் தங்களுக்குக் கிட்டாத பொருள்களின் மேலேயே சிந்தனையை வைத்திருப்பார்கள். இவ்வுலகில் அனுபவிக்க நேர்கின்ற வனிதையாதி போகங்களையன்றி, தருமமென்றுவது மோக்ஷமென்றுவது வேறொரு பொருள் மறந்தும் கிடையாதென்பர். பூமியிற் சனித்துப் பேராசையாகிய இவற்றால் பிணிக்கப்பட்ட இந்த அசுர சம்பத்துடையோர் உலகத்தின் அநித்

திய போகங்களை யனுபவிப்பதற்காக அநியாய வழிகளில் பொருளைச் சேகரிப்பார்கள்.

(இப்போது பகவான் இத்தகையோரின் மனநாட்டத்தையும் இவர்களடையும் நரகப்பிராப்தியையும் அருளிச் செய்கிறார்.)

ஏ பார்த்த! இவர்கள் அடைந்த தனம் முதலிய பொருள்களால் மனமகிழ்ச்சி யடைந்து "நாம் இந்தப் பொருள்களைச் சீக்கிரம் அடைவோம் என்றும்; இப்பகைவரை யொழித்து விட்டோம், இனியுள்ள மற்றப் பகைவரையும் அழித்து விடுவோம் என்றும், இவ்வுலக போக போக்கியங்களை எம்மைப்போல் அனுபவிக்கத்தக்க சமர்த்தர் ஒருவருமில்லை யென்றும், நமக்கு மேலானவர்களாகவும் சமமானவர்களாகவும் யார் இருக்கிறார்கள்? ஒருவருமில்லை" என்றும் கருதாநிற்பர்.

ஏ பார்த்த! இவர்கள் "நாம் ஜனக்கூட்டமும் வல்லமையும் சுகமும் அடைந்திருக்கிறோம். செல்வம் மிக்க அதிகமாகவுடையோம். ஆகலின் எம்மினும் மேலானவர்கள் ஒருவருமில்லை" என்று தம்மைத்தாமே புகழ்ந்துகொள்வார்கள். இன்னமும் "நாங்கள் பல யாகங்களைச் செய்வோம்; மேகம்போல் தானங்களை யளிப்போம்," என்று தினந்தோறும் மனோராஜ்ஜியம் செய்வதே யல்லாமல் வேதத்தில் கூறுகிறபடி செய்யார்கள்.

பந்தத்தை யொழித்தற்குக் காரணமாக வில்லாத பலவித துஷ்ட எண்ணங்களிலேயே சுழன்றுகொண்டிருப்பவரும், அடக்கற்கரிய மோகமாகிய வலையில் சிக்கி யுழல்பவருமாகிய இவர்கள் புல் நுனியிலிருக்கும் பனித்துளி சூரியகிரணத்தால் உலர்ந்துபோவதுபோல், கூற்றுவனால் உயிர் நடுக்குற்றிறந்து கடத்தற்கரிய கொடிய அசுசியாகிய நரகக்கடலிலே வீழ்வார்.

ஏ பார்த்த! இந்த அசுர சம்பத்துடையோர் தங்களையே மேலானவர்களாக மதித்துப் புகழ்ந்து, உண்மையான சாதுக்களைச் சிரேஷ்டராகப் பாராட்ட மாட்டார்கள். பழைய வேதங்களில் கூறப்பட்ட விதிகளைக் கைக்கொள்ளாமலே யாகங்களைச் செய்யா நிற்பர்.

நிலையான களிப்பும், பலமும், காமாதிகளும், நான் என்கிற அகங்காரமும் பொருந்தியுள்ள இவர்கள் தம்மவர்கள் யாவரிடத்தும் எனது சுபாவத்தை அன்னியமாகக் கருதிக் கொண்டு துவேஷத்தையே செய்யா நிற்பர்.

(பரமேசுவராகிய உமது கருணையால் இந்த அசுர சுபாவமுடைய மாந்தர்க்கு ஒரு காலத்தில் நற்கதி கிடைக்காதோ என்ற அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ அரசனாகிய பார்த்த! மானிடர்களில் அதமரும், பிறருக்குக் குரூரமான தீங்குகளைச் செய்வதில் ஆரவத்திற்கொப்பானவருமாகிய இந்த அசுர சம்பத்துடையோரை ஒழியாத துன்பங்கள் வந்து சேரும். யானே அவர்களைக் கீழான யோனிகளாகிய புற்றுகளில் அடிக்கடிப் புகும்படி வீழ்த்துவேன்.

இவ்வாறு வியாக்கிர சர்ப்பாதிகளாகிய அசுர யோனிகளை யடைந்த இவர்கள் விவேகஞானமடையும் வழியின்மையாலே நற்கதிக் கேதுவான வேதமார்க்கத்தை யடையாமல் கொடிய நரகங்களில் சுழன்று திரிந்து வருந்தா நிற்பர்.

ஒருவரை எப்போதும் அதம யோனிகளில் ஜனிக்கும்படிச் செய்வதும், எப்போதும் நரகத்தில் உழலச் செய்வதும் ஆகிய இவைகள் வரும் வழிகள் மூன்றுள—அவற்றை ஒரு முறை கிரமமாகப் போதிக்கின்றேன் கேட்பாயாக.

ஏ பார்த்த! விஷய போகங்களிலுண்டாகும் பிரீதியாகிய காமம், தன்னுடையதை இன்னொருவருக்குக் கொடுக்க மனம் பொறாத குணமாகிய உலோபம், சுடுகின்ற அக்கினிக்குச் சமதையாகிய கோபம், இந்த மூன்றுமே ஒருவனுக்கு நரகத்திற்கும் நாசத்திற்கும் காரணமாகும். ஆதலினால் இவை மூன்றையும் விட்டொழித்தோர் சர்வ அநர்த்தங்களினின்றும் நீங்குவதாகிய நிரதிசயானந்த மயமாகிய மோக்ஷத்தை யடைவார்கள். சாத்திரங்களில் அந்தந்த அதிகாரிகளுக்கு விதித்துள்ள விதி நிஷேதங்களின்படி நடக்கவேண்டு மென்ற விருப்பத்தை விட்டுத் தம் மனம்போன வழியே நடவா நிற்பவர்கள், இகலோக பரலோகங்களில் அடையக்கூடிய சுகங்களையும், சித்த சுத்தியையும், அதன் துவாரா அடையக்கூடிய முத்தியையும் அடையார்கள்.

ஏ பார்த்த! மேலே கூறப்பட்ட காரணங்களால் காரியா காரியங்கள் அனைத்தையும் அறிவதற்கு மார்க்கமாகிய சுருதியாதி சாத்திரங்களில் விதிக்கப்பட்ட மார்க்கத்திலேயே ஒரு தோஷமுங் கருதாமல் உனது அதிகாரித் தன்மைக்குத் தக்க தரும யுத்தம் முதலிய காரியங்களையே செய்வாயாக.

(அசுர சம்பத்துடையோர்களிடத் துள்ளனவாகக் கூறப்பட்ட குணங்களை நீக்கி, முக்கியமாய் காமம், உலோபம், கோபம் என்ற கொடிய மூன்று குணங்களையும் அடியோடொழித்து, சித்தசுத்தி பொருந்தி சாத்திரங்களில் கூறப்பட்ட விதி நிஷேதங்களின்படி ஒழுகினால் நற்கதி பெறலாம் என்பது கருத்து.)

பதினாறாவது அத்தியாயம் முற்றிற்று.

# 17-வது குணவிகார அத்தியாயம்

[கருமத்தைச் செய்கிறவர் மூன்று வகையினராவர். சிலரோ, சாஸ்திர விதியை யறிந்தும் சிரத்தையில்லாமையி னாலே, அந்த விதியை விட்டுத் தங்கள் இச்சையின்படி சிறி தளவே கருமத்தைச் செய்வர். ஆகவே அவர் எல்லாப் புருடார்த்தங்கட்கும் யோக்யதை யற்றவராதலின் அசுரர் ஆவர். சிலரோ சாஸ்திரங்களிலுள்ள விதியை யறிந்து மிகுந்த சிரத்தையுடையவராய் அவ்விதியின் முறைப்படியே விலக்கப்பட்ட கருமத்தை நீக்கி விதிக்கப்பட்ட கருமத் தைச் செய்வர்; இத்தன்மையோர் புருடார்த்தங்களை அடைவதற்குப் பொருத்தமானவராதலின் தேவராவர் என்னும் இப்பொருள் 16-வது அத்தியாய முடிவில் கூறப் பட்டது. இனி எவர்கள் சாஸ்திர விதியை தாமதம் முத லிய தோஷ வசத்தால் விடுத்துத் தங்கள் தந்தை முதலான பெரியோர்களின் விவகாரத்தை யொட்டிச் சிரத்தையுடன் கெட்ட காரியத்தை விட்டு விதித்தவைகளை யனுஷ்டிப்பார் களோ, அவர்களிடத்தில் அசுரதருமமும் தேவதாதரும மும் பொருந்தும்; சாஸ்திர விதியை விடுவது அசுரதரும மாம்; சிரத்தையுடன் விதித்ததைச் செய்வது தேவதாதரும மாம். அவ்விரண்டு தருமத்தோடுங் கூடியவர்கள் அசுரர் களில் அடங்குவாரா அல்லது தேவதைகளிலடங்குவாரா என்னும் சந்தேகத்தையடைந்த அர்ச்சுனன் ஸ்ரீ பகவானை வினவுகிறான் ]

**பார்த்தன்:**—ஏ பரந்தாமா! எவர்கள் சாஸ்திர விதியை விட் டுச் சிரத்தையோடுங் கூடினவராகித் தேவபூஜை முத லியவற்றைச் செய்வார்களோ, அவர்கட்கு மீளவும்

எந்த வகையான நிஷ்டை கூடும்? சாத்துவிகமா? இராஜசமா? தாமதமா?

(தேவதா புருடர்கள் வேத முதலிய சாஸ்திரங்களை அனுசரிக்க வேண்டும். அப்படி யனுசரிக்காமல் அவற்றை ஆலசியம் முதலியவைகளால் விடுபவரும், சிரத்தையற்ற அசுரர்போலாகாமல் பிதா முதலிய பெரியோரது விவகாரத்தைப் பின்பற்றுவதில் சிரத்தையோடு கூடியவரும் தேவபூசை செய்தால் அன்னவர் நிஷ்டை எத்தகையதாம்? சாத்விகமானலோ அவர் நல்ல இயல்பினராதலால் தேவரேயாவர்; இராஜச தாமதமானல் இரண்டு இயற்கையுடையவராதலால் அசுரரேயாவர் என்பது அர்ச்சுனன் சம்சயமாம்.)

[யாவர் சாஸ்திர விதியை விட்டுச் சிரத்தையோடும் தேவபூசை முதலியவற்றைச் செய்வரோ அவர் சிரத்தை சிறிது உடையவரே யாவர். ஏனெனில் சிரத்தை மூன்று விதமாம்; அவற்றுள், சாத்விக சிரத்தையோடு கூடியவர் தேவர்; இவர் சுருதி கூறியதில் அதிகாரியாவது மல்லாமல் அப்பயனையும் பெறுவர். இராஜச தாமத சிரத்தையோடு கூடியவர் அசுரர்; இவர் சுருதி கூறியதில் அதிகாரியாகார்; அப்பயனையும் அடையார் என்று பிரித்து அர்ச்சுனனுடைய சம்சயத்தை நீக்க இச்சித்தருளிய ஸ்ரீ பகவான் சிரத்தையை மூன்றுவித மென்றருளுகின்றார்.]

பகவான்:—ஏ அர்ச்சுன! உடம்பை யபிமானித்தவர்கட்கு, அவ்வியற்கையாலுள்ள சிரத்தை சாத்துவிகமெனவும் இராஜசமெனவும் தாமதமெனவும் மூன்றுவகையாம்; அவற்றை இனி இயம்புகிறேன், கேள்.

சிரத்தையோடு கூடியவர் சாஸ்திரவிதியை விட்டுத் தேவபூசை முதலியவற்றைச் செய்யின் மூன்று வகையாக

முன்ஜன்மத்திற் செய்த புண்ணியபாவங்களின் சம்ஸ்காரம் இயற்கையாகும். அது மூன்று வகையாகும். அதனாலே சாத்விகம் இராஜசம் தாமதம் எனச் சிரத்தையும் மூவகையாம். முற்பிறப்பின் இயற்கைக்குத் தக்கபடி இப்பிறப்பில் சிரத்தையானது உண்டாகிறது. இயற்கையை வாசனையென்றும் கூறலாம். சாஸ்திர அபேக்ஷையில்லாமல் எல்லா உயிர்கட்கும் பொதுவாக இயற்கையாலுண்டாம் சிரத்தையே மூன்று வகையாகும். முன்ஜன்ம வாசனையை சாஸ்திர ஜன்னிய விவேக ஞானத்தாலே மாற்றவும் முடியும். ஆனால், நூல் விதியைத் தாண்டியவர்க்கோ முடியாதாம். இம்மூவகைச் சிரத்தையை நீ கேட்டால் நீயே அவர்களிடத்தில் தேவத்தன்மையையும் அசுரத்தன்மையையும் நிச்சயித்துக் கொள்ளலாம்.

[முன்னர் மனத்தினிடமிருக்கும் முற்பிறப்பின் வாசனா ரூபகாரணத்தாலே சிரத்தை மூவகை யென்றருளப் பட்டது. இப்போது அந்தச் சிரத்தைக்கு முதற்காரணமாகிய அந்தக்கரணத்தின் வேற்றுமையால் சிரத்தையின் வேற்றுமையைக் கூறி அருளுகின்றார் ]

பகவான்:—ஏ பாரத! எல்லாப் பிராணிகளுக்கும் தங்களுடைய அந்தக்கரணத்தின் அனுசாரமாகவே சிரத்தையுண்டாகிறது. சிரத்தையின் மயமாக இருத்தலினாலே எவன் எந்தச் சிரத்தையுடையவனோ அவன் அதற்கொத்தவனே யாவன்.

சத்துவ குணத்தை முக்கியமாகவுடைய சூக்ஷ்ம பூதங்கள் ஐந்தினின்றும் உண்டாகிய அந்தக்கரணம் பிரகாச மயமாயிருத்தலின் சத்துவமாம். தேவதைகட்கோ அதிக சத்துவத்தோடு கூடி அவ்வந்தக்கரண மிருக்கும். இயக்கர்கட்கோ இரஜோ குணத்தினாலே அழுத்தப்பட்ட

சத்துவத்தோடு கூடி யவ்வந்தக்கரணமிருக்கும். பூதப் பிரேத முதலியவற்றின் அந்தக்கரணங்களோ தமோகுணத் தால் மூடப்பட்ட சத்துவகுணத்தோடு கூடியிருக்கும். மறு டருக்கோ அது அநேகமாகக் கலந்தேயிருக்கும். சாஸ் திரத்தாலுண்டாகிய விவேகஞானத்தால் இராஜச தாமஸ குணம் அமிழவே, அவனை உற்பூதசத்துவகுணி யெனலாம். எல்லாப் பிராணிகட்கும் தங்கள் தங்கள் மனத்தை அனு சரித்தே சிரத்தையுண்டாம். எம்மனத்தில் எக்குணம் மிகுந்து நிற்குமோ அந்தக் குணத்தின் பெயரையே சிரத்தை யும் அடையும். சத்துவகுணம் மிகுந்திருந்தால் சாத்விக சிரத்தையையுடைய சாத்விகனாவான். இரஜோகுணம் மிகுந்திருந்தால் இராஜச சிரத்தையையுடைய இராஜசனா வான். தமோகுணம் மிகுந்திருந்தால் தாமச சிரத்தையை யுடைய தாமசனவன். ஆகையால் சிரத்தையை யனு சரித்து அவனவனுடைய நிஷ்டையை அறிந்துகொள்ள லாம். (ஏ பாரத! என்று விளித்தமையாலே நீ மகா பாரத வம்சத்திற் பிறந்தவனாதலின் சுத்த சாத்விகத்தை யுடைத்தா யிருக்கின்றாயென்று ஸ்ரீ பகவான் குறிப்பித் தருளியதாகும்.)

[அர்ச்சுனன் பகவானை நோக்கி! அவனவனுடைய சிரத்தையே அவனவனுடைய நிஷ்டையைக் காட்டும் என்று தாங்கள் திருவாய் மலர்ந்தருளினீர்களே, அது மெய்யே என்றாலும், அந்தச் சிரத்தையை யறியாமல் அந்த நிஷ்டையை அறிய முடியாதாகலின் அந்த சிரத் தையை எவ்வுபாயத்தாலறிவது என்று கேட்க, அதற்கு ஸ்ரீ பகவான், அவனவனுடைய தேவபூஜை முதலிய காரியங்களைக் கொண்டு சிரத்தையையும் தெரிந்துகொள்ள லாமென்று கூறி அருளுகிறார்]

**பகவான்:**—ஏ அர்ச்சுன! யாவர் தேவதைகளைப் பூசை செய்கின்றரோ அவர் சாத்துவிகராவர். யக்ஷ இராக்ஷதரைப் பூசிப்பவர் இராஜசராவர். பூதங்களையும் பேய்களையும் பூசிப்பவர் தாமதர் ஆவர் என்று தெரிந்து கொள்வாய்.

சாஸ்திர ஞானமில்லாமல் இயற்கையான சிரத்தையினலே வசுக்கள் ருத்திரர்கள் முதலிய சாத்துவிக தேவதைகளைப் பூசிப்பவர் சாத்துவிகராவர்' சாஸ்திர ஞானமில்லாமல் இயற்கையான சிரத்தையாலே இரஜோகுணமுடைய குபேராதி இயக்கரையும், நிருதி முதலிய இராக்ஷதரையும் பூசிப்பவர் இராஜசர் ஆவர். நல்லுணர்வில்லாமல் இயற்கையான சிரத்தையாலே தமோகுணமுடைய பிரேதபூத முதலியவற்றைப் பூசிப்பவர் தாமதராவர் என்று தெரிந்துகொள். தங்கள் தருமங்களினின்றும் நழுவிய பிராமணர் முதலியோர் இறந்தபின் காற்றுமயமான உடம்பையெடுத்துக் கொள்ளிவாய்ப்பேய் முதலிய பிரேதங்களாவர். பிரேதம், பேய் ஏழு மாதாக்கள் முதலியோர் பூதகணமாவர். இதனலே சாத்விகாதி மூவரையும் பகுத்துத் தெரிந்து கொள்ளலாம்.

[இவ்வண்ணம் சாஸ்திரத்தை விட்டவருடைய சாத்விக முதலிய நிஷ்டை தேவபூசை முதலியவற்றலே தெரிவித்தருளப்பட்டது. இராஜத தாமதரும் பூர்வ புண்ணிய வசத்தால் சாத்துவிகராகி அதிகாரிகளாகலாம். ஆனல் பிடிவாதத்தாலும் முன்செய்த பாவமிகுதியாலும், கெட்டவர்களோடு சேர்ந்துவிட்டால் இராஜச தாமச இயற்கையை விடமுடியாமல் நல்ல நெறியைவிட்டுக் கெட்ட மார்க்கத்திற் பிரவேசித்து இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் வெறுந் துயரையே யடைவர் என்னும் அருத்தத்தை அருளிச் செய்கின்றர்.]

பகவான்:—ஏ அர்ச்சுன! யாவர் சாஸ்திர சம்மதமில்லாத கோரமான தவத்தைச் செய்வார்களோ! இடம்ப அகங்காரத்தோடு கூடியிருப்பார்களோ, விஷய இச்சையின் பலத்தைக்கொண்டவரா யிருப்பார்களோ, தேகத்திலிருக்கும் பூதக்கூட்டத்தை இளைக்கச்செய்வார்களோ, சரீரத்துள்ளிருக்கும் பரமாத்மாவாகிய எம்மையும் கஷ்டப்படுத்துவார்களோ, விவேகமற்றவர்களோ, அவரை அசுர நிச்சயமுடையவரென்று தெரிந்துகொள்.

பகவான் பின்னுங் கூறுகின்றார்:—

ஏ பார்த்த! யாவர் சாஸ்திரமல்லாத நூல்கள் விதித்த கோரமாகிய தவத்தைச் செய்வரோ அவரை அசுர நிச்சயமுடையவரென்று அறிந்துகொள். அதாவது:—இருக்கு முதலிய வேதங்கள் சாஸ்திரமாம்; அவற்றிற்கு வேறானது அசாஸ்திரமாம்; வேதத்தில் விதிக்கப்படாத தவம் அசாஸ்திர விதித்த தவமெனப்படும்; வேத விரோதமாய் பௌத்தாகமாதிகளிற் கூறும் காய்ந்த பாறையில் ஏறல் முதலிய தவம், சாஸ்திர மரியாதையைத் தாண்டியதாம்; கோரமாம்; செய்பவனுக்கும் அன்னியருக்கும் இடரையே தருவதாம்; அத்தகைய தவத்தைச் செய்பவர் அசுரரேயென்று சொல்லப்பெறுவர். இதே பிரகாரம், உலகமெலாம் என்னைத் தருமாத்மாவென்று சொல்லவேண்டும் என ஆசைப்பட்டுக் கண்டவரிடத்திலெல்லாம் தான் செய்யுந் தருமத்தைப் பேசுதலாகிய இடம்பத்தையும், எல்லாக்குணங்களிலும் யானே எல்லாரைப் பார்க்கிலும் மேன்மையான குணமுடையவன் என்னும் கெட்ட அபிமானமாகிய அகங்காரத்தையும், உடையவர் எவரோ அவரும் அசுரர் எனப்படுவர். இச்சிக்கத்தக்கவையாகிய வீணைகான முதலியவை

காமமாம்; அவற்றில் அதிக ஆசையே இராகமாம்; அது விஷயத்தில் எத்தனை துக்கம் வந்தாலும் பொறுத்துக்கொள்ளும் சாமர்த்தியமே பலமாம்; அல்லது வீணைகானாதி விஷயங்களில் அதிக ஆசையே காமமாம்; எப்போதும் இவற்றில் அதிக அபிமானம் வைத்து ஏங்குதல் இராகமாம்; இவ்விஷயங்களை நான் எப்படியாவது சம்பாதிப்பேன் என்னும் பிடிவாதமே பலமாம்; இந்த மூன்றோடும் கூடியவரும் அசுரரேயாவர். இந்தக் காரணத்தாலே பலமாகிய துக்கத்தைப் பார்த்தபோதிலும் நீங்காமலே தேகத்திலிருக்கும், தேக அவயவ இந்திரியமனாதி வடிவமான பிருதிவி முதலிய ஐந்து பூதங்களையும், ஆகாராதிகளை அடியோடு வெறுக்கும் வாயிலாக, இளைக்கச் செய்பவர் யாவரோ அவரும் அசுரரேயாவர். இவ்வுடம்பிலே போக்தா வடிவமாக இருக்கும் பரமேசுரராகிய எம்மையும், இவ்வுடம்பை யொடுக்கும் வாயிலாக ஒடுக்குபவர் யாவரோ, அல்லது சர்வாந்தரியாமி வடிவமாக இத்தேகத்திலிருக்கும் புத்திவிருத்திகளுக்குச் சாக்ஷிரூபப் பரமேசுரராகிய எம்மையும், எமது சாஸ்திரமாகிய ஆணையையும் தாண்டி. யாவர் துன்பஞ் செய்வரோ அவரும் அசுரரேயாவர். இதனாலே யாவர் விவேகமற்றவரோ, யாவர் கூறியவகையே இகலோகத்தில் எல்லாப் போகங்களும் கிடையாதவராகிப் பரலோகத்திலும் கீழானகதியை அடையும் புருடார்த்தமெல்லாமில்லாதவரோ அவரும் அசுரரேயாவர் என்று நீ தெரிந்துகொள். விளம்பியபடி விபரீதபாவனையோடுகூடி வேத அருத்தத்தை விரோதஞ் செய்பவர் மநுடராகத் தோன்றினும் அசுரத் தொழிலையே செய்பவராதலின் அவரை அசுரரூபமாகவே யறிந்துகொள். அவரோடு சேரவேண்டாம்; அவர் எண்ணமெல்லாம் அசுரத்தன்மையோடே கூடியிருக்கும். மநுடர்கள் அசுரர்களல்லாவிட்டாலும் அவர்களுடைய துஷ்டச்

செய்கையாலே அசுரர்கள் ஆகின்றார்கள். (இதனாலே ஸ்ரீ பகவான் கெட்ட தொழிலாலே மநுடருக்கும் அசுரத் தன்மை வருதலால் அத்தொழிலை விட்டுவிட வேண்டு மென்றருளியதாயிற்று.)

[முன்னர் சாத்துவிகர் தேவர் என்றும், இராஜசர் தாமதர் விபரீத புத்தியுடையராதலின் அசுரர் என்றும் நிர்ணயம் செய்யப்பட்டது; இப்போது, சத்துவகுணமுடைய வரைக் கொள்ளும் பொருட்டும் ரஜ தமகுண முடையவ ரைத் தள்ளும்பொருட்டும், ஆகாரம், யாகம், தவம், தானம் என்னும் நான்கினுடைய மூன்று வகுப்பை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிறார்.]

ஏ அர்ச்சுனன்! எல்லாப் பிராணிகளுக்கும் பிரியமா கிய ஆகாரம் மூன்று வகையாகும். அதுவல்லாமல் யாக மும், தவமும், தானமும் மூன்றுவகையேயாம். அவற்றின் சாத்துவிகாதி பேதத்தைக்கூறக் கேட்பாயாக.

ஏ குந்திமைந்த! முன்னே உபதேசித்த சிரத்தையே கேவலம் மூன்றுவகை யென்பதாகவில்லை; பின்னையோ, யாவருக்கும பிரியமான ஆகாரமும் சாத்துவிகாதி பேதத் தாலே மூவகையேயாம்; நான்குவகை யல்லவாம். ஏனெ னின்? உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் முக்குண வடிவமாகவே இருத்தலின், வேறாக நான்காவது ஒரு வகுப்பு உண்டாகாதாம். கடித்துத் தின்னும் தேன்குழல் (முறுக்கு) முதலியவை விழுங்கும் அன்னம் முதலியவை, சுவைத்துண்ணும் பழரச முதலியவை, சாரதைத உட் கொள்ளும கரும்பு முதலியவை ஆகிய பசியை நீக்கும் கண்கண்ட பலத்தைத் தரும ஆகாரம் மூன்றுவகையாக இருப்பதேபோலத் தருமத்தை யுண்டாக்கும் வாயிலாக, கண்காணாத சொர்க்கத்தைத் தரும் யாகம், தவம், தானம்

என்னும் மூன்றும் மூன்றுவகையாகும். அக்கினி முதலிய தேவதைகளை உத்தேசித்து நெய் முதலியவற்றை மந்திரஞ் சொல்லித் தீயில் விடுதல் யாகமெனப்படும். தேக இந்திரியாதிகளைக் காயவைக்கும் கிருச்சிர சாந்திராயணாதிகள் தவமெனப்படும். தன்னுடையவையாகிய பொன் பசு மனை முதலியவற்றைத் தன்னுடைய வென்னும் அபிமானத்தை விட்டு, மறையவர் முதலியவருக்குக் கொடுத்தல் தான மெனப்படும். இந்த ஆகார முதலிய நான்கையும் மூவகையாகப் பிரித்துக் கூறுகிறேன், ஒருமையுடன் கேட்பாயாக:

[இப்போது ஆகாராதி நான்கின் மூவகைப் பேதத்தை ஸ்ரீ பகவான் விஸ்தாரமாக அருளிச்செய்யத் தொடங்கி முதலில் ஆகார பேதத்தை அருளுகின்றார்.]

ஏ அர்ச்சுன! ஆயுள், சத்துவம, பலம், ஆரோக்கியம், சுகம், பிரீதி என்னு மியாவற்றையும் விருத்தி செய்வதும், இரசமுடையதும், பசையுடையதும், திரமும், மனோரம்மிய மும் கொண்டதும் ஆகிய ஆகாரம் சாத்துவிகர் பிரியப் படும் ஆகாரமாரம்.

ஏ பார்த்த! நெடுங்காலம் வாழ்வது ஆயுளாம். பெரிய பெரிய துக்கம் வந்தாலும் கஷ்டப்படாமலிருக்கும் மனோ தைரியம் சாத்துவமாம்; அல்லது உற்சாகமாம். தான் செய்யுங் காரியத்தில் ஆயாசம் வராமலிருக்கும்படியான சரீர வலுவே பலமாம். சுரம் சூலம் முதலிய நோய்களில் லாமலிருப்பது ஆரோக்கியமாம். உண்ட பின்னர் மனதில் கொள்ளும் சந்தோஷம் சுகமாம். உண்ணும்போது வெறுப்புத் தட்டாதபடி போஜன விஷயத்தில் அதிக ஆசை கொள்வது பிரீதியாம். இவை யாவற்றையும் வளரச்செய் யும் ஆகாரம் சாத்விகர்க்குப் பிரியமுடையதாம். இனிப்பை அதிமாகக்கொண்ட சாதாரண ஆகாரம் இரசமுடைய

தாம். இயற்கையான இனிப்பாலும் இடையில்விடும் நெய் முதலியவைகளாலும் விசேஷமான ஆகாரம் பசையுடைய தாம். இரசம் முதலிய அம்சத்தாலே தேகத்தில் அநேகநாள் நிலைத்திருக்கும் ஆகாரம் திரமுடையதாம். கெட்ட நாற்றம் அசுத்தம் முதலிய எந்தத் தோஷமும் இல்லாமல் பார்த்த மாத்திரத்திலே மனதிற்கு மகிழ்ச்சிதரும் ஆகாரம் மனோ ரம்மியமாம். இவ்வகை நல்ல குணங்களோடு கூடிய நால் வகை ஆகாரம் சாத்துவிகர்க்கே பிரியமுடையதாம். (சத்துவகுணம் வேண்டியவர் இம்மாதிரியான ஆகாரத் தையே புசிக்க வேண்டுமென்பது ஸ்ரீ கருணை மூர்த்தியி னுடைய திருக்கருத்தாம்.)

ஏ அர்ச்சுன! கைப்பு, புளிப்பு, கார்ப்பு, அதிக சூடு, காரம், காய்ந்துபோனது, தாகத்தை உண்டுபண்ணுவது, துக்கம் சோகம் ரோகமென்னும் மூன்றையுந் தருவது ஆகிய இவை இராஜச குணத்தினர்க்கே பிரியமாம்.

ஏ பார்த்த! வேம்பு முதலிய ஆகாரம் மிகவும் கைப் பாம். எலுமிச்சை முதலிய ஆகாரம் மிகவும் புளிப்பாம். உப்பு முதலிய ஆகாரம் மிகவும் கார்ப்பாம். உண்ணும் போது வாயும் கையும் வெந்துபோவதான ஆகாரம் மிகவும் வெம்மையாம். மிளகாய் முதலிய ஆகாரம் மிகவும் கார மாம் பசையில்லாத கருந்தினை முதலியவை மிகவும காய்ந் தனவாம். மிகப் பெருந்தாபத்தைத்தரும கடுகு முதலியவை மிகவுந் தாகஞ் செய்வனமாம். துக்கம் சோகம் நோய் மூன்றையும் தரும் ஆகாரங்கள் யாவையென்னில்:-உண்ட போதே உண்டாம் பீடை துக்கமாம்: இனிவருங் கெட்ட எண்ணம் சோகமாம்; சுரம் முதலியவை நோயாம் (வாத பித்தாதி தாதுக்களை வேறுபடுத்தி மேலேகூறிய மூன்றை யுங் கொடுக்கும் ஆகாரம் துக்க சோக நோயைத்தருவது

என்று சொல்லப்படும். இந்த ஆகாரங்கள் எல்லாம் இரஜோகுண முடையவர்க்கே பிரியமாம். இந்த ராஜச ஆகாரங்களைச் சத்துவகுணம் விரும்பியோர் தொடவே கூடாதென்பது ஸ்ரீ பகவானுடைய திருக்கருத்தென்று அறிந்து விட்டொழிக்க வேண்டும்.)

ஹே அர்ச்சுன! எந்த ஆகாரம் வேகாததோ, இரச மற்றதோ, நாற்றமுற்றதோ, ஊசியதோ, எச்சிலோ, அசுசியோ, அது தாமதர்க்கே பிரிய முடையதாம்.

ஹே பார்த்த! எவ்வாகாரம் பாதி வெந்ததாமோ, மிக்க வெந்து போனதால் தீய்ந்து ருசியற்றதாமோ, எவ்வோ தனுதி சமைத்து நெடும்போ தானதால் தண்ணென்று குளிர்ந்ததாமோ, எதனதுசாராரம்சம் எடுக்கப்பெற்றதோ, (மோர் முதலியவை), எது துர்க்கந்தமுடையதாமோ, எது சமைத்து ஓரிரவு கழிந்தபின் உண்பவனுக்கு மயக்கத்தைத் தருவதாமோ, உண்ட உச்சிஷ்டமாமோ, அயோக்கிய அசுசி மாம்சாதிகளாமோ, அபத்தியமாமோ, இவையாவும் தாமதர்க்குப் பிரியமுடையனவாம். இத்தாமத ஆகாரத்தைச் சாத்துவிகர் அதிதூரத்திற் றள்ளவேண்டும். இவ்வாகாரத்தில் துக்கம் சோகம் முதலியவற்றின் காரணத் தன்மை யாவர்க்கும் தெரிந்ததேயாதலின் பகவான் நேரே கூறியருளிலர். முறையாகச் சாத்துவிகத்தையும் இராஜசத்தையும் தாமதத்தையும் கூறியருளினர். பின்னிரண்டாகாரங்களில் முன்னதன் விரோதமேயுளதாம். மிகக் கைப்பாதிகள் மிகவுஞ் சுவையுடையன வாகாமையின் இரசிய (சாத்விக) விரோதியேயாம். பசையற்றது பசையுற்ற சாத்விக விரோதியேயாம்; மிகக் காழ்ப்பு (காரம்), மிகத் தகித்த விரண்டும் தாதுவின் காப்பில் விரோதியாதலின் திரத்தன்மை விரோதியாம்; மிக வெம்மையாதி

மனமகிழ்ச்சி விரோதியாம். நோயைக் கொடுப்பது ஆயுள், சத்துவம், பலம், ஆரோக்கியம் என்னும் நான்கின் விரோதியாம். துக்கசோகத்தைக் கொடுப்பது, சுகப்ரீதி என்பவற்றிற்கு விரோதியாம் உரைத்தவண்ணம் இராஜசத்திற் சாத்விக விரோதம் வெளிப்படையாம் இவ்வாறு தாமதத்திலும் இரசமற்றது, வெகாதது, பழையது ஆகிய மூன்றும், முறையே இரசமாயிருத்தல், பசையுடனிருத்தல், திரமிகத்தருதல் என்னும் மூன்றன் விரோதியாம்; துர்க்கந்தமுடையது, எச்சிலாவது, அசுத்தமாயிருப்பது மூன்றும் மனமகிழ்வுற்றதன் விரோதிகளாம் தாமதத்தில் ஆயுள் சத்துவாதி விரோதம் யாவருக்குந் தெரிந்தேயாம். இராஜசத்திலோ கேவலம் கண்கண்ட விரோதமேயாம். தாமதத்திலோ கண்கண்ட கண்காணு விரோதமிரண்டுமாம். இவ்விசேடங்களை யெல்லாம் நுண்ணிய மதியினாலே ஆய்ந்து தெரிந்துகொள்ள வேண்டும்.

[ஆண்டு முன் மூன்று சுலோகங்களான் ஸ்ரீ பகவான் முறையாகச் சாத்விகாதி மூன்றுகாரத்தையும் மொழிந்தருளினார் இப்போது மூன்று சுலோகங்களால் முறையே சாத்விகாதி மூன்று யாகங்களைக் கூறியருளுவர்.]

ஹே பாரத! பலத்தில் ஆசையில்லாதவர் இந்த யாகம் இன்றியமையாது இயற்றத்தக்கதுதான் என்று மனத்தில் துணிவை யடைந்து சாஸ்திரத்தில் விதித்த யாக அநுஷ்டானத்தைச் செய்வர்; அந்த யாகம் சாத்விகமெனப் பெறும்.

ஹே கௌந்தேய! அக்கினி ஹோத்திரம், தரிச பூரண மாசம், சாதுர்மாசியம், ஜோதிஷ்டோமம், என்பதாதி யாகங்கள் இருவகையாம்; ஒன்றே காமியமாம், மற்றொன்றே நித்தியமாம். அவற்றுள், "தரிசபூரண மாசம்

களால் சுவர்க்கம் வேண்டியவன் கேட்க," என்பதாதி வசனம், சுவர்க்க பலனைப்பற்றி விதித்ததாதலின் காமியாம்; இதுவோ எல்லா அங்கங்களும் பூர்ணமான யாகத்தாலே அனுஷ்டிக்கத்தக்கதே அல்லாது பிரதிநிதிவாயிலாயன்றும். "சாங்காறும் எரியோம்புக" என்பதாதி வசனம் பயனைப்பற்றாமலே கேவலம் வாழ்தலாதி நிமித்தப்பற்றாலே கூறினமையின் நித்தியமாம்; சர்வ அங்கங்களும் நிறைவிலா தொழியவே பிரதிநிதிகளாலும் அநுஷ்டிக்கத்தக்கதாம் இது. சர்வாங்க சம்பூர்ண மிலதேனும் பிரதிநிதியைக் கவர்ந்து எனக்கு நித்திய கருமம் இன்றியமையாது செய்யத் தக்கதேயாம். பிரத்தியவாய நீக்கப் பொருட்டல்லவா ஸ்ரீ வேதபகவான் இன்றியமையாது வாழ்தலாதி நிமித்தத்தனே நித்திய கரும விதானஞ் செய்துளார் என்பதாகத் தன் மனத்தெண்ணி மனத்தூய்மையை வேண்டிக் காமிய கரும அநுஷ்டான விருப்பற்றவராலே நூலளவைக்கொண்டு துணிந்த யாகமியாது அநுஷ்டிக்கப் படுமோ அது நூற்படி மனத்தூய்மையின் பொருட்டு அநுஷ்டிக்கத்தக்க நித்தியமாகிய சாத்விகமாம்.

ஹே பாரத! மேலும், சொர்க்காதி பிரயோஜனத்தை உத்தேசித்தும், இடம்பப்பொருட்டும், அநுஷ்டிக்கும் யாகம் இராஜச மென்றறிவாய்.

ஹே அர்ச்சுன! ஜீவர்களின் ஆசைக்கு விஷயமாய் சுவர்க்காதி பயனைக்குறித்து எந்தமகம் செய்யப்பெறுமோ, சித்தசுத்தியின் பொருட்டு யாது அனுஷ்டிக்கப்பெறுதோ, யாவரும் என்னைத் தருமாத்மா என்று புகழவேண்டும் என்றாசை வைத்து யாவருக்கும் தனது தருமான்மத் தன்மையை வெளிப்படுத்தல் இடம்பமாம்; இந்த டம்பப் பொருட்டும் எந்த யாகஞ் செய்யப்படுமோ, அது

இராஜசமாம். ஒவ்வொரு யாகமோ இடம்பப்பொருட்டுச் செய்யாவிடினும் சுவர்க்காதி பயனைக்குறித்தே செய்யப் படும்; ஒவ்வொரு மகமோ, சுவர்க்காதிகளை உத்தேசியா மலே கேவலம் இடம்பப் பொருட்டே செய்யப்படும்; ஓவ்வொரு மகமோ சொர்க்காதி பலப்பொருட்டும், இடம் பப்பொருட்டும் செய்யப்படும். இந்தப்பிரகாரம் திருஷ்ட அதிருஷ்ட திருஷ்டா திருஷ்டப் பிரயோஜனத்தைக் குறித்து நூற்படி எந்த மகம் செய்யப்பெறுமோ அது இராஜசமாம். இந்த இராஜசத்தை விட்டுத் தொலைக்க வேண்டும். நீ பரத வம்சத்திற் பிறந்தவனுதலின் இராஜச கருமத்தை விட்டு விடுதல் தகுதியேயாம்.

ஹே அர்ச்சுன! நூல் விதியற்றதும், அன்னதான மற்றதும்! மந்திரமற்றதும், தக்ஷிணையற்றதும், சிரத்தை யில்லாததும், ஆகிய யாகத்தை வேதமுணர்ந்த பெரியோர் தாமத யாகமென்பர்.

ஹே பற்குன! எந்த யாகம் விதியில்லாததோ எந்தச் சாஸ்திரத்தில் அந்த யாகம் விதித்திருக்கின்றதோ, அதற்கு மாருயதாமோ, எம்மகத்தில் மறையவர் முதலானவர்க்கு அன்னதான மில்லையோ, எந்த யாகம் உதாத்தாதி சுரங்க ளோடும் சுகாராதி வர்ணங்களோடும் கூடிய மந்திரங்க ளற்றதாமோ, எந்த யாகம் தக்ஷிணையற்றதாமோ, இருத் துவிக்கு மறைவர் முதலியவரின் துவேஷாதியால் எந்த யாகஞ் சிரத்தையற்றதாமோ, அத்தகைய யாகத்தை வேத மறிந்த பெரியோர் தாமத யாகமென்பர். மேற்கூறிய விதியற்றதன்மை முதலிய ஐந்து விசேடங்களுள் ஒவ் வொரு விசேடத்தோடு கூடியும் ஒவ்வொரு வகையாக யாகம் ஐந்து வகையாம்; அவ்வைந்து சிறப்போடுங் கூடியதாக ஆறுவது வகையொன்றும். தனித்தனி இரண்டு,

மூன்று, நான்கு விசேஷணங்களோடு கூடி யாகங்கள் அநேக வகையாம். முன்மொழிந்த இராஜச யாகத்தில் சித்தசுத்தியி னபாவமுளதேனும், சொர்க்கம் முதலிய பயன்களை யடையச்செய்யும் தருமமாகிய அபூர்வம் அவசி யம் உண்டாம்; ஏனெனின் அந்த யாகம் சாஸ்திரத்தை அநுசரித்தே செய்யப்படுவதாதலின்; இம்மகமோ எவ் வபூர்வத்தையும் உண்டாக்காதாம், கூடிய இரண்டினுள் ளும் இதுவே வேற்றுமையா மென்றறிந்து கொள்க.

[இம் மூன்று சுலோகங்களாலே ஸ்ரீ பகவான் முறையே சாத்துவிகாதி மூவகை யாகங் கூறியருளினர்; இனிச் சாத்துவிகாதி மூவகையான தவத்தைக் கூறியரு ளும் பொருட்டு முதலில் மூன்று சுலோகங்களாலே முறையே காயிக, வாசிக, மானத, பேதத்தாலே மூன்று வகையாகத் தவத்தைக் கூறியருளுகின்றார்.]

ஹே அர்ச்சுன! தேவர், துவிஜர், ஆசிரியர், அறிஞர், இவரியாவரையும் பூசித்தல் காயத்தூய்மை; ஆர்ஜவம், பிரஹ்மசரியம், அஹிம்சை என்னுமிவை யாவும் காயத் தவமாம்.

ஹே பார்த்த! பிரஹ்மா, விஷ்ணு, சிவன், சூரியன், அக்கினி, துர்க்கை, கணபதி என்பவர் தேவர்; நன்ன டக்கையோடு கூடிய உத்தம மறையோர் துவிஜர்; தந்தை தாய் ஆசிரியர் என்னும் விருத்தர் ஆசிரியர்; வேதபாடப் பொருளை யறிபவர் அறிஞர்; இத்தகையவர்கட்கு சாஸ்திர விதிப்பிரகாரம் சிரத்தை பக்திகளுடன் தகுதிப்படி நமஸ் காரம் சேவை தக்ஷிணை அன்னதானம் என்பதாதிகளைச் செய்தாலே இவர் தம் பூசையாம். தண்ணீரும் மண்ணுங் கொண்டு காயமேவிய மலங்கழுவுதல் சௌசமாம். ஆர்ஜ வமோ மனக்கோணலின்மை வடிவமென ஸ்ரீ பகவான்

மானத தவத்திற் கூறியருளுவ ராதலின் இவ்விடத்தில் அதைக் கொள்ளற்க; மற்றோ, நூல்விதித்ததில் முயலுத லும் நிடேதித்ததில் நீங்குதலும் ஆகிய பிரவிருத்தியே ஆர்ஜவமெனக் கொள்க. சாத்திர நிடேத மைதுனத்தி னின்றும் நீங்கல் பிரஹ்மசரியமாம்; சாத்திர நிடேதமாகிய பிராணிகட்குப் பீடை செய்தலின்மை அகிம்சையாம்; இதனோடு கள்ளாமை கொள்ளாமையுங் கொள்க. தேவ பூசையா முதலியவை யெல்லாம் காயத்தவமாம்; காய முக்கியமா யிருக்குங் கருத்தா முதலியோரால் செய்யப் படுந் தவம் காயிகமாம்; கேவலங் காயமாத்திரையானே செய்யுந் தவம் காயிகமன்றாம்.

ஏனென்றால், இனிவரும் 18-வது அத்தியாயத்தில் 14-15-வது சுலோகங்களால், அதிஷ்டானம், கருத்தா, கரணம், சேஷ்டை, தெய்வம் என்னும் ஐந்தன்கண் எல் லாக் கருமங்களின் காரணங்கள் கூறப்பெறுதலினாலென் றறிந்து கொள்ளவேண்டும். மேற்கூறிய ஐந்தின் விசேட அருத்தத்தை அச்சுலோக அருத்த நிரூபணத்திற் கூறுவாம். இவ்விதமான கிரமத்தைப் பின்வரும் வாசிக தவத்திலும், மானத தவத்திலும் கண்டுகொள்ள வேண்டும். யான் பிரஹ்மரூபன் என்னும் பிரஞ்ஞை எவனுக்குரியதோ அவன் பிராஞ்ஞனென்னும் அறிஞனெனப் படுவான். இருபிறப்பாளரினும் அறிஞனை ஸ்ரீ பகவான் தனியே கூறி யருளியது எதற்காக வென்றால்:—முன்னனேகம் பிறப்புக் களில் செய்த புண்ணியத்தால் கிடைத்த ஈசுரரது திருவரு ளாலே பிரஹ்ம நிஷ்டா ரூபமான அறிவு அடையப்பெற்ற தன்மை சூத்திராதியரிடத்தும் சம்பவித்தல் கூடும். விதுரர் தரும வியாதர் என்பவராதியரிடத்தில் ஞானமிருந்தது ஸ்ரீ பாரதாதிகளில் வெளிப்படை. பெண்களாயினும் வணிக ராயினும் சூத்திரராயினும் எம்மைத் தரிசிக்கிறவர்கள் பரம

கதியை யடைவார்களென்று ஸ்ரீ பகவானே முன்னர் அனுக்கிரகித் தருளியுள்ளார். இத்தகைய அறிஞர்களாகிய சூத்திராதியரும் பூசிக்க யோக்கியரேயாவர். இவ்வர்த்தத்தைத் தெரிவிக்கும் பொருட்டே இருபிறப்பாளரினும் அறிஞரை வேறாகக் கூறியருளியதாம்.

ஏ அர்ச்சுன! துயரந்தராததும், உண்மையும், பிரியமும், ஹிதமும் ஆகிய வாக்கியம், வேதமோதல் என்பன யாவும் வாக்குமயமான தவமாம்.

ஹே கௌந்தேய! கொடூரத்தைச் செய்ததாலும் அதாவது கேட்கப்பட்ட யாவருக்குமே துயரந்தராததும், மெய்யாயதும் அதாவது பிரமாணமூலத்தை யுடையதும் (வேறு பிராமணங்களாற் பாதிக்கப்படாத பொருளை யுடையதும்), பிரியமும் அதாவது சொல்லும்பொழுதே கேட்பவனுடைய செவிக்கு இன்பந்தருவதும், ஹிதமும் அதாவது மேலே பலந்தரும்போதும் கேட்டவனுக் கின்பமே தருவதும் என்கிற நான்கு சிறப்புகளோடு கூடியதாகவே கூறும் வசனமிருந்தால் அது வாக்குத் தவமாம்; இவற்றிற் சிறிது குறைந்தாலும் வாக்குத் தவத்துக்குக் குறைவு உண்டாகும். "சாந்தனுயாதியென் மைந்தநின்றது, போந்த வேதந்தனைப் புகழ்பெறப் படித்தி, யாந்துணையோகம் அரிதுபயிலுதி வேந்தரும் புகழ வீற்றிருந்திடுவாய்" என்பதில் சொன்ன நான்கு விசேஷணங்களுமே யமைந்துள்ளனவாம். இதனால் இனிய சொல்லை மொழிதலே பெரிய வாசிக தவமாம். நியமமாக இருந்து வேத அத்தியயனஞ் செய்தல் சிவராமாதி நாமங்களைச் செபித்தல் வாக்கின் தவமாம்.

ஹே பார்த்த! மனத்தின்தெளிவு, சௌமியத் தகைமை (சாந்தன்மை), மௌனம், உள்ளத்தின் நிக்கிரகம், மனத்தூய்மை என்பன யாவும் மாநச தவமாம்.

ஹே பற்குண! விஷய சிந்தை வியாகூல மற்றிருத்தல் வடிவமனத்தினது சுவஸ்தத்தன்மையே மனப்பிரசாதமாம்; எல்லாருக்கும் ஹிதத்தையே விரும்புதலும், சாஸ்திரம் தள்ளியதை நினையாமையும் ஆகிய நன்மனத்தன்மையே சௌமியத்தன்மையாம். ஒருமையுடன் ஆன்மாவைச் சிந்தித்தல் வடிவ நிதித்தியாசனமென்னும் முனித்தன்மையே மௌனமாம். அல்லது வாக்கை யடக்குவதற்குக் காரணமாகிய மனத்தின் அடக்கமே மௌனமாம். மனத்தினது எல்லா எண்ணங்களின் விசேஷநிக்கிரக மென்னும் நிருவிகற்ப சமாதியே ஆத்ம விநிக்கிரகமாம்—மனத்தை நன்கடக்கலாம். இருதயத்திற் காமக்குரோத லோபாதிரூப மலநீக்கமாகிய நற்றூய்மையே ஹிருதய சுத்தியாம்; அவ்விருதயத்தில் மீண்டும் காமாதி யசுத்தியுண்டாகாமையே தூய்மையில் மேன்மையாம். அயலாரோடு விவகார காலத்தில் கபட முதலியவை யில்லாதிருத்தல் மனத்தூய்மையாம். இவையெல்லாம் மானசத் தவமாம்.

[அங்கே கூறிய 3-சுலோகங்களாலே காயிகாதி முத்தவங்கள் கூறப்பெற்றது; இனி முத்தவத்தின் சாத்துவிகாதி முப்பேதத்தை ஸ்ரீ பகவான் 3-சுலோகங்களாற் கூறத்தொடங்கல்.]

ஹே அர்ச்சுன! பலாபேக்ஷையில்லாத ஒருமையோடு கூடிய மனத்தையுடையவர் அதி சிரத்தையாற்செய்த முன் கூறிய முத்தவங்களைப் பெரியவர் சாத்துவிகத் தவமென்பர்.

ஹே பார்த்த! பலேச்சையற்று அதாவது காரியசித்தி—அசித்திகளில் மகிழ்ச்சிவாட்ட விகாரமற்ற சமாகித சித்தமுடைய அதிகாரிகளாகிய நிட்காமர்களால் அப்பிராமாண்ய சங்கையாகிய களங்கமில்லாமல் இருக்கும் ஆஸ்திக்கிய புத்திரூப சிரத்தையால் அநுஷ்டிக்கப்பெற்ற முன்

மொழிந்த காயிகாதி முத்தவத்தை வேதமறிந்த பெரியார் சாத்விக மென்பர்.

ஹே அர்ச்சுன! மீண்டும் சற்காரமான பூஜையின் பொருட்டு டம்பத்தாற் செய்யப்பட்ட தவத்தை யான்றோர் இராஜச மென்பர்; அத்தவ மிவ்வுலகிலேயே பயன் தருவதாம் சலமும் அத்துருவமுமாம்.

ஹே பாண்டவ! இத்தவத்தையுடைய பிராஹ்மணர் மிகவும் மேன்மையர் என அவிவேகிகள் செய்யுந்துதி தற்காரமெனப்படும்; அவிவேகிகள் செய்யும் எழுதல் முதலியவையான மெனப்படும்; அவிவேகிகள் செய்யும் திருவடியபிஷேகம் அர்ச்சனை தக்ஷிணை செய்தல் பூசையாம். இவற்றின்பொருட்டுக் கேவலம் டம்பத்தால் செய்யப்படுவதும், ஆஸ்திக்யபுத்தி ரூபசிரத்தையினுல் செய்யப்படாததும் ஆகிய தவத்தைப் பெரியோர் இராஜச தவமென்பர். அத்தவம் கேவலம் இகலோக பலத்தையே யடைவிக்கும் அல்லது பரலோக பலத்தை யடைவியாதாம். அது சுசலமாம்—மிக அற்பகால மிருக்கும் பல காரணமாம். அது அத்துருவமாம் = பல காரணத்தன்மையின் நியமமின்மையதாம். அத்தவத்தைச் செய்பவர்க்கெல்லாம் நியமமாகச் சற்காராதி கிடைப்பதுமில்லை; எவனேனும் ஒருவனுக்கே கிடைக்கு மாகையால், இகலோக பலத்திலும் அது நியமமாக ஹேதுவாகாதாம்.

ஹே கௌந்தேய! எத்தவமானது மிகப் பிடிவாதத்துடன் இவ்விந்திரியக் கூட்டத்தைத் துன்புறுத்திச் செய்யப்படுமோ, மற்ற ஜீவனை விநாசஞ் செய்யும் பொருட்டுச் செய்யப்படுமோ அத்தவத்தை யான்றோர் தாமத மென்பர்.

ஹே அர்ச்சுன! அவிவேகத்தின் அதிசயத்தால், செய்யப்பட்ட துராக்கிரகத்தால் தேக இந்திரியாதி சங்காதத்

தைப் பீடைசெய்து எத்தவஞ் செய்யப்பெறுமோ, வேறெரு பிராணியை விநாசஞ் செய்யும்பொருட்டு எத்தவஞ் செய்யப்படுமோ, அத்தவத்தைச் சாஸ்திரமுணர்ந்த பெரியோர் தாமத மென்பர்.

[மேல் அருளிய மூன்று சுலோகங்களால் முறையாகத் தாமதாதி முத்தவம் மொழிந்தருளப் பெற்றது. இப்போது அருளுஞ் சுலோகங்கள் மூன்றும் முறையாகத் தானத்தின் சாத்விகாதி முப்பேதத்தை ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளுகிறுர்.]

ஹே அர்ச்சுன! இத்தானம் அவசியம் செய்யத்தக்கது. இவ்வாறு துணிந்து எத்தானம் உத்தம க்ஷேத்திரத்திலும், உத்தம காலத்திலும், உபகாரியாகாத பாத்திரத்திற்குச் செய்யப்பெறுமோ அது சாத்விகமாகும்.

சுருதி ஸ்மிருதி வடிவசாஸ்திரம் இத்தானத்தை எனக்கு விதித்துளதாதலால், அதனுணையின் வயத்தால் இது என்னுல் இன்றியமையாது இயற்றத்தக்கதாம் என்று நிச்சயித்து, அத்தானபல ஆசையை யகற்றிப் பொன் முதலியவற்றினது தானத்தை உத்தமமான இடத்தில் மேலான காலத்தில் அநுபகாரியான பாத்திரத்தில் இயற்றுவது சாத்துவிக தானமெனப் பெரியோர் கூறுவர். குருக்ஷேத்திராதி தீர்த்த பூமிகள் உத்தம தேயங்களாகும். சூரியகிரகணுதி காலம் உத்தம காலம் யாவன் தனக்கு ஒரு காலத்திலும் யாதொரு உபகாரமும் செய்யாஞே அவன் அநுபகாரி யெனப்படுவன். வித்தை தவமிரண்டோடுங் கூடியவன் பாத்திரனுவன். அல்லது தன்னையுந் தாதாவையும் காப்பவன் பாத்திரனுவன். எந்தப் பிராமணன் வித்தை தவங்களோடுகூடித் தன்னைக் காப்பதிலும் தாதாவைக் காப்பதிலும் சாமர்த்திய முடையவனுவஞே அவனே தாதாவின்

றுதியை ஏற்றுக் கொள்ளலாம்; அவ்வாறுகாதவன் தானம் வாங்கலாகாது என்று சாஸ்திரமும் விதிக்கின்றது. இத்தகைய அநுபகாரிக்கு உத்தம தேசகாலத்தில் பயனை விரும்பாமல் சாஸ்திர விதிப்பிரகாரம் கொடுக்கும் பொன் முதலியவற்றின் றுனம் சாத்விகமானதாம்.

ஹே அர்ச்சுன! பிரதியுபகாரங் கருதியாகிலும், சுவர்க்காதி பலனை யுத்தேசித்தாகிலும், பச்சாத்தாபத்தோடு கூடியாகிலும் கொடுக்குந் தானம் இராஜ தானமாம்.

ஹே கௌந்தேய! எந்தத் தானமானது பிரதியுபகாரத்தை யுத்தேசித்துக் கொடுக்கப்படுமோ, அதாவது இந்தப் பிராஹ்மணனுக்கு யான் தானம் கொடுப்பேனுயின், ஒரு சமயத்தில் எனக்கு அவன் பதில் உபகாரஞ் செய்வான் என்னும் புத்தியினுலே கேவலம் கண்கண்ட பயன் சித்தித்தற் பொருட்டே எத் தானமாவது கொடுக்கப்படுமோ, அல்லது, இத்தானத்தாலே எனக்குச் சுவர்க்கம் உண்டாகுக வென்னும் உத்தேசத்துடன் எத்தானங் கொடுக்கப்படுமோ, இவ்வளவு தனத்தை யான் ஏன் செலவழித்தேன் எனப் பச்சாத்தாபத்துடனே எத்தானங் கொடுக்கப்படுமோ, அந்தத் தானத்தைப் பெரியோர் இராஜத தானமென்பர். சாத்விக தானத்தினும் இராஜத தானத்திலுள்ள வேற்றுமையை யூகித்தறிந்து கொள்க.

ஹே அர்ச்சுன! எத்தானம், அதேசத்தில் அகாலத்தில் அபாத்திரர் பொருட்டுச் சற்காரமில்லாமல் அவமதிப்போடு கொடுக்கப்படுமோ அத்தானம் ஆன்ருேரால் தாமத தானமெனப்படும்.

ஹே பார்த்த! இயல்பாகவேனும், துஷ்டர்களின் சம்பந்தத்தாலேனும் பாவகாரண வடிவ அசுத்தமான இடம் அதேசமாம். புண்ணியத்தின் காரணமாகப் பிரசித்தமில்

லாத காலம், அகாலமாம்; அல்லது சௌசமற்ற காலம் அகாலமாம். அத்தகைய தேசகாலத்தில் வித்தை தவமில் லாத நடவிடாதி அபாத்திரர் பொருட்டுப் பொன் முதலிய கொடுக்கு மத்தானம் தாமதமெனப்பெறும். உத்தம தேச கால பாத்திரங் கிடைப்பினும் சற்காரமில்லாமற் செய்யுந் தானம் — பிரிய வசனம், பாதப் பிரக்ஷாளணம், சந்தனம், புஷ்பம் அக்ஷதை முதலியவற்றாலே பூசை என்பதாதி சற்காரத்தாலே யன்றிச் செய்யுந் தானம், அவமதிப்போடு கொடுக்குந் தானம் அதாவது தான் பாத்திரரூப வேதியரை ஆதரவு செய்யாது கொடுக்குந் தானம் ஆகிய இதனை (பெரி யோர்) தாமத மென்பர்.

[ஆண்டு முன் பிரசங்கத்தில் ஆகாரம், யாகம், தவம், தானம் என்னும் நான்கினுக்கும் சாத்விகாதி மூவகைப் பேதத்தைக் கூறியருளி அச்சாத்விகாதி ஆகாராதிகள் இன்றி யமையாமல் கொள்ளத்தக்கன வெனவும், அவ் விராஜதாதி ஆகாராதிகள் தள்ளத்தக்கன வெனவும் திருவாய் மலர்ந்தருளப் பெற்றன. அவற்றுள் ஆகாரமோ கேவலம் பசிநீக்க வடிவ கண்கண்ட அருத்த சித்தியையே யாக்குமல்லாமல், அறத்தை யாக்கும் வாயிலாய்த் துறக் காதிரூப அதிர்ஷ்ட அருத்தசித்தியை யாக்காதாதலின் ஏதேனும் அங்கமிலதேனும் அபாவசங்கை யாகாதாம். தரும உற்பத்திவாயிலாக மனத்தூய்மை வடிவ அல்லது சுவர்க்காதி வடிவ அதிர்ஷ்ட அருத்த அடைவு செய்யும் யாகம் தவம் தானம் என்னும் மூன்றிற்குமே யாதேனு மொரு மந்திராதிரூப அங்கமிலாமையானே தரும அபூர்வ முண்டாகாமற் பலமிலாமையேயாம். இதனானே சாத்விக யாகாதிகளில் பலமில்லாமையேயாம். ஏனெனின், யாகாதி யைச் செய்பவர்க்குப் பிரமாதத்தின் மிகுதியாலே யாதேனு மொரு அங்கங் கெடுதலே யாமாதலின், அக்கெடுதலை

நீக்கும் பொருட்டு ஓம் தத் சத் தென்னும் ஸ்ரீ பகவந்நாம உச்சாரணரூப சாமான்ய பிராயச் சித்தத்தைப் பரம தயாநிதியாகிய ஸ்ரீ பகவான் அதிகாரிகட்கு உபதேசித் தருளுகிருர்.]

ஹே அர்ச்சுன! ஓம் தத் சத்தென மூன்றவயவப் பரப் பிரஹ்மத்தின் நாமம் ஸ்மரிக்கப் பெற்றுள்ளது, அந்நாமத் தாலே சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில் பிரஜாபதியானவர், பிராஹ்மணுதி கர்த்தாவையும், காரணரூப வேதத்தையும், காமரூப யாகத்தையும் உண்டாக்கினர்.

ஹே பார்த்த! அகார உகார மகார மென்னும் மூன்று அவயவங்களோடு கூடிய ஒரே பிரணவ நாமம் பரப்பிரஹ் மத்திற் காவதேபோல ஓம் தத் சத் தென்னும் மூன்றவயவ முடைய ஓம் தத் சத் தென்னும் ஒரே நாமம் பரப்பிரஹ் மத்திற்கு வேதாந்த மறிந்தவர்கள் விளம்புவார்கள். முற் காலத்தில் வேதாந்தமறிந்த பெரிய ரிஷிகள் கூறியபிரகாரம் ஸ்மரித்ததாலே இப்போதிருக்கும் ஞானிகளும் அங்ஙனமே அவசியம் ஸ்மரிக்க வேண்டும். அந்த நாமத்தை ஸ்மரித்த லாலே அதிகாரிகள் இயற்றும் யாகாதிகள் இடையூறுடை யனவாகாவாம் என்பது ஸ்மிருதியிலும் காணலாம். யாகாதியைச் செய்பவனுக்கு யாதேனும் ஒரு பிரமாத வயத்தால் அவற்றுள் மந்திராதிரூப அங்கம் பங்கப்படின் அது ஸ்ரீ மகாவிஷ்ணுவின் ஸ்மரணத்தாலே பரிபூர்ணமாம் எனச் சுருதி பகவதி கூறியுள்ளாள். வேத வேத்தாக்களா கிய ஆன்ருேர் எவ்வெவ் வைதிக கருமத்தைத் தொடங்கு கின்ருர்களோ அவ்வதன் ருெடக்கத்தில் ஓம் தத் சத்தென் னும் நாமத்தை ஸ்மரித்தே அவ்வதனைச் செய்வார். ஆகை யினுல் சிஷ்டாசார ரூபப்பிரமாணத்தாலும் இடையூறு நீங் கும் பிரயோஜனம் அதற்குத் துணியப்படும். மேற்கூறிய நாம ஸ்மரணத்தினுல் யாகாதிகளின் விக்கினம் நீங்குவ

தாகும் என்பதான அதன் சாமார்த்தியத்தைத் தெரிவித்தருளுதற்கு ஸ்ரீ பகவான் அந்நாமத்தைத் தோத்தரித்தும் அருளினார்:—சிருஷ்டியின் ஆதிகாலத்தில் பிரஜாபதியாகிய பிரஹ்மாவானவர் பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய கரும கருத்தாக்களையும், காரணரூப வேதத்தையும், கருமரூப யாகத்தையும் உண்டாக்கியது ஓம் தத் சத் தென்னும் பிரஹ்ம நாமத்தைத் தியானித்தேயாம். ஆதலின் யாகாதி சிருஷ்டியின் காரணமாதலின் இம்மகாமகிமை வாய்ந்த பிரஹ்மத்தின் நாமம் இடையூறு நீக்குவதில் ஆற்றலுற்றதேயாம்.

[இப்போது ஸ்ரீ பகவான், அகாராதி மூன்று அவயவங்களை வியாக்கியானித்து அவற்றின் சமுதாயரூப ஓங்காரத்தின் வியாக்கியானமாவதேபோல ஓம் தத் சத்தென்னும் மூன்று அவயவங்களின் வியாக்கியானஞ் செய்தருளி அவற்றின் சமுதாயரூப ஓம் தத் சத் தென்னும் பிரஹ்ம நாமத்தை நான்கு சுலோகங்களாலே வியாக்கியானித்தருளுகின்றார். அந்தப் பிரஹ்மநாம ஸ்துதியின் அதிசயத்தன்மையின் பொருட்டு ஆண்டு முதலில் ஓங்கார சப்த வியாக்கியானம் செய்தருளுகிறார்.]

ஹே அர்ச்சுன! அக்காரணத்தினாலே ஓம் என்னும் சப்தத்தையுச்சரித்தே வேதவேத்தாக்களின் விதிசாஸ்திரம் விளம்பிய யாக தானவ தவ வடிவக்கிரியை நிரந்தரம் பிரவிருத்திக்கும்.

ஹே பற்குன! சுருதிகளில் ஓமென்னும் சப்தம் பிரஹ்ம நாமமென வெளிப்படை யாதலின் ஓமென்பதையுச்சரித்தே வேதவேத்தாக்களின் விதிசாஸ்திரம் விளம்பிய யாக தான தவ வடிவ எல்லாக் கிரியையும் எப்போதும் பிரவிருத்திக்கும்; அதாவது வேதவேத்தாக்கள் எவ்வெச் சாஸ்திரவிகித யாக தவ தான கிரியைச் செய்வரோ அவ்

வக் கிரியையின் முன் ஓமென உச்சரித்தே பின் அவ்வத் தொழிலைச் செய்வர் என்பதாம். அவ்வோங்கார உச்சாரண மகிமையாலே அந்த மகான்களின் யாகாதி நற்றொழில்கள் விக்கினமில்லாமல் நன்கு முடியும். ஆகையால், அம் மூன்றனுள் ஒன்றாகிய ஓங்காரத்தை யோதினும் எல்லா இடையூறுகளும் நீங்கும் என்றால் அமமூன்றையும் சேர்த்து உச்சரித்தால் விக்கினம் மக்கினமா மென்பதில் மீண்டுங் கூறத்தக்கது யாதுளது?

[முன் சுலோகத்தில் காமிய யாகாதி கருமங்களினும் நிட்காம யாகாதி கருமங்களினும் சாதாரணத் தன்மை ரூபத்தாலே ஓமென்பதற்கு அருளப்பெற்றது; இப்போது முமுக்ஷுக்கள் யோகத்தைக் கூறி யருளுபவராகிய ஸ்ரீ பகவான் அதற்கு வியாக்கியானம் செய்தருளுகிறார்.]

ஹே அர்ச்சுன! மோக்ஷ இச்சையையுடைய புருடர் தத்தென்னும் சப்தத்தை யுச்சரித்துப் பலனை இச்சியாது நானாவகையாய் யாக தவ தான ரூபக்கிரியைகளைச் செய் கின்றனர்.

ஹே பாண்டவ! தத்வமசி யென்பதாதி சுருதிகளில் வெளியாயுள்ள தத் என்னும் பிரஹ்மநாமத்தை யுச்சரித்தே பயனை விரும்பாமல் முமுக்ஷுக்கள் தமது சித்தசுத்தியின் பொருட்டுப் பலவகையாய யாகாதி கிரியையைச் செய் வர்; தத்சப்த உச்சாரண மகிமையாலே அவர் தமக்கு யாகாதிகள் யாவும் இடையூறின்றி முடியுமாதலின் இந்தத் தத் சப்தமும் மிக மேன்மையதா மென்றறிந்துகொள்.

[இப்போது ஸ்ரீ பகவான் மூன்றாவது சத் சப்தத்தை இரு சுலோகங்களால் வியாக்கியானித் தருளுகின்றார்.]

ஹே பார்த்த! சத் பாவத்திலும் சாது பாவத்திலும் பெரியோர் சத் தென்னும் சப்தத்தை உச்சரிக்கின்றனர்;

புகழ்ப்பெற்ற கருமத்தின் கண்ணும் சத் சப்தத்தை யுச்சரிக்கின்றனர்.

ஹே அர்ச்சுன! சத்தே சௌமிய இத்தனைக்கு முத லில் என்பதாதி மறைகளில் வெளியாய் சத் தென்னும் பிரஹ்மத்தின் நாமத்தை நாலுணர் பெரியோர் சற்பாவத் தின்கண் ணுச்சரிக்கின்றனர்; அதாவது எதனுல் இருப் பின்மைச் சங்கையுண்டாமோ அதற்கு இருப்பு இருப் பதில் சத் சப்தத்தை யுச்சரிக்கின்றனர். சாது பாவத்தி லும் சத் சப்தத்தை யுச்சரிப்பர்; அதாவது, எதற்கு அசா துத்தன்மை சங்கையுண்டாகுமோ அதன் சாதுத் தன்மை யிலும் அதனை யுச்சரிக்கின்றனர். ஆதலின் இந்தச் சத் சப்தம், இடையூற்றை நீக்கி யாகாதிகளைச் சாதுத்துவ மாக்குவதற்கும், அவற்றின் பயனை யிருத்தற்கும் ஆற்ற லுடையதாம். சத் பாவத்திலும், சாது பாவத்திலும் இச் சத் சப்தம் உச்சரிக்கப்படுவதே போலத் தடையில்லாமல் விரைவாகவே இன்பத்தை யுண்டாக்குவதாகிய விவாகாதி மங்கள காரியத்தும் பெரியோர் சத் சப்தத்தை யுச்சரிப்ப ராதலின், இச் சத் சப்தம் இடையூற்றை நீக்கி யாகம் முதலியவற்றில் தடையில்லாமல் விரைவாகவே பலத்தை யுண்டாக்குந் தன்மையைச் சம்பாதிப்பதில் ஆற்றலுடை யதாம் ஆதலின் இச் சத் சப்தம் மிகவும் மேன்மை யுடையதாம்.

அல்லாமலும் பகவான் கூறுவது:—ஹே அர்ச்சுன! பின்ன ரும், யாகத்திலும், தவத்திலும், தானத்திலும் இருக் கும் நிலையும் சத்தேயாகும். அவ்வர்த்த சம்பந்த மாகிய கருமமும் சத்தே.

ஹே கௌந்தேய! யாகத்திலும், தபசிலும், தானத் திலும் எவ்வுண்மை யிருக்கின்றதோ, அதாவது தற்பரமாக எவ்வடிவ நிஷ்டையுளதோ அதனிருப்பும் அறிஞர்களாற்

சத் தெனப்படும். அவ்வர்த்த சம்பந்தமாகிய கருமமும் சத்தே. யகமுதலிய அர்த்தங்களில் உண்டாகிய அவற்றின் அனுகூல கருமவிசேஷம் அவ்வர்த்த சம்பந்தமாம். அல்லது எந்தப் பிரஹ்மத்திற்கு இச் சத்தென்னும் பெயர் சொல்லப் பெற்றதோ அதுவே அர்த்தம்; விஷயம் எதற்கோ அது அவ்வர்த்தமாம். இத்தகைய சுத்தம் பிரஹ்ம விஷய ஞானத்தின் அனுகூல கருமம் அல்லது ஸ்ரீ பகவத்தர்ப்பண புத்தியாலே செய்யுங் கருமம் அல்லது பர மேசுர அடைவின்பொருட்டுச் செய்யுங்கருமம் அவ்வர்த்த சம்பந்த கருமமாம். இக்கருமத்தையும் அறிஞர் சத்தெனக் கூறினர். சத்தென்னும் பெயர் யாகாதிகரும இடையூறு நீக்குஞ் சமர்த்துடைய தாதலால் மிகவும் மேன்மைய தாகும். ஓம் தத் சத் என்னும் பிரஹ்ம நாமத்தின் ஒவ்வொரு ஓங்காராதிரூப அவயவத்திற்கும் இவ்வித பெருமையான திருந்தால், அவையாவுங் கூறியதற்கு, அத்தியந்த அற்புத மகிமை உண்டு என்பதைக் கூறவும் வேண்டுமோ?

அர்ச்சுனன் வினா:—ஹே பகவானே! ஆலசிய முதலிய தோஷத்தாலே, நூல் விதித்த விதியை விடுத்துச் சிரத்தை யுடையவனுகிக் கேவலம் பெரியோரின் விவகார மாத்திரத்தாலே யாகம் முதலியவற்றைச் செய்பவன் பிரமாதவசத்தால் அவற்றில் இடையூறடைந்து ஓம் தத் சத் தென்னும் பிரஹ்ம நாமத்தாலே, அந்த இடையூற்றின் நீக்கம் உண்டாகும்போது சிரத்தை யில்லாமையால் நூல்விதித்த விதியைப் பரித்தியாகித்துத் தனது இச்சையாலே சிற்சில யாகாதிகளைச் செய்யும் ஆசுரனுக்கும் அந்நாமத்தாலே இடையூறு கழிந்து விடுமாதலின், யாகாதிகளின் சாத்விகத் தன்மைக் கேதுவாகிய சிரத்தைக்கு யாதொரு பயனு மில்லையல்லவா?

பகவான் விடை:—ஹே பார்த்த! அசிரத்தையுடன் ஹோமஞ் செய்வதும், தானஞ் செய்வதும், தவஞ் செய்வதும், மற்றெக்கருமஞ் செய்வதும் ஆகிய யாவும் அசத் தென்னப்படும். அதுபற்றி யல்லவா சிரத்தையில்லாத கருமம் பரலோகத்திலும் பயன் கொடாமற் போகின்றது. ஹே பற்குன! அவ்வண்ணஞ் சிரத்தையில்லாமல் அக்கினியிற் செய்யும் ஹவனமும் பிராஹ்மணர்க் கீயும் பொன் முதலிய தானமும், காயவாக்குக் கருத்தென்னும் மூவகையாலாய தவமும், இவற்றினும் வேறாகிய துதி நமஸ்காராதிகளும், இவைபோன்ற மற்றெவையுமே அசத்தெனப் படும்; அதாவது அக்கருமம் யாவுமே அசாதுவேயாம்; ஆகையால் சிரத்தையில்லாமற் செய்த அக்கருமங்கட்கு ஓம் தத் சத் தென்னும் நாமத்தாலே சாது பாவஞ் செய்யப்படுவ தில்லையாம். கல்லின்மேல் முளையுண்டாகத் தகுதியே யற்றதுபோற் சிரத்தை யற்ற கருமங்களில் எல்லா வகையாலும் சாதுத் தகைமையாகிய யோக்கியதையே யுண்டாகாதாம். ஆகவே அவற்றில் ஓம் தத் சத் தென்னு நாமத்தாலே சாது பாவம் ஒருகாலும் சம்பவியாதாம். சிரத்தையில்லாத கருமம் எந்த ஹேதுவினாலே அசத்தெனப் படுமெனில், அந்த ஹேதுவைச் சொல்லுகிறேன். கேட்பாயாக: அசிரத்தையிலே செய்த கருமம் பரலோகத்திலும் பயனை யளியாது. ஏனெனில், சிரத்தையற்ற கருமம் இடையூறு உடையதாகையால் தருமரூப அபூர்வத்தை யுண்டாக்காது. அபூர்வமில்லாமல் துறக்கம் எய்தாதல்லவா! மற்றும் இகலோகப் புகழ்ச்சிப் பயனும் இல்லையாகும்; ஏனெனில், சிரத்தை யில்லாதவனைச் சிட்டர் துதியார், நிந்தையே

செய்வாராகவின் சிரத்தையில்லாது செய்யும் யாகாதிகள் இகபரலோகப் பயனில்லாதவையே. ஆகையால் மனத்தூய்மையின் பொருட்டு அதிகாரி சாத்விக சிரத்தையாலே சாத்விகயாகாதிகளைச் செய்தல்வேண்டும். சிரத்தையுடன் செய்ய அவற்றின் கண்ணே யிடையூறுண்டாகிலோ ஓம் தத் சத்தென்னும் பிரஹ்ம நாமத்தை யுச்சரித்து யாகாதிகளை இடையூறற்றவையாக்கவேண்டும். இந்த 17-வது அத்தியாயத்தில் நிர்ணயிக்கப்பட்ட பொருள், ஆலசியமுதலிய தோஷத்தால் நூல்விதியை விடுத்துச் சிரத்தையுடன் தந்தை, தந்தையின் தந்தை முதலிய பெரியவரது விவகார மாத்திரையாலே யாகாதிகளில் முயன்று சாஸ்திரவிதியை விடுதலாகிய ஆசுரதருமம், சிரத்தையோடுங் கூடிய கருமங்களின் அனுட்டானரூப தேவதருமம் என்னும் இரண்டோடுங் கூடலின், அவற்றைச் செய்வோர் அசுரரா? தேவரா? என்னும் அர்ச்சுனது சம்சம விஷயத்திலடங்கியவருள் யாவர் இராஜத தாமத சிரத்தைவாயிலாக இராஜத தாமத ரூபயாகாதிகளையே செய்வாரோ அவர் அசுரராவர்; அவர் சாஸ்திரங்களில் ஞானசாதனங்களின் அதிகாரிகளல்லர்; யாவர் சாத்விக சிரத்தை வாயிலாகச் சாத்துவிக யாகாதிகளையே செய்வரோ, அவர் தேவராவர்; அவர்கள் சாதனங்களின் அதிகாரிகள் ஆவர் என்று ஸ்ரீ பகவானவர் ஈண்டுச் சாத்விகாதி மூவகைச் சிரத்தை வாயிலாக ஆகாராதிகளின் சாத்விகாதி மூவிதத்தைச் சித்தஞ் செய்தருளினர் என்பதாம்.

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

# 18-வது சஞ்சேப அத்தியாயம்

[முன்னர் 17-வது அத்தியாயத்திற் சிரத்தையின் சாத்விகாதி மூவகை வேற்றுமையையும், ஆகார யாக தவதானம் என்னும் நான்கினது சாத்விகாதி மூவகைப் பேதத்தையும், கருமிகளின் சாத்விகாதி மூவகைப் பேதத்தையும் கூறினார். சாத்விகர்களைக் கவரவும், இராஜச தாமசர்களை விடவும், இப்போது சந்யாசத்தின் சாத்விகாதி மூவகைப் பேதத்தைக் கூறி சந்யாசிகளின் மூவகைப் பேதத்தையும் அவசியங் கூறவேண்டும். ஆன்ம சாக்ஷாத்காரத்தின் பின்னர்ச் செய்யத்தக்கதாகிய பலபூத சர்வ கருமங்களின் வித்வத் சந்நியாசமோ முன் 14-வது அத்தியாயத்திற் குணாதீத ரூபமாய் விவரிக்கப்பட்டது. ஆகையால் பலமாய வித்வத் சந்நியாசமோ சாத்விகாதி மூவகைப்பேதத்தகுதிய தாகாதாம்; ஆன்ம ஞானத்தின்முன் அதனை யடையும் பொருட்டுச் சர்வகருமங்களின் சந்யாசத்தை ஆன்மஞான மடைய வேண்டுமென்னு மிச்சையுடையவன் வேதாந்த வாக்கியங்களின் ஆராய்ச்சியின் பொருட்டுச் செய்வன்; அது விவிதிஷா சந்யாசமாம்; அதுவும், "இக்கருமகாண்ட ரூபவேதம் திரைகுண்யத்தை விஷயஞ்செய்வதாம். நீ அத்திரைகுண்ய மற்றவனுகுதி" என்பதாகிய திருவாக்குகளால் இரண்டாவது அத்தியாயத்தில் நிர்க்குணரூபமாக விவரிக்கப்பட்டதாகையால் சாத்விகாதி மூவகைத் தாக்கத் தகுதியாகாதாம்; பல வடிவவித்வத் சந்யாசமும் விவிதிஷா சந்யாசமும் குணாதீத சந்யாசம் எனப்பெறும். ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடையாதவர்கள், அதனிச்சை வடிவ விவிதிஷையு முண்டாகாதவர்கள்; தத்துவவித்தன்மையற்ற ஜிஞ்ஞாசுத்தன்மை யில்லாதவர்களின் கரும சந்யாசம்

"அவன் சந்யாசியும் யோகியுமாவான்" என்பது முதலிய திருவாக்குக்களாலே முன் கௌண சந்யாசமாய்க் கூறியருளப் பெற்றதாகும். அதனது சாத்விகாதி முப்பேதங் கூடும்; அதனை விசேடமாயறிய ஆவல்கொண்டவனாகிய அருச்சுனன் ஸ்ரீ பகவானை வினவுதல்.]

அர்ச்சுனன் கூறல்:—ஹே மகா பாகுவாகிய தேசிகோத்தமரே! ஹே இருஷிகேசரே! கேசியைக் கொன்றவரே! சந்யாசத்தினதும் தியாகத்தினதும் சொரூபத்தை யான் தனித்தனியறிய விரும்புகிறேன். ஆகையாலவன்மீதுள்ள தயையா லவற்றைக் கூறியருள வேண்டும்.

ஹே பகவானே! எவர்கட்கு ஆன்மஞான முண்டாகவில்லையோ, அதனிச்சாரூபமான விவிதிஷையு முண்டாகவில்லையோ, அத்தகைய கருமாதிகாரிசெய்த சிறிது கருமத்தைக் கவர்ந்து சிறிதின் பரித்தியாகம் யாதோ அது தியாக அம்சரூப குணயோகத்தாலே கௌணி விருத்தியாகச் சந்யாச மெனப்படும். இங்ஙனம் சித்த சுத்தியின் பொருட்டு அறிஞனல்லாத கரும அதிகாரிசெய்த எல்லா வகையாலும் கருமங்களின்றி யாகரூபமில்லாததும் ஏகதேச தியாகமுமாகிய சந்யாசம் எதுவாமோ அதன் சொரூபத்தைச் சாத்விகாதி முப்பேதத்தாலே யறிய விரும்புகின்றேன்; தியாகத்தின் சொரூபத்தையும் அவ்வாறே அறிய ஆசைப்படுகின்றேன். சந்யாசம் தியாகம் என்னும் இரண்டு சப்தமும் கடபட சப்தங்களைப்போல வேறு வேறு பொருளைக் கூறுவனவா? அல்லது கடகலச சப்தங்களைப்போல ஒரே பொருளைக் கூறுவனவா? அவற்றுள் முதற் பக்ஷத்தை யங்கீகரிக்கிலோ தியாகவடிவத்தைச் சந்யாசத்திலும் வேறாக்கியறிய யான் இச்சிக்கின்றேன். இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கிலோ அவ்விரண்டன் பிரவிருத்தியின் நிமித்த

பூதமாய் உட்பட்ட உபாதியின் பேதமாத்திரம் கூறியருள வேண்டும்; அவ்விரண்டனுள் ஒன்றின் வியாக்கியானஞ் செய்யின் இரண்டாவதன் வியாக்கியானம் சித்தமாம். மகாபாகு = பெருந் தோள்களை யுடையோன். கேசியைக் கெடுத்தோன் = கேசி யென்னும் அசுரனைக் கொன்றோன், என்னும் இவ்விரண்டு சம்போதனத்தாலே அர்ச்சுனன் ஸ்ரீ பகவானிடத்தே வெளியுபத்திரவத்தை நீக்குமாற்றலைக் குறிப்பித்தனன். ஹ்ருஷீகமென்பது பொறியாம்; அதன் ஈசன் = ஏவுபவன், ஹ்ருஷீகேசனுவன்; இதனாலே உட்காதக் குரோதாதி யுபத்ரவத்தை நீக்குமாற்றலைக் குறிப்பித்தனன். ஸ்ரீ பகவானிடத்திருக்கும் மிகுந்த பக்தியினாலே மூன்று சம்போதனங்கள் தந்தனன் கரும அதிகாரியாகிய அறியான் செய்த சந்யாசத்தில் மொழிந்த யாகாதிகளின் ஒப்புமையு மிருக்கும். குணாதீதரூப இருவகைச் சந்யாசத்தின் ஒப்புமையு மிருக்கும்; மக முதலியவற்றைக் கரும அதிகாரியே செய்வதுபோலச் சந்யாசத்தையுஞ் செய்வன்; இதுதான் சந்யாசத்தில் மக முதலியவற்றின் ஒப்புமை. குணாதீதமெனப் பெயருள்ள இருவகைச் சந்யாசம், சந்யாச சப்தத்தாலே கூறியதேபோல இச்சந்யாசமும் கூறின் இதில் அவ்விருவகைச் சந்யாசத்தின் ஒப்புமையுண்டாம். இவ்வாறு மகம் குணாதீத மென்பவற்றின் ஒற்றுமையாலே இதில் முக்குணத் தன்மையின் சம்பவ அசம்பவமிரண்டாலு முண்டாம் சம்சயமோ முதல் வினாவின் விடையாம். சந்யாசம் தியாகமென்னும் இரண்டு சப்தங்கட்கும் கடகலசமென்னும் இரண்டு சப்தங்கட்குள்ளது போலும் பரியாயத் தன்மை யிருத்தலின் கருமத்தியாகரூபத்தாலும், கரும பலத்தியாக ரூபத்தாலும் அவ்விரண்டின் விலக்ஷணத்தன்மைக் கூற்றாலுண்டாகிய ஐயமோ இரண்டாவது வினாவின் விடையாமென உய்த்துணர்க.

[அவற்றுள், சூசிகடாக நியாயம்பற்றி ஈற்றுவினவை நீக்குவதன் பொருட்டு ஸ்ரீ பகவான் உத்தரங் கூறியருளல்:—கொல்லனானவன் அதிகப் பிரயத்தனத்தினாலே அடித்துண்டாக்குங் கடாகத்தை விடுத்து, முதலில் அற்பப் பிரயத்தனத்தினாலே செய்யக்கூடிய ஊசியைச் செய்து கொடுத்தல் போல, அதிவிஸ்தாரமாக அறைவதற்குத்தகுதியாய பொருளைவிட்டு முதலில் அற்பமாகக் கூறப்படும் பொருளைக் கூறுதலே சூசிகடாக நியாயமாம்.]

ஏ அர்ச்சுன! காமிய கருமத்தியாகத்தைச் சூக்கும தரிசிகள் சந்யாசம் என்பர்; விசாரகுசலர் சர்வ கருமங்களின் பலத்தியாகத்தைத் தியாகமென்பர்.

ஏ கௌந்தேய! 'துறக்ககாமன் வேட்க' என்பதாதி விதிவசனங்கள், சுவர்க்காதி பலத்தை விரும்பியவர்க்குக் கூறும் ஜோதிட்டோமாதி காமியகருமம், சித்தசுத்தியிற் சிறிது மாத்திரையும் உபயோகமாகாதாம். அத்தகைய தியாகத்தைப் பெரியோர் சந்யாசமென்பர். ஏனெனின்?

"பூத பதிபூத பால னுலகூடு போக முடியாத தானதோர்
சேது வெனுமீச னை வினைமேவல் தேடி வழிபாடு மேவியே
வேத மொழியாலும் வேள்வி பலவாலு மேவு தவதான பூசையே
யாதி வறியாலு மாத ரவினாலு மாயு முனிஞானி யாகுவான்."

என்னும் சுருதியானது நித்திய கருமங்கேட்க, தடையாய பாவத்தை நீக்குதலின் வாயிலாக ஆன்ம ஞானத்தில் உபயோகம் ஆம்வண்ணம் கூறுகின்றது. இச்சுருதியில் வேத மொழியாலும் என்றது பிரஹ்மசாரியின் சர்வ தருமங்களையும் குறிப்பதாம்; வேள்வி தானம் என்பனவோ இல்லறத்தானது எல்லாத் தருமங்களையும் காட்டுவனவாம். தவமென்றதோ வனத்திலிருப்பவனது சர்வதரும உபலக்ஷணமாம். "ஆவதாஞான மதிகாரிகட்குப் பாவமாம் வினையின்

படிற்றலானே" என்னும் வசனமும் தடையாய் பாவத்தை நீக்குதலின் வாயிலாக நித்திய கருமத்திற்கு ஆன்மஞான உற்பத்தியில் உபயோகம் ஆமாறு நிகழ்த்துகின்றது. ஆகையால் நித்திய கருமங்கட்கே ஆன்மஞானத்தின் கண்ணேனும், ஆன்மஞானத்தின் இச்சாரூபமான விவிதிஷையின் கண்ணேனும் உபயோகமாம்: காமியகருமங்கட்கோ உபயோகம் இல்லையாம். ஆதலின் மனத்தூய்மை வாயிலாயும் அறியும் வேட்கையாக்கும் வாயிலாயும் ஆன்மஞானத்தை யடையும் அவாவையுடையவன் பகவதர்ப்பண யுத்தியாலே நித்திய கருமங்களையே அனுஷ்டிக்கவேண்டும். காமிய கருமமோ அவ்வப்பயனோடு யாவுமே பரித்தியாகஞ் செய்யத்தக்கனவாம். 'ஏமமன்றி எவ்வினைப் பயன்களான யாவையுந், தீமையென்றறத் துடைத்து இருத்தல் தியாகமாவதே' சர்வகாமிய கருமங்களின் நித்திய கருமங்களின் பலத்தியாகம். அதாவது மனத்தூய்மையை வாஞ்சித்து விவிதிஷையின் அடைவின் பொருட்டு எந்தக் காமிய நித்திய சர்வகருமங்களின் அனுஷ்டானமுளதோ அவற்றின் பயனைத் தியாகித்தலைத் தியாகமென்பர் ஆராய்ச்சி மிகுந்த ஆரியர். துறக்க காமன்வேட்க என்பதாதி வசனங்கள் சோதிட்டோமாதி காமிய கருமங்கட்குத் துறக்கம் மைந்தன் முதலிய வேறு வேறு பயனை கூறியிருக்கின்றன. என்றபோதிலும் அதிகாரியானவன் அவற்றுள் ஒன்றையும் ஆசைப்படாமல் அந்தக் காமியகருமத்தையும், சித்தசுத்தியின் பொருட்டே செய்தல்வேண்டும்; ஏனெனின் அக்கினிஹோத்திராதி கருமங்களில் இயற்கையாய் நித்தியத்தன்மையேனும் காமியத்தன்மையேனும் உண்டாவதின்றும். மற்றோ கருத்தாவின் கருத்தின் சிறப்பாலே சித்தமாம். சுவர்க்காதி பல இச்சை வாயிலாகச் செய்யப்படும் அதன் கண் காமியத்தன்மையும், பலனை விரும்பாமற் பகவதர்ப்

பணமதியாலே செய்யும் அதன்கண் நித்தியத்தன்மையும் இருக்குமாதலின், இது துணியலாம்:—ஆன்பஞானத்தின் ஆசை வடிவ விவிதிஷையின்கட் கேவலம் நித்திய கருமங் கட்கே உபயோகமாமன்றிக் காமியத்திற் கிறையளவு மில்லையாமாதலின், முமுக்ஷுக்கள் காமிய கருமங்களையும் அவற்றின் பயனையும் அடியோடு பரித்தியாகித்தல் வேண் டும். விவிதிஷையின்கண் நித்திய கருமங்கட்கு உபயோக மிருத்தலேபோல அவ்வப் பல ஆசையற்ற காமிய கருமத் திற்கும் உபயோகமாம். ஆகையால் விவிதிஷைபெறக் காமிய நித்திய கருமங்களைச் செய்தபோதிலும் அதிகாரி அவ்வக்கருமத்தின் அவ்வப்பயனில் கொண்ட ஆசை மாத் திரத்தைப் பரித்தியாகஞ் செய்க பலசகித காமிய கரும மாத்திரத்தின்றி யாகமோ சந்யாச சப்தப் பொருளாம். நித்திய காமியரூப சர்வ கருமங்களின் பல இச்சை மாத் திரப் பரித்தியாகம் தியாக சப்தத்தின் பொருளாம். ஆக வின் கடபட மிரண்டினுக்கும் கடத்வபடத்வ ஜாதியுடைய பொருள் தோற்றுவதேபோலச் சந்யாசம் தியாகம் என்னு மிரண்டு சப்தங்கட்கும் வேறுவேறு ஜாதியுடைய அர்த்த மின்றும். மற்றே, பணத்தூய்மையின் பொருட்டுச் சொரூபமாகவே கருமங்களின் அநுஷ்டானம் உளதாயி னும் அவ்வப்பல இச்சையின் பரித்தியாகவடிவ ஒரே பொருள் அவ்விரண்டு சப்தங்கட்கும் சித்தமாம் இத னாலே ஒரு வினாவின் விடை துணியப்பெற்றதாம்.

[இண்டாவது வினாவின் விடையை யருளும் பொருட் டும் சந்யாச தியாக சப்தங்களின் அருத்தங்களில் மூவ கைத் தகைமையை யருளும் பொருட்டும், முதலிய அப் பொருளில் வாதிகளின் ஐயத்தை ஸ்ரீ பகவான் அருளல்.]

ஏ பார்த்த! இராகத் துவேஷாதி தோஷங்களைப் போலக் கருமமும் பரித்தியாகஞ்செய்ய யோக்கியமாம்.

இவ்வண்ணம் சில புத்திமான்கள் இயம்புவர். யாக தான தவ ரூபகருமம் தியாகிக்க யோக்கியமன்றுமென்பர் வேறு சில பெரியோர். ஏ பற்குண! நித்திய, நைமித்திக, காமிய பிராயச்சித்த முதலிய சர்வ கருமங்களும், இவனது பந்த ஹேதுவாதலின், தோஷமுடையனவாம். ஆகவே மனத் தூய்மையற்ற கரும அதிகாரியும் கரும முழுதையும் பரித் தியாகமே செய்ய வேண்டும் என்பர் சில பெரியோர். இராகத் துவேஷாதி தோஷங்கள் அதிகாரியால் விடத் தக்கவையேபோல ஆன்ம ஞானத்தை யடையாதவரும், அதையறியும் அவாவடையாதவரும் ஆகிய கருமாதிகாரி களும் தங்களுடைய பந்தவேதுவென வுணர்ந்து சர்வ கருமங்களையும் தியாகமே செய்ய வேண்டும். யாக தான தவரூப கருமத்தை, சித்தசுத்தியற்ற கரும அதிகாரி மனத் தூய்மை வாயிலாக அறியும் வேட்கை யுண்டாதற் பொருட்டு ஒருபோதுமே விடலாகாது எனச் சில பெரி யோர் கூறுவர்.

[இவ்வண்ணம் கரும பரித்தியாகத்தில் வாதிகளின் சம்சயத்தைக் கூறி ஸ்ரீ பகவான் தமது தீர்மானத்தை யுரைத்தருளல்.]

ஏ பாதகுல மேன்மைமிக்கோய்! அந்தக் கருமத் தியாகத்தின்கண் எமது துணிபை நீ கேட்பாயாக. ஏ சர்வபுருட சிரேஷ்ட! அத் தியாகம் மூவகையாய் அன்றே கூறப்பட்டிருக்கின்றது!

ஏ அர்ச்சுன! மனத்தூய்மையற்ற கரும அதிகாரியைக் கர்த்தாவாகவுடைய சந்யாசம் தியாகம் என்னும் இருசப் தங்களாலே பிரதிபாதிக்கப்பட்ட பலேச்சா பூர்வக கருமங் களின் பரித்தியாகத்தைச் சொரூபமாகவுடையதாக முன் எம்மாற் கேட்கப்பெற்ற அதன்கட் பூர்வ ஆசிரியர் செய்த

துணிபை நீ கேட்பாயாக வென்றருளியதென்னே? அந்தத் தியாகத்தில், தங்கள்பாற் கேட்கவேண்டியதாக, அறியக் கூடாத தகைமையிருந்தவாறென்? என்னும் அர்ச்சுனனது சங்கையை நீக்கியருள ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளு கின்றார்:—ஏ அன்ப! கருமாதிகாரியைக் கருத்தாவாக வுடையதாகிய பலேச்சாபூர்வக கருமங்களின் தியாகத்தை வேதமுணர்ந்தவர் மூவகையாகக் கூறுவர். தாமதாதி முக்குண வேறுபாட்டாலே அந்தத்தியாகம் மூவகையாக மொழியப் பெறும்; பலத்தின் இச்சை வடிவ விசேஷணத் தாலே விசிஷ்ட கருமத்தியாகம், விசேஷண மின்மையாலே விசேடியமின்மையாலே உபயமின்மையாலே ஆமெனப் பெறும்; அஃதாமாறிங்ஙனம்:—தண்டரூப விசேஷண விசிஷ்டமாகிய தண்டியினபாவம் விசிஷ்டா பாவமாம். அது, புருட விசேடியமிருந்தும் தண்டவிசேஷண மிலதே யாம். அப்போது விசேஷண தண்டமின்மையால் உண் டாய விசிஷ்டபாவமெனப்படும். தண்டவிசேஷண மிலதே தும் புருட விசேடியமிலதேல் தண்டியபாவமாம். இது விசேடியமிலதாக வுண்டாம் விசிஷ்டா பாவமாம். இரண்டு மிலாதபோதும் தண்டிய பாவமாம். இது இரண்டின பாவத்தாலுண்டாய விசிஷ்டா பாவமாம். இத்திருஷ்டாந் தம்போலவே, பலேச்சா விசேஷண விசிஷ்ட கருமத்தியாக ரூப விசிஷ்டாபாவம். இச்சையாகிய விசேஷண மில்லாமை யாலும் கருமரூப விசேடிய மில்லாமையாலும், உபய மின்மையாலும் உண்டாம்; கருமமிருப்பினும் இச்சை விடு தலாலே விசிஷ்டத் தியாகமாம். இது விசேஷண மின்மை யாலுண்டானதாம் இச்சையிருப்பினும் கருமத்தை விடுத லாலே ஆகுமது விசேடிய மின்மையாலாயதாம். இரண்டு மின்மையாலே ஆகுமதுவோ விசேடிய விசேஷணமிரண்டு மின்மையாலுண்டாயதாம். அவற்றுள் முதற்றியாகமோ

சாத்விகமாதலின் கவரத் தகுதியதாம். இரண்டாவதோ இராஜச தாமத பேதத்தாலே இருவகையாம். இவ்விரு வகையுமே இகழ்ந்துவிடத் தக்கனவாம். துயர்மதியாற் செய்யப்பற்ற கருமத்தியாகம் இராஜசமாம் மயல்வடிவ விபரீதத்தாலே செய்யப்பெற்ற கருமத்தியாகம் தாமசமாம்; இவ்வண்ணம் கரும அதிகாரியாலே செய்யப்பெற்ற கருமத்தியாகமே அருச்சுனனது வினா விடயமாம். மனத்தூய்மை யுடையனுதலின், கரும அதிகாரியைக் கருத்தாவாகவுடைய மூன்றுவது குணாதீதமென்னும் தியாகம் கண்டு, அர்ச்சுனன் வினாவிடயமல்லவாம். இத்தியாகமும் சாதன பல வடிவத்தாலே இருவகையாம். பல இச்சையின்றி யாகவாயிலாய கரும அனுஷ்டானரூப சாத்விகத்தியாசத்தால் மனத்தூய்மையை யடைந்தவனும், ஆன்மஞானேச்சை வடிவ விவிதிஷை யுதிக்கப்பெற்றவனும் ஆன்ம ஞான சாதன பூத சிரவண மனன ரூப வேதாந்தவிசாரப் பொருட்டுச் சுவர்க்காதி சர்வபல இச்சையற்றவனும் ஆகிய அதிகாரி மனத்தூய்மையின் பின்னர்ச்செய்த தூய்மையின் சாதனபூதமாகிய சர்வ கரும பரித்தியாகமோ முதற்சாதன ரூப தியாக மெனப்படும் இதனையே பெரியோர் விவிதிஷா சந்யாச மென்பர். இதனை ஸ்ரீ பகவானும் அருளுவர். முன் ஜன்மத்திற்செய்த சிரவணாதி சாதனங்களின் அப்யாச பரிபாகத்தால் இச்சன்மத்தில் ஆதியிலே ஆன்மசாக்ஷாத்காரமடைந்த கிருதகிருத்திய ஞானி தானே செய்த பலேச்சை கரும பரித்தியாகம் இரண்டாவது பல வடிவத் தியாகமாம் இது வித்வத் சந்யாச மெனப்படும். இதனை ஸ்ரீ பகவான் முன்னருளியுள்ளார். திடப்பிரஞ்ஞன் இலக்கணாதிகளாலும் விரிவாயருளினர். ஏ அர்ச்சுன! எதனாலே முன்மொழிந்த முறையே தியாகவடிவம் மிகவும் அறியத்தகாததாமோ; நீ தியாக தத்துவத்தை யறியவிரும்பு

கின்றேன் என்பதனாலே முன்னதனை யுணர வேண்டி னையோ, அதனாலே சர்வஞ்ஞராகிய எமது உபதேசம்பெற அதன் உண்மை வடிவத்தை நீ துணியக்கடவாய். ஈண்டு முன்மொழிந்த இரண்டு விளிகளாலே, அருச்சுனன்பால் குல நிமித்தக மேன்மையையும், தன் பௌருட நிமித்தக மேன்மையையும் ஸ்ரீ பகவான் உணர்த்தி யருளியவாறு காணலாம். ஆகவே அவனிடத்தில் தியாகவடிவத்தைத் துணியும் தகுதி குறிப்பிடத் தருளியவாறும் காணலாம்.

[பகவானே! 18-வது அத்தியாயம் 3-வது சுலோகத்தி லருளிய வாதிகளின் பக்ஷங்களுள் எது தங்களாற் றுணிந் தருளப்பெறுவது? முதலாவதா? இரண்டாவதா? மூன்று வதா? என்னும் அருச்சுனனது வினவிற்கு இரண்டாவது பக்ஷமே எமது துணிபு என்று ஸ்ரீ பகவான் விடையருளல் ]

ஏ அருச்சுன! யாக தான தவ வடிவமான கருமம் தியாகிக்கத் தக்கதாகாது, செய்யத் தகுந்ததேயாம். யாக தான தவமென்னும் மூன்றும் பலனில் இச்சையற்ற புரு டர்களைப் பவித்திரஞ் செய்வதேயாம்.

ஏ பார்த்த! சுருதியின் சம்மந்தமும் ஸ்மிருதியின் சம் பந்தமுமான அக்கினி ஹோத்திராதி யாகம், உத்தமதேச காலத்தில் சுபாத்திரத்தில் சாத்திரவிதிப்படி, கோ, பொன், அன்ன முதலியவற்றை ஈயுந்தானம், கிருச்சிரசாந்திராயண வடிவமான தவம் என்னும் மூன்றும் முதன் மூன்றாசிரமி கள் ஆசிரிக்கத்தக்க சாஸ்திர விகிதமான சர்வ கருமங்க ளின் உபலக்ஷணமாம் அவை மோக்ஷ முதலிய பலன்களில் இச்சையில்லாதவரைப் பரிசுத்தமாக்கும்; அதாவது அவை ஞானத்தின் தடையாகிய பாவமலத்தை நீக்கிஞான முதிக் கத்தக்க புண்ணிய குணத்தை யுண்டாக்கிப் பலனில் இச்சை யற்றவரின் தூய்மையேயாகும். இங்கு அந்தக்கரண

வுபாதியின் சுத்தியினாலே அதன் உபகிதரின் சுத்தியை ஸ்ரீ பகவான் கருதியருளியதாம். யாகாதிகள் பயனை விரும்பாதவர்க்கு மனத்தூய்மையை யாக்குவனவாம் ஆகலின் மனத்தூய்மையை விரும்பிய கரும அதிகாரி பலத்தின் இச்சையற்ற அவற்றை ஒருகாலும் விடாமற் செய்தல் வேண்டும் இதனால் ஸ்ரீ பகவான் யாகாதிகளைத் தியாகம் செய்யாமையை யருளினார். அதனாலே பொருளால் அவற்றின் செய்கை யடைவுறுமாதலின் மீளவும் அவற்றின் செய்கையை யருளல் பொருந்தாதாம் எனினும் அவற்றின் செய்கையில் மிக்க ஆதரத்தின் பொருட்டு மீண்டும் அருளினார். செய்தற்பாலனவாமென வேதம் விதித்துண்மையாலே யாகாதிகள் செய்யத்தக்கனவே யாமாதலின் அவை அதிகாரிகளால் ஒருகாலும் விடத்தகாதனவேயாம்.

[ஏ கருணை மூர்த்தியே! யாகாதிகட்கு ஒருகால் மனத்தூய்மை செய்வதில் ஆற்றலிருக்குமாயின், மோக்ஷ முதலியவற்றை விரும்பிச் செய்தபோதிலும் அவை மனத்தூய்மையாகுமாதலின் பலேச்சையை பரித்தியாகித்தல் பயனில்லாத கூற்றேயாம் என்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் விடையருளல்.]

ஏ கௌந்தேய! முற்கூறிய யாகதானாதி கருமமும் கர்த்திருத்துவ அபிமானத்தையும் சுவர்க்காதி பலத்தையும் பரித்தியாகித்துச் செய்யத்தக்கதாம் என்பது பரமேசுராகிய எமது மேன்மையான துணிபாம்.

ஏ குழந்தாய்! காமியகருமமும் தானதரும இயற்கையாலே மனத்தூய்மையைச் செய்யுமாயினும், அதனால் உளதாகிய வுளத்தூய்மையானது அதன்பயனான சுகத்தை அநுபவிக்கு மாத்திரத்திலே உபயோகமாம் ஆன்மஞானத்திற் சிறிது மாத்திரையும் உபயோகமாகாதாம். இதனை வார்த்

திகக்கிரந்தகருத்தாவாகிய ஸ்ரீசுரேசுவர ஆசிரியரும் அருளி யுள்ளார்கள்:-காமிய கருமங்களைச்செய்தபோதிலும் மனத் தூய்மையேயாம்; ஆனல் அதனுலாகிய தூய்மை கேவலம் போகசித்தியின் பொருட்டேயாகும், ஞானோற்பத்தியின் பொருட்டாகாதாம். எதனுலே இந்திர சம்பந்தியாய சக பலம் மலின அந்தக்கரணத்தோடு கூடிய மலப்பன்றி முத லியவற்றின் தேகத்தாலே போகிக்கமுடியாதோ; தூயமன முடைய தேவதேகத்தாலே போகிக்க முடியுமோ; ஞானத் திலுபயோகமான மனத்தூய்மையை யுண்டாக்கும் யாகா திகள் பலேச்சை வாயிலாய்ச் செய்யப்படின் பந்த காரண ரூபமாயினும் பலேச்சையில்லாது செய்யப்படின் பந்த ஹேது ரூபமாகாதா மாதலின், முமுக்ஷுக்கள் பலேச் சைவாயிலாய் அவற்றைச் செய்யாமல் அதைவிடுத்தே செய்யத்தக்கதாம்; ஆண்டு யவ்வனுதி யவத்தையும் வருண மும் ஆசிரமுமான இவற்றிற்கு நிமித்தமாகிய யான் இக் கருமத்தைச் செய்கின்றேன்; என்னுல் இஃதின்றி யமை யாது செய்ய யோக்கியமானது, என்னும் கர்த்திருத்துவ அபிமானஞ் சங்கமாம்; இச்சைக்கு விடயமாகிய அவ் விரண்டையும் விடுத்தே கருமத்தை மனத்தூய்மையின் பொருட்டுச் செய்யவேண்டும். இங்ஙனமாதல் எமது சம்மதமாம். இதனுலே ஏ கௌந்தேய! கருமாதிகாரியால் யாகாதிகள் விடத்தக்கனவா? விடத்தகாதனவா? என்னும் இரண்டனுள், விடத்தகாதன வென்னும் எமது மதம் மிக வும் மேன்மையதாம் ஸ்ரீ பகவான் முன் 4-வது சுலோகத் திற் கூறியருளிய தமது துணிபையும் சங்கரித்தருளினர்.

[யாகதான என்பதாகிய வசனத்தால் ஸ்ரீ பகவான் முன்மொழிந்தருளிய தமது பட்சத்தை இதுவரையிலும் நிலைபெறுத்தி யருளினர்; இப்போது த்யாஜ்ய மென்ப தாகிய வசனத்தாலே முன்மொழிந்தருளிய பரபக்ஷத்தில்

முன்மொழிந்த தியாக மூவகையை வியாக்கியானித்து விசேஷிக்கத் தொடங்கி யருளுகின்றார்.]

ஏ அர்ச்சுன! கருமத்தின் தியாகம் சம்பவியாதாம். அநித்தியகருமத்தை மோகத்தாலே பரித்தியாகித்தல் தாமத தியாக மெனப்படும்.

ஏ பார்த்த! சுவர்க்காதி பல இச்சையுடன் செய்த காமிய கருமம் மனத்தூய்மையின் ஹேதுவாகாதாம்; மாறுகப் பந்த ஹேதுவேயாம். ஆதலின் அது தோஷமுடையதேயாம். இதனாலே பந்தத்தை நீக்கும் ஆன்மஞானம் விரும்பியோன் ஆற்றிய காமிய கருமத்தியாகமோ சாத்திரத்தாலும் ஊகத்தாலும் சம்பவிப்பதேயாகும்; ஆனால் மனத்தூய்மை யேதுவாதலின் தோஷமற்ற சுருதிஸ்மிருதி விகித அக்கினிஹோத்திர சந்தியாவந்தனாதி நித்திய கருமத் தியாகஞ்செய்தல் மனத்தூய்மை விரும்பினவனாகிய முமுக்ஷுவிற்குச் சாத்திரத்தாலும் ஊகத்தாலும் சம்பவியாதாம். மற்றேறு, மனததூய்மையின் பொருட்டு முமுக்ஷுக்கள் நித்தியகருமத்தை இன்றியமையாது அனுஷ்டிக்க வேண்டும். இப்பொருள் முன்னரும் அருளப்பெற்றது. மனத்தூய்மையை யுண்டாக்கும் நித்திய கருமத்தை மோகவயத்தால் விடுதல் தாமதத் தியாகமாகும். வேத விகித நித்திய கருமத்தில் நிஷிதத்தன்மையுணர்வும், அர்த்த ஹேதுவாகிய அதன்கண்ணே அநர்த்த ஹேதுமதியும், கருமரூபமென்பவற்றில் அகருமத்தன்மை மதியும், அனுஷ்டான யோக்கியமாய அதில் அனனுஷ்டானத்தன்மைமதியும், ஆகிய பயன் ஞானவடிவ விபரீத மோகமாம். இம்மோகவயத்தால் நித்திய கரும பரித்தியாகம் தாமசத்தியாகமாம் இம்மோகம் சாங்கிய சாஸ்திர முடையார்க்குண்டாம்; அவர் கருத்திதுவாம்:—காமிய கருமந் தோஷமுடைய தாவதேபோல

அக்கினி ஹோத்திராதி நித்திய கருமங்களும், தோஷமுடை யனவேயாம்; என்னை, நித்திய கருமங்களுள்ளும், நெல் முதலியவற்றைக் குத்தலின் யாகசாலையைத் துலக்கலின்; அக்கினியில் ஹோமஞ் செய்தலின் ஜீவர்கட் கிம்சையாம், பசுக்கட்கு மிம்சையாம். ஆதலின் நித்தியகருமமும் ஹிம் சைவடிவ தோஷமுடையதாதலின் காமிய கருமம் போலத் துஷ்டமேயாம். "எல்லாப் பிராணியையுமே இம்சிக்க லாகாது" என்னுஞ் சுருதி சர்வபூதங்களின் இம்சையை நிஷேதஞ் செய்துளதாதலின் யாகத்திற்செய்யவும் பசுவின் இம்சையும் நிஷித்தமேயாம். மனத்தூய்மையோ ஹிம்சைப் பிரதான நித்திய கருமமின்றிக் காயத்திரியாதி மந்திரங் களின் ஜன்மத்தாலேயாம். இது ஸ்ரீ மகாபாரதத்திலுங் கூறப்பெற்றுளது. காயத்திரி முதலிய மந்திரங்களின் ஜபமோ சர்வ தருமங்களினும் பரமதரும மெனப்படும். என்னை, ஜபயாகத்தினும் வேறாகிய ஜோதிஷ்டோமாதி யாகங்களியாவும் பூதங்களின் இம்சையாலே பொருந்துவ தாம்; ஜயபாகமோ அஹிம்சையாலே முயல்வதாம்; இத னாலே இஃதியாவினும் உயர்ந்ததாம். இதனை மனுவும் கூறி யுள்ளார். காயத்திரியாதிகளின் ஜபத்தாலே பிராஹ்மணன் மனத்தூய்மையை யடைவன்; இவ்விஷயத்தில் சிறிது மாத்திரையும் ஐயமின்றாம். மனத்தூய்மையின் பொருட்டு அதிகாரி வேறொரு கருமத்தைச் செயல்வேண்டு மென்றே னும் வேண்டா மென்றேனு மின்றாம். அஹிம்சை வடிவ மான மைத்திரியை யுடையவனே பிராஹ்மணன் எனப் படுவன் என்பதாதி சாத்திரங்கள் நித்தியகருமத்தை நிஷே தித்து மனத்தூய்மைக்கு ஜயத்தையே விதிக்கின்றதாதலின் மனத்தூய்மையற்ற கரும அதிகாரியாலும் நித்திய கருமம் விடவே தக்கதாம் என்பர். இக்கூற்று மிக முரணுடைய தாம்; என்னை, யாகத்தில் பசு முதலியவற்றின் இம்சை

அநர்த்த ஹேதுவாகாதாம்: யாகமிலா அஃதே அநர்த்த ஹேதுவாம். மேற்கூறிய அஹிம்சைச் சுருதி பூதஹிம்சையை நிஷேதிக்கினும் யாகம் போரின்றிய ஹிம்சைபரமாம் அந்நிஷேதம்; ஒருகா லவ்வசனம் சர்வஹிம்சை மாத்திரத்தையே நிஷேதிப்ப தாகுமேயாயின், யாகத்தில் பசுஹிம்சையை விதிக்கும் வசனம் வீணேயாம். வேதமொழியை வீணெனல் மிகமுரணுமாதலின் இருவசனத்திற்கும் பரஸ்பரம் சாமானிய அபவாதபாவம் புனைந்து விவஸ்தை செய்தல் உசிதமாம். எப்பிராணியையு மிம்சியா தொழிக வென்பது சாமானியமாம்; அக்கினி ஷோமீய வசனம் அபவாதமாம்; அபவாதத்தை விடுத்தே அயலிடத்திற் சாமானிய வசனப் பிரவிருத்தியாம்; யாகம் போரின்றி யெவ்வுயிரையும் இம்சை செய்யற்கவென அதன்பொருள் கொள்க; கொள்ளவே சாத்திரவிகிதமாக சம்பந்திஹிம்சை தோஷரூபமாகாதாம். முன்மொழிந்த மகாபாரத மனு வசனங்களும் கேவலம் ஜபயாகத்தின் றுதி பரமாமன்றி யாக சம்பந்திஹிம்சையில் அதர்மத்தன்மையைப் போதியாதாம்: இதை நிந்தியாமல் அதைத் துதிக்கின்றதென்பதே கருத்தாம். எவ்வசனத்திற் கெப்பொருளிற் கருத்தாமோ அதற்கு அதுவே பொருளாமாதலின் சாங்கியர்க்கு மேற்கூறியவாறு தோற்றுதல் மோகமேயாகும். மோகவயத்தால் நித்திய கருமத்தியாகம் தாமசத்தியாகமாம்; மோகம் தாமச ரூபமேயல்லவா?

[ஸ்ரீ பகவான் இவ்வண்ணம் தாமதத் தியாகத்தைச் சொல்லியருளி இப்போது இராஜதத் தியாகத்தைச் சொல்லத் தொடங்குகிருர்.]

ஏ அர்ச்சுன! இக்கருமம் துக்கரூபமென் றெண்ணிச் சரீர ஆயாசத்தின் அச்சத்தாலே நித்திய கருமத்தை விடும்

தியாகமே இராஜசமாம். இந்தத் தியாகத்தாலே தியாக பலத்தை அவன் ஒருகாலும் அடையான்.

ஏ கௌந்தேய! முன் மொழிந்த மோகம் இல்லாவிடினும் மனத்தூய்மையை மருவாத கரும அதிகாரி சருவ நித்திய கருமங்களும் துக்கரூபமேயென்று நினைந்து அவற்றைச் செய்தலா லுண்டாகும் சரீரக் கிலேசத்தின் பயத்தாலே அவற்றை விட்டுவிடுதல் இராஜசத் தியாகமாம். அந்தத் துக்கம் இரஜோகுண ரூபமேயாம். மோகமில்லாவிடினும் இராஜசத் தியாகத்தாலே பயன் அடைய முடியாதாம். சாத்வித் தியாகத்தின் ஞானநிஷ்டா ரூபமாகிய பயனை இராஜசத் தியாகி யடையான்.

[முன்னிரண்டு சுலோகங்களாலே நித்திய கருமங்களின் இராஜச தாமத் தியாகங்களை விடவேண்டுமென்றருள, ஆயின் எக்கருமத் தியாகத்தை யதிகாரி யங்கீகரிக்க வேண்டும் என்று தெரிந்துகொள்ளும் விருப்பம் அர்ச்சுனனுக் குண்டாகியபோது சாத்விகத் தியாகமே கொள்ளத் தக்கதாம் என்று ஸ்ரீ பகவான் அதன் வடிவத்தை யருளுகிறார்.]

ஏ விஜய! இக்கருமம் செய்யத் தக்கதேயாம் என்றெண்ணி நித்தியகரும சங்கத்தையும் பலத்தையும் தியாகஞ் செய்வது சாத்விகத் தியாகமென்று பெரியோரால் அங்கீகரிக்கப்பெறும்.

ஏ பார்த்த! நித்திய கருமங்களை விதிக்கும் வாக்கியங்களில் அவற்றின் பயனைச் சொல்லாவிடினும் வேதவிதியாதலின் நித்திய கருமங்கள் அவசியம் செய்யத் தக்கவை என்று நிச்சயித்து, யான் செய்கிறேன் என்னும் அபிமானத்தையும், சுவர்க்காதி பலத்தையும் விட்டுச் சித்த சுத்தியுண்டாம் பரியந்தம் அவற்றைச் செய்தலாகிய தியாகத்தை

சாத்விகத் தியாகம் என்பர் ஆன்றோர். பலத்தின் ஆசையையும் அபிமானத்தையும் விட்டுச்செய்யும் நித்திய கருமம் மனத்தின் தூய்மையை யுண்டாக்கும் என்பதாம். முன்னர் தள்ளிவிட்ட இரண்டு தியாகங்கள் போல இச்சாத்விகத் தியாகம் தள்ளத் தக்கதன்று. சுவர்க்கம் விரும்பியவன் யாகம் செய்க வென்பாதி வசனம் பயனை யுத்தேசித்துக் காமிய கருமத்தை விதிப்பதுபோல நித்திய கருமத்தை விதிக்கும் வசனம் அப்பயனைக் குறித்து அதனை விதியாததாகலின் அதற்கொரு பலமுமேயின்றாம்; இலதாகவே, பலத்தைவிட்டு என்று ஸ்ரீ பகவான் அருளியது எங்ஙனம் கூடுமெனின்? நித்திய கரும வசனம் பயனைக் குறித்து அதனை விதிக்கவில்லை யென்றாலும் அதற்கொரு பயனை இன்றியமையாது கொள்ள வேண்டும்; இல்லாவிடில் பயனை விட்டு என்றருளியது விழைவும் அடைந்ததற்கே விலக்குதலுங் கூடுமென்பர்; ஆகலின் அதற்குமொரு பலம் உண்டென்றன்றோ அம்மொழியாற் கிடைக்கின்றது. பயனைக் குறியாமல் மந்தனும் ஒரு காரியத்தை முயலான் என்றபடியால் அறிஞன் எங்ஙனம் முயல்வன், முயலான். ஆகலின் முயலும் பொருட்டுப் பயனை யவசியம் அங்கீகரித்தல் வேண்டும.

ஆபஸ்தம்ப இருடியும் அதன் பயனை அருளியுள்ளார். மாங்கனி யடையும் பொருட்டு, மாமரம் வைத்தவனுக்கு அத்தரு நிழல் வாசனை முதலிய பயனை அவசியம் தருவதே போல தனது தருமம் என்றெண்ணி நித்திய கரும அனுஷ்டானஞ்செய்யின் மோக்ஷ முதலிய பிரயோஜனம் அவசியம் உண்டாம்; இப்பயன், பெரும்பயன் பெறுவதற்கு முன் கோராமலே வரக்கூடிய தொடர்பான பயன் எனப்படும், மனத்தூய்மை வாயிலாக உண்டாகும் ஆன்மஞானப் பிராப்தியாலே மோக்ஷம் பிராப்தியாம். இதுவே நித்திய

கருமத்தின் மகாபலம். இஃதுருதவரையும், அதனால் அவசியம் அத்தொடர்பான பயன் உண்டாமென்க. நித்திய கருமங்களைச் செய்யாவிடில் எப்பாவம் உண்டாகுமோ, செய்யின் உண்டாகாதோ அப்பாவ நீக்கமே அதன் பயனும். நித்திய கருமஞ் செய்யாவிடின் பாவமுண்டாமென்பது சுருதி மிருதியாற் பிரசித்தமாம்:— "வேதங்கூறிய நித்திய வினைகளைப் பாதகன் செய்யானேற் பாவ மடைவான், வேதமும் ஸ்மிருதியும் விளம்பு நித்தியங்களை, நீதமாய்ப்பற்றியே துவிஜனிலைப்பன், ஓதிவை விடுத்த துவிஜன் ஒரு தலை, கோதறக் கீழே விழுவன் கோலிலாப் போதகக் குருடன் குழிவிழல்போன்றே." "ஒருநாள் ஐபத்தைச் சந்தியை மூன்று, இருநாள் அக்கினி ஹோத்திரமபத்தொடும், இருநாள் விடின் மறையவன் சூத்திரனும், குருவானையையு மிதிற்குலவாதே", "மறையவன் மூன்றுநாள் வரைச் சந்தியைத்தான், அறை பன்னிருதின மக்கினி ஹோத்திரம், உறசெயாதிருப்பின் ஓதிலும் வேதம், மறையவன் சூத்திரன் மருவாதையவே."

"சந்தியை யுல்லங்கனஞ் செய்தலாலே பிராமணன்பால் சூத்திரத் தன்மையுண்டாதலின் ஒருகாலும் சந்தியை யுல்லங்கனஞ் செய்யலாகாது. காலையிலும் மாலையிலும் சாவதானனாகிச் சந்தி செய்க; பிரமாதத்தால் விடின், நிச்சயமாயவன் நரகத்தையடைவன்" என்பதாதி சுருதி மிருதி வசனங்கள் நித்திய கருமத்தைச் செய்யாவிடின் பாவ அடைவைக் கூறியுள்ளன. அக்கினி ஹோத்திராதி நித்திய கருமத்தாலே தடையாய பாவத்தை நீக்குகவென்பதால் வேதவித்துக்குள் நித்திய கருமத்தைப் பரம தருமமென்பார்கள் என்பதாதி சுருதிகள் ஞானத்தடையாய பாவ நீக்கம், ஞானமுண்டாக யோக்கியமாகிய புண்ணிய ஆக்கம் என்னும் ஆன்ம சமஸ்காரமே நித்தியகரும பல

மாம் என்று கூறும். சில சாஸ்திரங்களிலோ நித்திய கருமத்திற்குப் பிரஹ்மலோகப் பிராப்தி ரூபமான பலம், சொல்லப்பெற்றுளது. "திரவிரதத்தொடுஞ் சேர்ந்தவராகி புரமுறச் சந்தியை யுபாசனை செய்பவர், சருவ பாபங்களுஞ் சாம்பினராகி, பிரமலோகத்தைப் பெரிதெய்துவாரே" என்பதாதிய சுருதி மிருதி முதலியவற்றில் நித்திய கருமத்திற்குப் பலங்கூறப் பெற்றுள்ளது. அப்பலத்தை இச்சியாமலே யதனைச் செய்கவென்னும் திருக்கருத்தாலே ஸ்ரீ பகவான் ஈண்டுப் பலத்தை விடுத்து என்பதால் நித்திய கரும பலத்தின் பரித்தியாகத்தைக் கூறியருளினர். ஆகலின் ஸ்ரீ பகவத் வசனத்தில் ஒரு சிறிதும் முரணின்றும் தியாக சந்யாச சப்தங்கள் கடபட சப்தங்கள்போலப் பின்ன பின்ன ஜாதியையுடைய அர்த்த வாசகங்க ளல்லவாம். ஆனால், பலேச்சா பூர்வமாகிய கருமத் தியாகமே இரு சப்தங்களின் பொருளாம். முற்கூறிய இப்பொருளை மறவாதுறைக. பல இச்சை யிருந்தபோதிலும் முன்மொழிந்த மோகவயத்தால் அல்லது தேகக் கிலேச பயத்தால் நித்திய கருமப் பரித்தியாகமோ, கருமமாகிய விசேஷிய அபாவத்தாலாகிய விசிஷ்ட அபாவரூபமாம். அந்தத் தியாகம் தாமச இராஜசமென நிந்திக்கப்பட்டதாம். நித்திய கருமமிருந்தபோதிலும் அதன் பல விருப்பத்தை விடுந் தியாகம், பலேச்சையாகிய விசேஷண பாவத்தாலாம் விசிஷ்ட அபாவமாம். இத்தியாகம் சாத்விகத் தன்மையாலே துதி செய்யப் பெற்றதாகும். இரண்ட பாவங்களிடத்தும் விசிஷ்ட பாவத்தன்மை சமமேயாமாதலின் ஸ்ரீ பகவானுடைய திருவாக்கியத்தில் பூர்வ அபரவிரோதமின்றாம்.

[இப்போது முன்னுரைத்த சாத்விகத் தியாகத்தைக் கொள்ளும்பொருட்டு ஸ்ரீ பகவான், அதன் மனத்தூய்மை வாயிலாக ஞானநிஷ்டையின் பலத்தையருளிச்செய்கிறார்.]

ஏ அர்ச்சுன! முன்மொழிந்த சாத்விகத் தியாகமுடையவன் சத்துவத்தால் வியாப்தமாம்போத தத்துவஞான முடையவனுவன், சர்வ சம்சயங்களுமற்றவனுவன். அப்போது அசோபன கருமத்தைப் பிரதிகூலமென்னுன்; சோபன கருமத்திற் பிரீதியுஞ் செய்யான்.

ஏ பாண்டவ! சாத்விகத்தியாகி = முன்னர்க் கூறிய வகையே கர்த்திருத்துவ அபிநிவேசத்தையும் சுவர்க்காதி பல இச்சையையும் பரித்தியாகித்து மனத் தூய்மையின் பொருட்டு வேதவிகித நித்திய கருமத்தை யனுஷ்டானஞ் செய்யும் தியாகி, அக்காலத்தில் சத்துவத்தாலே நன்கு கூடியவனுவன். ஆன்ம அனுன்ம விவேக ஞானஹேதுபூதமாகிய உள்ளதுள்ள நன்ஞானத்தின் றடையென்னும் இராஜச தாமச ரூபமான மலமில்லாமையாகிய அதிசயத்தன்மை சத்துவமாம்; அதனுல் இனிது வியாபிக்கப் பெற்றவனுவன் என்பதாம். சாற்றிய சத்துவ வியாப்தியாலே நியமமாக ஆன்ம ஞானரூபமான பலத்தின் ஜனகத் தன்மையே நலமுடைமையாம். ஸ்ரீ பகவானுக் கருப்பணஞ்செய்த நித்தியகரும அனுஷ்டானத்தாலே பாவரூபமான மலநீக்கமாகிய சமஸ்காரத்தாலும் ஞான உற்பத்தி யோக்கியதை வடிவமான புண்ணிய முண்டாவதாகிய சமஸ்காரத்தாலும், சமஸ்கரிக்கப்பெற்றபோது அத்தியாகி மேதாவியாவன். விவேகம், வைராக்கியம், சமதமாதியாறு சம்பத்து, முமுக்ஷுதை, சர்வகருமங்களின் விதிவத்தாய தியாகம் பிரமவித்தாகிய ஆசிரியன்பாற் செல்லுதல் என்பதாதி சாதனங்களாலும், ஞான ஆசிரியர் வாயிலாக வேதாந்த சாஸ்திர சிரவண மனன நிதித்தியாசன மென்னும் மூன்று சாதனங்களாலும் உண்டாயதும், தத்துவமசி முதலிய வேதாந்த மகாவாக்கியத்தைக் காரணமாகவுடையதும், எல்லா அப்பிரமாணிய சங்கையும் நீங்கியதும்,

அகண்ட அத்விதீய சைதன்யமலாத வஸ்துவை விடயஞ் செய்யாத அஹம்பிரஹ்மாஸ்மி யென்னும் பிரஹ்மாத்ம ஐக்கியஞானம் மேதையாம் அம்மேதையோடு கூடியவனே மேதாவியாவன்; அவனே திடப்பிரஞ்ஞனவன்; அக்காலத்தே அவன் ஐயமெல்லாம் நீங்கியவன் ஆவன். பிரஹ்மவித்தை வடிவமான மேதையாலே அவித்தை நீங்கிவிடும்; அதுவே சருவ சமுசாய உற்பத்தியைச் செய்து கொண்டிருந்தது; அது தொலையவே காரிய ஐயம் திரிபுகள் யாவும் தத்துவ வித்திற்கு இலவாகும். ஆன்ம சாக்ஷாத்காரத்தாலே அவித்தையின் நீக்க வாயிலாய் நீங்கும் ஐயங்களிவையாம்:—சஞ்சித ஆகாமிய வர்த்தமானங்கள் என்னும் மூவகையாகிய கருமங்களுள் எதேனும் என்னைப் பற்றியுளதா? இலதா? கருத்திருத்துவ போக்திருத்துவ முதலிய சமுசாரம் ஆன்மாவிற்கா? அந்தக்காரணமாகிய அநான்மாவிற்கா? மோக்ஷகாரணம் யோகமா? உபாசனையா? கருமமா? ஆன்மசாக்ஷாத்காரமா? சாலோக்கியம், சாமீப்பியம், சாயுச்சியம் என்னும் இவையே மோக்ஷமா? பிரஹ்மான்மரூபமாய் நிலைபெறல் மோக்ஷமா? இவ்வெல்லா ஐயத்துள்ளும் கடையியது சித்தாந்தமென்றறிந்துகொள்க. மற்றவை பூர்வபக்ஷங்களாம். இவ்வையங்களும, தேகாதிகளில் ஆன்மமதி வடிவ விபரீதமும், தத்துவமறிந்தவன் அற்றவனுவன்; அப்போது சருவகருமமும் அவற்றவனுகலின், அகுசல கருமத்தில் துவேடஞ் செய்யான். அஞ்ஞானிகட்குப் பந்தவேதுவாதலின் அசோபனரூப காமிய கரும நிஷித்த கருமங்களைப் பிரதிகூலமாக வெண்ணன்; மனத்தூய்மை வாயிலாய் ஆன்மஞான வேதுவாதலின் சோபனரூப நித்திய கருமத்திலும் பிரீதியைச் செய்யான். அவன் கிருத கிருத்தியனுதலின் அவனுக்கு ஒரு கருமத்தில் துவேடமும், மற்றொரு கருமத்திற் பிரீதியும் எங்ஙனமுண்

டாம் என்னு மிதன்கட் சுருதியுமுளதாம்:—"பராபரமாம் அப்பொருளை வயங்கக்கண்டால், பெருமனக்கட்டறுமைய மறும் கருமமறும்" யான் பிரஹ்மரூபன் எனப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடைந்த தத்துவ வித்திற்குச் சிற்சடக் கிரந்தி பேதிக்கும்; முன் மொழிந்த சர்வசமுசயங்களும் நீங்கும்; புண்ணிய பாவ சர்வ கர்மங்களும் க்ஷயமாம். அந்தச் சாத்விகத் தியாகத்திற்கு இம்மகா பலங் கிடைத்த லின் அதிகாரி பெருமுயற்சியால் சாத்விகத் தியாகத்தையே சம்பாதிக்க வேண்டு மென்பதாம்.

[கருமத்தில் முயலக்காரணமாகிய இராகத்துவேஷாதிகள் ஞானியினிடத்தில் இன்றுமாதலின் அவனிடத்தே சர்வ கரும பரித்தியாகஞ் சம்பவிக்கும் என்பது முன்னருளப்பெற்றது; இப்போது ஞானியினிடத்தில் சர்வ கருமங்களின் பரித்தியாகம் சம்பவியாதாம் என்பதில் ஸ்ரீ பகவான் ஹேதுவை யருளுகின்றார்.]

ஏ அர்ச்சுன! தேகாபிமானி முற்றிலுமே கருமத்தைத் தியாகிப்பது முடியாத காரியமாதலின் அஞ்ஞானி கரும பலத்தை விடுவனேல் அவனும் தியாகியே யெனப்படுவன்.

யான் மனுடன், யான் பிராஹ்மணன், யான் இல்வாழ்வோன் எனக்கெடுக்க முடியாத அபிமானத்தாலே தேகத்தைத் தரித்தலும் காத்தலுஞ் செய்பவன் தேகபிருத்தெனப் படுவன்; அதாவது கருமாதிகார ஹேதுபூத பிராஹ்மணாதி வர்ண ஆசிரமங்கள், அவற்றிற் காசிரயமாய கருத்திருத்துவாதிகள், அவற்றிற் காசிரயமாய தூலாதி தேகங்களாம். அநாதியவித்தை வாசனைகளின் வயத்தால் வியவகாரயோக்கியதை ரூபத்தாலே கற்பிதமாதலின் அசத்தியமாகிய அவற்றைச் சத்தியமென வெண்ணி, தன்னிற் பின்னமாயினும் அபின்னமாய் நினைந்து முன்மொழிந்த அபிமானத்

தாலே தேகத்தை தரித்துப் போஷிப்பவன் தேகபிருத்தாவன் என்பதாம். கருமாதிகார காரணவடிவ காய அபிமானங் கழலாதவன் காய பிருத்தாவன் என்பது கருத்தாம். அவன் கருமங்களில் முயல்வதற்குக் காரணவடிவமாகிய இராகத்துவேஷாதிகளின் மிகுதியாலே நிரந்தரம் கருமங்களில் முயல்பவனாவன். விவேகமின்றிய தேகாபிமானி தத்துவஞானியைப்போலக் கருமத்தை முற்றிலும் விட முடியான்; ஏனெனின் காரணசாமக்கிரி யிருக்குமளவும் அத்தியந்தங் காரிய பரித்தியாகஞ் செய்யமுடியாதாம. இராகத்துவேஷாதி ரூபகாரண சாமக்கிரி அஞ்ஞானியின் பாலுளதாதலின் மனத் தூய்மையின் பொருட்டுக் கருமங்களைச் செய்த போதிலும் பரமேசுவர கிருபையின் வயத்தால் கருமபலத்தைவிடின் அவனும் தியாகியேயாவன்: அதாவது கரும கருத்தா அஞ்ஞானி உண்மையாய் அத்தியாகியாயினும் துதியின் பொருட்டுத் தியாக சப்தயோக்கியன் கௌணமாயாவன். அத்தியந்தம் கருமத்தியாகமோ தேகாபிமானமற்ற பரமார்த்த தரிசியே செய்யத்தக்கவன் அவனாதலின் அத்தகைய தத்துவஞானியே தியாக சப்தயோக்கியன் முக்கியனாவன். கருமபலத்தியாகி மிகவும் தூர்லபன் ஆவன். பலேச்சையை விடுத்துச் சித்த சுத்தியின் பொருட்டு நித்திய கருமங்களைச் செய்யும் புருடனும் துர்லபனே யெனவறிக.

[ஏ பகவான்! தேகாபிமானமுடைய பரமான்மஞான மற்ற கருமியும், பலேச்சையிலாததமாத்திரத்தாலே கௌண சந்நியாசியெனப் பெறுவன்; தேகாபிமானமில்லாத பரமான்ம ஞானமுற்ற பலசகித சர்வ கருமத்தியாகியாகிய தத்துவ முணர்ந்தவனே முக்கிய சந்நியாசி யெனப்பெறுவன் என்பதாக தேவரீர் முன் அருளினீர்கள்; கௌண சந்நியாசியின் பலத்திலும் முக்கிய சந்நியாசியின் பலத்

தினும் யாது விசேடமாகும். விசேடலாபமின்மையால் கௌணத்தன்மையும், லாபமுண்மையால் முக்கியத்தன்மையும் சந்நியாசியின்பால் உண்டாமன்றே? கருமபலத்தியாகித்தன்மையோ அவ்விருவர்பாலும் சமமேயாதலின் அதனாலும் சிறப்புச் சம்பவியாதாம்; மற்றே, இதனினும் அயலொருசிறப்பே கூறியருளல்வேண்டும் என்னும் அருச்சுனனது வினாவுக்கு ஸ்ரீ பகவான் விடைபகர்ந்தருளுகிறார்.]

ஏ கௌந்தேய! கௌண சந்நியாசிகட்கோ மரணத்தின் பின்னர்க் கருமங்களின் அநிஷ்ட இஷ்ட கலப்பு என்னும் மூவகைப்பயன் அடைவுறும்; முக்கிய சந்நியாசிகட்கோ ஒருகாலும் அம்மூவிதபலன் அடைவுறாவாம்.

ஏ பார்த்த! கருமங்களின் பலத்தியாகவானாயினும் கருமங்களை யனுஷ்டிப்பவனும், ஆன்மஞானத்தில் முயல்பவனும், அதையடையாதவனும் ஆகிய அத்தியாகியென்னும் கௌண சந்நியாசிக்கு ஆன்மஞான இச்சையாகிய விவிதிஷையுண்டாங்காறும் சித்த சுத்தியைச் சம்பாதியாது முன்னரே சரீரம் நீங்குமாயின் அவன் மரித்தபின் முன் செய்த கருமத்திற்குச் சரீரக்கிரகண ரூப பலத்தை அவசியம் அடைவன். சரீரக்கிரகணரூப கருமபலம் காரணரூப கருமங்களின் மூவகைத் தன்மையாலே அநிஷ்டம் இஷ்டம் மிசிரம் என மூவகைத்தாம். பாவத்திற்கு அநிஷ்ட பலம்; புண்ணியத்திற்கு இஷ்ட பலம்; இரண்டிற்கும் மிசிரபலம். இவ்வுடம்பு எனக்கு அடைவுறாதொழிக என்னும் பிரதிகூலத் தன்மையின் ஞான விஷயம் நரக சம்பந்தியாய திரியக்கு (மிருக) தேகமாம்; அது அநிஷ்ட பலமெனப்படும். இத்தேகம் எனக்கு அடைவுறுக என்னும் அனுகூலத்தன்மை ஞானவிடயம் தேவதைத் தேகமாம்; இது இஷ்டபலம். பாவபல புண்ணிய பலத்தோடு கூடிய

மநுடாதி தேகப் பிராப்தி மிசிர பலம். முமுக்ஷுக்கள் இம்மூவகைப் பலன்களையுந் தியாகிக்க வேண்டுமென்பதாம். இதுவரை கௌண சந்நியாசிகள் மரித்த பின் சரீரத்தை யடைவார்கள் என்றோம். இனி முக்கிய சந்நியாசிகட்கோ பிரஹ்ம சாக்ஷாத்காரத்தானே காரிய சகித அவித்தை நீங்கவே விதேக கைவல்லிய ரூப மோக்ஷமே கிடைக்கும் என்றருளுதல்: விதிப்பிரகாரம் சருவ கருமங்களையும் விட்டவரும், யான் பிரஹ்மரூபன் என்னும் பரமான்ம சாக்ஷாத்காரத்தோடு கூடியவரும் ஆகிய பரமஹம்ச பரிவிராஜ முக்கிய சந்நியாசிகள் மரித்து, கூறிய மூவகைப் பலத்தையும் எத்தேயத்தும் எக்காலத்தும் அடையார்கள் ஏனெனின், அவர்கட்கு ஞானத்தாலே யஞ்ஞான மழிந்தன்றோ? அஞ்ஞான மழியவே அதன் காரிய சர்வ கருமங்களும் நீங்கியே போம். ஜன்மத்தைத் தருவதில் அஞ்ஞானமும் அதன் காரியமும் அன்றோ காரணம். அவ்விரண்டும் அகலவே பிறப்பெங்ஙன முண்டாம். இதன்கண் இச்சுருதியையும் உணர்க:—பராபரமாம் அப்பொருளை யயங்கக்கண்டால் பெருமனக் கட்டறும ஐயமறும் கருமமறும்" என்பதாம். இதனை ஸ்ரீ வியாசபகவானும் அருளியுள்ளார் :—பிரத்தியக்ஷபின்ன பிரஹ்ம சாக்ஷாத்கார முளதாகவே தத்துவஞானியின் பூர்வசஞ்சித கருமமோ விநாசமாகும். மேற்செய்யும் வினை தீண்டவே மாட்டாது. இப்பொருள் சுருதிமிருதிகளிலும் கூறப்பெற்றுளது என்பதாகி சுருதி சூத்திர வசனம் பரமான்ம ஞானத்தாலே சர்வ கருமங்களின் நாசத்தைக் கூறுகிற்றலின் இது துணியப்பெறும்:—முன்மொழிந்த கௌண சந்நியாசிகட்கோ முற்புண்ணிய பாவ கரும வயத்தால் மீண்டும் சரீரக்கிரகணரூப சம்சாரம் அவசியமுண்டாகும். முக்கிய சந்நியாசியாகிய தத்துவ

வித்துக்கோ அவித்தை முதலியவை யின்மையின் மீண்டும் சம்சாரம் அடைவுறுது; மற்ருே, மோக்ஷமே யடைவுறும். இதுவகை இவ்விரண்டினும் பல விசேடமாகும். சிலர் கூறுவதாவது:—கருமபலத் தியாகத்தாலே, கருமஞ் செய்யும் கருமியின்பாலும் சந்நியாசியென்னும் சப்தம் பிரயோகிக்கப்பட் டுளதாதலின் சந்நியாசி சப்தத்தாலே கரும பலத் தியாகஞ் செய்த கருமியையே கொள்க. அல்லாமலும், முன்னுரைத்த அநிஷ்டாதி மூவகைப் பலத்தைச் சந்நியாசிகளிடத்தே நிஷேதஞ் செய்யப்பட்டதும் சாத்விக கருமிகள்பாற் சம்பவிக்கும். என்னை, நித்திய நைமித்திக கருமங்களைச் செய்யாமல்; நிஷித்த கருமங்களைச் செய்தலால் உண்டாகும் பாவ உற்பத்தி சாத்விக கருமிகட்கு அவற்றை முறையே செய்தலாலும் செய்யாமையாலும் உண்டாகாது; ஆகையால் அநிஷ்டபலப் பிராப்தி யுண்டாகாதாம். அவர்கள் காமிய கருமத்தைச் செய்யாமையால் ஈசுர அர்ப்பண மதியாலே பல பரித்தியாகஞ் செய்தலின் இஷ்ட பலப்பிராப்தியு முண்டாகாது; இதனாலே கலப்புப் பலமு முண்டாகாது. இம்முறையே சாத்விக கருமிகட்கு மூவகைப் பயனுமுண்டாகாது. இதுபற்றியே சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுள்ளது. முமுக்ஷு காமிய கருமத்திலும் நிஷித்த கருமத்திலும் பிரவிருத்தியான். மற்ருே, எவற்றைச் செய்யாமையாலே பிரத்தியவாய முண்டாமோ, அந்தப் பிரத்தியவாயம் அகற்றும் அவாவினனுய் அந்நித்திய நைமித்திகங்களைச் செய்வன். இத்துணை மாத்திரையாலே சமுசார அபாவமாம். இங்ஙனம் ஏகபவிகவாத நீதியாய் ஸ்ரீ பகவானது வசனத்திற்கு வியாக்யானம் செய்பவர் பொருட்டு இது கூறுதல் வேண்டும்:—சப்தத்தின் அர்த்தத்தின் மரியாதையை நீ நிர்ணயஞ் செய்திலைபோலும்; எதனாலே ஸ்ரீ பகவான் வசனத்திற்கு நீ இவ்வகை வியாக்

யாலஞ் செய்கின்றனையோ, ஆண்டுக் கௌண முக்கிய அர்த்தமத்தியில் யாதொரு பாதகமும் இலதாகவே முக்கியப் பொருளின் கண்ணே சப்தபோத முண்டாம். இதுவோ சப்த மரியாதையாம், இங்குப் பிரசங்கத்தில் பல சகித சர்வ கருமங்களின் தியாகியோ சந்யாசி சப்தத்திற்கு முக்கியப் பொருளாம். முக்கிய சந்நியாசியின் கண்ணே கருமபலத் தியாகித்தன்மை யிருப்பதேபோல நிட்காம கருமி புருடனிடத்தும் பலத் தியாகத்தன்மை யிருக்குமாதலின், அத்தன்மை வடிவமான சமான குணத்தைக் கொண்டு அச்சப்தம் கருமியின்பாலும முயலுமாதலின அவன் அதன் கௌண அருத்தமாவன். சந்நியாசி சப்தத்திற்கு முக்கியப் பொருள் கொள்வதில் யாதொரு பாதகமு மின்றுமாதலின் முக்கியப் பொருளையே ஈண்டுச் சந்நியாசி சப்தத்தாற் கொள்ளுதல் தகுதியாம். இது சப்த மரியாதையாற் சித்தமாயது. காரண சாமக்கிரியிருப்பக் காரிய உற்பத்தி யவசியமுண்டாம்; இது அர்த்த மரியாதை யெனப்படும். இதனாலும முன்னறைந்த பொருளே துணிபாம். அஃதாமாறு:—ஈசுரார்ப்பண மறியாமேலே கருமபலம் விட்டவனும், மனத்தூய்மையின் பொருட்டு நித்தியகரும அநுஷ்டானஞ் செய்பவனும் ஆகியோன், மனத்தூய்மை வாயிலாய் ஞானநிஷ்டையை யடையாமல் மத்தியில் மரிப்பனேல், பூர்வ புண்ய பாவ வயத்தாலே மூவகைச் சரீரக்கவர்ச்சி ரூபமான சம்சாரம் அதை எவனாலும் நீக்க முடியாதாம். புண்ணியபாவ வடிவக் காரணமிருப்பச் சரீரக்கிரகண வடிவக் காரியமவசிய முண்டாம். ஞானமில்லாதவன் அவசியம் புண்ணிய பாவவயத்தாற் பிறப்பன். இது சுருதியிலுமுளது:—கேய கார்க்கி! இவ்வக்ஷரத்தை யறியாமல் எவன் இம்மநுட லோகத்தினின்றும் செல்வனோ அவனைக் கிருபணனென்றேயறி. ஆகையால்

மனத்தூய்மையின் பல பூத ஆத்மஞான முண்டாதற் பொருட்டு நிட்காமன் மநுடசரீர அடைவை யவசியம் அங்கீகரிக்க வேண்டியதேயாகும். இப்பொருள் முன் ஆறுவது அத்தியாயத்தில் நிர்ணயிக்கப்பட்டது. மனத் தூய்மையின் பின்னர்ச் சாஸ்திர விதி பூர்வகம் பல சகித சர்வ கருமங்களையும் பரித்தியாகஞ் செய்தவனுகிப் பிரஹ்ம வித்தாகிய குரு சமீபத்திற் சென்று அவர் வாயிலாய் வேதாந்த சிரவணஞ் செய்பவன் இடையில் மரித்திடின், ஆன்மஞானத்தை யடையாத அந்த யோகப் பிரஷ்டனுகிய விவிதிஷா சந்நியாசியானவன், யோகேச்சை யுடையவ னேல் ஸ்ரீமான்கள் வீட்டில் பிறப்பன்; யோகேச்சை யில்லனேல் பிரஹ்மஞானிகள் வீட்டில் பிறப்பன், என்னும் இவையாவும் முன்னருளப்பட்டன. இதனுல் இக்கைமுதிக நியாயம் சித்தமாம்:-ஆன்மஞானமற்ற சர்வ கருமத்தியாகி யாகிய விவிதிஷை சந்யாசிக்கும் சரீரக்கிரகண மவசியமுண் டாமேல் ஆன்மஞானமற்ற கருமிக்கு அஃதுண்டாமென்ப திற் கூறவேண்டிய தென்னையென்பதாம். ஆகையால் அஞ் ஞானிக்கும் பூர்வ கருமவயத்தால் சரீரக்கிரகண மின்றி யடையாதுண்டாம்; இது அர்த்தமரியாதையாலே சித்தித்த தாம். ஆகையால் சந்நியாசி சப்தத்தாலே நிட்காம கருமி யையே கவர்க என்னும் ஏகபக்ஷிக வாதிகளின் வியாக்கியா னம் முற்றிலும் அசங்கதமாம். முன்மொழிந்த ஸ்ரீமத் பாஷி யக்காரர் முதலியோரது வியாக்கியானமே சிறந்ததாம்.

ஈண்டு ஸ்ரீ பகவானது திருக்கருத்து வருமாறு:— அகர்த்த அபோக்தா பரமாநந்த அத்விதீய சத்திய சுவப் பிரகாசமாகிய பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத் காரம் நிர்விகற்பமும், மகாவாக்கிய ஜன்னியமும் விசாரத் தாலே நிச்சயிக்கப்பெற்ற பிராமாண்ய முடையதும், எல்லா வகையாலும் அப்பிராமாண்ய சங்கையற்றதுமாம்.

அதனால் அஞ்ஞானம் அகலும்; அகலவே அதன் காரியங் களாய்க் கர்த்திருத்துவாதி அபிமானமற்ற உண்மையாய முக்கிய சந்நியாசியோ அவித்தையோடு கூடிய சர்வ கரும அழிவாலே கேவலம் சுத்த சொரூபனாகிய அந்நிமித்தக சரீரக் கவர்ச்சியை மீண்டும் ஒரு காலும் அடையான். எதனாலெனில் தத்துவவித்தின் சர்வமாயல்களும் அவித்தை யாகிய காரணங் கெடவே கெடலினால் என்றறிக. அவித் தையுடையவனும் கர்த்திருத்துவாதி யபிமான முடைய வனும் தேகமுடையவனும் ஆகியவனே மூவகையினனான வன்; இராகத்துவேஷ தோஷ மகிமையாலே தன்னிச்சை யாலே காமிய கருமத்தையும் நிஷித்த கருமத்தையும் செய் யும் மோக்ஷ சாஸ்திர அநதிகாரி முதலாமவனாவன்; பூர்வஞ் செய்த புண்ணிய கருமவசத்தாலே சிறிது மாத்திரம் நஷ்ட மடைந்த இராகாதியை யுடையவனும், விதிபூர்வகம் சர்வ கரும பரித்தியாகம் செய்வதில் அசமர்த்தனாயினும் நிஷித்த காமிய கருமங்களைப் பரித்தியாகஞ் செய்து மனத்தூய்மை யின் பொருட்டுப் பல இச்சையைப் பரித்தியாகித்து நித்திய நைமித்தியங்களையே செய்பவனும் மோக்ஷ சாஸ்திர அதிகாரியாய் கௌண சந்நியாசியும் ஆகியவன் இரண்டாமவனாவன்.

நித்திய நைமித்திக அனுஷ்டானஞ் செய்து மனத் தூய்மை பெற்றபின் விவிதிஷையடைந்தவனும், சிரவணாதி சாதனங்களாலே மோக்ஷ சாதனரூப ஆன்மஞான சம்பா தனஞ்செய்யும் வேட்கையனும் சாஸ்திரவிதி பூர்வகம் சர்வ கரும பரித்தியாகத்தால் வேதாந்த சாஸ்திர விசாரஞ் செய் யும் பொருட்டுச் சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருவின் சரணத்தை யடைந்தவனும் ஆகிய விவிதிஷா சந்நியாசி மூன்றாமவனாவன். முதலாமவனுக்குச் சம்சாரித் தன்மை வெளிப்படையேயாம்; இரண்டாமவனுக்குச் சம்சாரித்

தன்மை அதிஷ்டம் இஷ்டம் மிசிரமுமென்பதாலே யருளப் பட்டது. கடையவனுக்குச் சம்சாரித்தன்மை ஆருவதத்தி யாயத்தில் விஞ்னி ிர்ணயித் தருளப்பெற்றது. ஆகையால் அவித்தையாதி காரணமிருப்ப அஞ்ஞானிக்குச் சம்சாரித் தன்மை யின்றியமையாதாம். ஒருவனுக்கோ ஞானப்பிரதி கூல சரீரமுண்டாம் ஒருவனுக்கோ ஞானுனுகூல சரீர முண்டாம்; இத்துணை விசேடமாம். தத்துவ முணர்ந்தவனோ அவித்தை முதலிய சமுசாரகாரணம் அபாவமாதலின் தானே கவே கைவல்லிய மோக்ஷமடைவான் என்பதாக ஸ்ரீ பக வான் இச்சுலோகத்தில் இரண்டையுங் குறிப்பித்தருளினர்.

[ஆத்மஞான மில்லாத அஞ்ஞானியின் சம்சாரித் தன் மையில் கரும பரித்தியாக அசம்பவ ரூபஹேது முன்னர் அருளப்பெற்றது; அவ் வஞ்ஞானியின் கருமத் தியாக அசம்பவத்தில் யாது ஏதுவாம், எவ்வேதுவினுலே கருமத் தியாகம் செய்ய முடியாதவனுகின்ருன் என அர்ச்சுன னுக்கு அறியும் அவாவரக் கருமஹேது பூத அதிஷ்டானுதி ஐந்தனுள் அஞ்ஞானிகளின் தாதான்மிய அபிமானமே கருமத்தியாக அசம்பவத்தி லேதுவாம் என்னும் பொருளை இப்போது ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களால் வருணித் தருளுகின்ருர். அவ் வைந்தும் வேதாந்த சாஸ்திரத்தைப் பிரமாணமாக வுடையதாம். அவற்றை நீக்கும் பொருட்டு இன்றியமையா துணரத்தக்கதாம் என்னும் பொருளை முதற் சுலோகத்தில் அருளிச் செய்கின்ருர்.]

ஏ பெருந்தோளையுடைய வீரனே! சர்வ கருமசித்தி யின் பொருட்டுக் கூறப்புகும் அதிஷ்டானுதி ஐந்து கார ணங்களை எமது மொழியால் நிச்சயஞ் செய்தி. அவை சர்வகரும சமாப்தியையுடைய வேதாந்த சாஸ்திரத்தில் இயம்பப் பெற்றுளது.

ஏ அர்ச்சுன! இலௌகிக வைதிக கருமசித்தியின் பொருட்டுக் கூறப்படும் அதிஷ்டானாதி ஐந்து காரணங் களைச் சர்வஞ்ஞ பரமேசுரராகிய நமது வசனத்தால் நிச்ச யஞ் செய்தி; அதாவது அவ்வைந்தின் வடிவத்தையுணர நீ சாவதானனாயிருத்தி. அவை முற்றிலும் அறியத்தகாதவ னல்ல, மற்றோ, ஒருமை மனத்தினால் உணரத்தக்கனவே யாம். அவற்றை யறிவால் மனத்தை யொருமைப்படுத்தி யருள ஸ்ரீ பகவான் அவ் வைந்தையும் துதித்தருளினார்; ஏ மகா பாகோ என்னும் விளியால் அவற்றின் றுதியின் பொருட்டு இப் பொருள் குறிப்பித்தருளப் பெற்றது; இவ் வைந்தையு முணர்வதில் மகா பாக்கியமுடைய சிரேஷ்ட புருடனே சமர்த்தனாவன்; அசிரேஷ்டன் சமர்த்தனாகான்.

நீயும் மேன்மை மிக்கவனாதலின் அவற்றை அறிவதில் ஆற்றல் உடையவன் ஆவாய். அவ் வைந்தும் தேவரீரது திருவாக்கால் அறியத்தக்கனவேயா? அல்லது அவற்றில் வேறு பிரமாணமும் உளதா? எனவுண்டாம் சங்கையை நீக்கித் தந்திருவாக்கில் நம்பிக்கை வருவதற்கு வேதாந்த சாஸ்திரப் பிரமாணத்தை யவற்றில் அருளினார். பிரஹ்மா நந்தரூப நிரதிசய புருடார்த்த அடைவின் பொருட்டும் ஜன்மமரணாதி சர்வ அநர்த்த நிவிருத்தியின் பொருட்டும் அறியத்தக்கதாகிய ஜீவப் பிரஹ்ம ஒருமை யுணர்ச்சிக்கு உபயோகமான சிரவணாதி சாதன முதலிய பதார்த்தங்களை கூறும் சாஸ்திரம் உபநிஷத் வடிவமான வேதாந்த மென் னும் சாங்கியம். அதன் கண் அவ் வைந்தும் அறையப் பெற்றுள்ளன. சர்வ கருமங்களையும் சாதனமாகக் கூறு வதும் பின் சருவ கருமங்களையும் விடுமா றருளுவதும் ஆகிய வேதாந்த சாஸ்திரம் அவ் வைந்தையும் அறையும். அவற்றை யுலகத்தார் மயலுணர்ச்சியாலே ஆன்ம ரூப மாய்க் கவர்ந்துளார். அவ் வைந்தையும் ஆன்ம தத்துவ

ஞானத்தாலே பாதஞ் செய்யும் பொருட்டுப் பரித்தியாச்சிய ரூபத்தால் வேதாந்த சாஸ்திரம் விளம்புகின்றதேயல்லாமல் அவற்றை வீணே கூறுவதிற் கருத்தின்றாம். அத் விதீய ஆன்மாவைக் கூறுவதன் கண்ணே அதற்குக் கருத்து. கருத்திதுவாம்:—தேகாதியநான்ம பதார்த்தங்களின் தரும ரூப கருமமே அசங்க ஆன்மாவின் கண் அவித்தையாலே அத்தியாரோபிதம். உண்மையிலின்றாம். இவ்வாறு வேதாந்தம் சாஸ்திரம் ஆன்மாவின் வாஸ்தவ வடிவப் பிரதி பாதனஞ் செய்கின்றபோது சுத்த ஆன்ம ஞானத்தாலே அத்தியாரோபித கருமம் பாரதமாதலின், சர்வ கருமங்களின் அந்தஞ் செய்யப்படும். அதிஷ்டான ஆன்மஞானமின்றி வேறெவ்வுபாயத்தாலும் கருமாந்தஞ் செய்ய முடியாது இதனாலே அசங்க ஆன்மாவின்கண் அக்கரும அசம்பந்தத்தைப் பிரதிபாதிக்கும் பொருட்டு மாயாகற்பித அநான்ம பூத பஞ்சகரும காரணம் வேதாந்த சாஸ்திரத்திலனுவதிக்கப்பட்டுளதாமன்றி அதைப் பிரதிபாதிப்பதிற் கருத்தின்று. ஆகையால் அத்வைத ஆன்மா மாத்திரத்திற் கருத்தாம். அக்கருத்திற்கு இங்கு ஆனியுண்டாகாது ஆதலின் ஸ்ரீ பகவான் வேதாந்த சாஸ்திரத்தில் கருமாந்தத் தன்மையையருளினார்; இதனை முன்னருங்கூறி யருளியுள்ளார்.

[வேதாந்த சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடைய கரும பஞ்சகாரணம் ஆன்மாவிற்கு அகர்த்தாத்தன்மை சித்திக்கும் பொருட்டுப் பரித்தியாச்சிய ரூபத்தாலே அறியத்தக்கதென்பது முன்னருளப்பெற்றது; அவ்வைந்தும் யாவையெனை அறியும் வேட்கை யருச்சுனனுக்கு உண்டாகியவழி ஸ்ரீ பகவான் அருளுகிறார்.]

ஏ அருச்சுன! அதிஷ்டானமும் கர்த்தாவும் நானுவகையாய காரணமும், நானுவகையாய பின்னபின்ன சேஷ்டை

யும் இக்காரணங்களில் ஐந்தாவதாகிய தைவமும் ஆகிய ஐந்தும் கருமகாரணமாம்.

ஏ பார்த்த! இச்சை, துவேஷம், சுகம், துக்கம், சேதனம் என்பதாதி தரும அபிவியக்தியாசிரயரூப பஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியரூப தூலசரீரத்திற்கு அதிஷ்டானமெனப் பெயராம்; யான் கருத்தாவென அபிமானமுடைய ஞானசக்திப்பிரதான அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் காரியரூபம் அகங்காரமாம். அது அந்தக்கரணம் புத்தி விஞ்ஞானம் என வழங்கப்பெறும்; அது ஆன்மாவோடு தாதாத்மிய அத்தியாசத்தால் தன்பாலிருக்கும் கர்த்திருத்துவாதிகளை ஆன்மாவின்கண் ஆரோபிக்கும். அதுவே கர்த்தாவெனப்படும். அக்கர்த்தாவின்பால் முன்மொழிந்த சரீரரூப அதிஷ்டான ஒப்புமையுண்டாம். சரீரரூப அதிஷ்டானம் அநான்மாவும் ஆகாயாதிகளின் காரியமும் கனப்பொருள்போல மாயையால் உண்டாக்கப்படுவதுபோல அகங்கார கருத்தாவும் ஆம்.

கருத்திதுவாம்:—தூலதேகத்தை யுலகாயதன் ஆன்மவடிவமாய்க் கொண்டானேனும், வேறு நூலுணர்ந்தவர் அநான்மாவாகவே நிச்சயித்துள்ளார். அத்தன்மையதைக் கர்த்தாவில் திருஷ்டாந்தமாகக் காட்டியபோது தார்க்கிகன் ஆன்மரூபமாய்க் கவர்ந்த கர்த்தாவில் அநான்மரூபத்தன்மை நிச்சயம் மிகவும் எளிதென்பதாம். அபஞ்சீகிருத பூதங்களினின்று முண்டாய சப்தாதிவிடயத் தோற்றத்தின் சாதனரூபச் செவியாதி புலன்கள் காரணங்களாம். அவை தனித்தனியாம். ஞானேந்திரியம், கருமேந்திரியம், மனம், புத்தியென நாலுவாம். நூலில் மனாதி நான்கையே அந்தக்கரண பேதத்தானே அறைந்திருந்த போதிலும் கரணவர்க்கத்திலிருக்கும் மனம் புத்தி யிரண்டும் அகங்கார விருத்தி விசேடமாகக் கொள்க. அவ்விருத்திகளோடு

கூடிய அந்தக்கரணரூப அகங்காரமோ கேவலம் கருத்தா ரூபமேயாம்; காரணரூப மல்லவாம். சேதன ஆபாசமோ எவ்விடத்தும் சமமேயாம்; அந்தக்கரணரூப அகங்காரத் திற் கருத்தாத்தன்மை சுருதிகளில் வெட்டவெளியாம். சரீரரூப அதிஷ்டானம் அகங்காரரூப அதிஷ்டானம் அகங் காரரூபகர்த்தா அஞன்மரூபமும் பௌதிகமும் கற்பிதமும் ஆவதேபோல இப் பன்னிரண்டுவகைக் கரணமும் ஆம். கிரியாசக்திப் பிரதானமாகிய அபஞ்சீ கிருதங்களின் காரிய ரூபமும், கிரியைப் பிரதானத்தன்மை ரூபத்தாலும் வாயுவின் சம்பந்தித்தன்மை ரூபத்தாலும் கூறப்பெற்றதும் ஆகிய பிராணாதி சேஷ்டையாம்; நானாவிதமாம். பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என ஐந்துவகை யாம்; அல்லது நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்னும் ஐந்தையுஞ் சேர்த்துப் பத்துவகை யாம்; நாகாதியைந்தும் பிராணாதியி லடங்குவனவேயாம். ஆகலின் அநேக இடங்களில் ஐந்து பிராணனே கூறப் பெறும். அச்சேஷ்டை தனிப்பட்டு இடவேற்றுமையா லும் காரியபேதத்தாலும் பின்ன பின்னமாம். அறைந்த அதிஷ்டானம் கருத்தா கரணம் என்னும் மூன்றும் அஞன்ம ரூபமும் பௌதிக ரூபமும் மாயாகற்பிதமும் ஆமாறு இச் சேஷ்டையுமாம். துயிலின் கண்ணே கருத்தாரூப அந்தக் கரண பிலயமாயினும் பிராண வியாபாரம் காணவரும், பல இடங்களில் பிராணன் அந்தக்கரணத்தினும் வேருகவே கூறப்பெற்றிருக்கின்ற தாதலின் இரண்டும் அத்தியந்தம் வேறென்பர் சிலர். கிரியாசக்தியை யுடையதும் ஞான சக்தியை யுடையதும் ஆகிய ஓரே அபஞ்சீகிருத காரியஞ் சேதனத்தைச் சீவனுக்கு முபாதியாம். அவ்வோரே காரியம் கிரியாசக்தி முக்கியத்தானே பிராணன் எனவும், ஞானசக்திப் பிரதானத்தானே அந்தக்கரண மெனவும்

பெறும்; ஏனெனில், சுருதியில், உத்கிராந்தி (கிளம்புதல்) தியாதிகளின் உபாதித்தன்மை பிராணனிடத்திற் கூறப் பெற்றுளது. வேறு சுருதிகளில் அவ்வுத்கிராந்தி முதலிய வற்றின் உபாதித்தன்மை அந்தக்கரணரூப உபாதியின் கண்ணே கூறப்பட்டது. இங்கு, பிராணன் அந்தக்கரணம் என்னும் இரண்டு பாதிகட்கும் சுதந்தரமாகவே பேதமங்கீ கரிக்கின் ஜீவான்மாவிற்கும் பேதமடைவாம். ஜீவபேதம் வேதாந்த சித்தாந்தத்தில் அங்கீகாரம் இன்றுமாதலின் அந் தக்கரணம் பிராணன் என்னும் இரண்டிற்கும் ஏகரூப மாகவே உத்கிராந்தியாதிகளின் உபாதித்தன்மை பொருத்த மாம். கூறிய பேதமோ அவற்றின் ஒருமையின் கண்ணும் கிரியாசக்தி ஞானசக்திகளின் பேதத்தானே சம்பவமாம். துயிலில் ஞானசக்திபாகம் இலயமாயினும் கிரியாசக்திபாக தரிசனமோ அவற்றின் ஏகபாவத்தின் கண்ணும் முரணாரு தாம். திருஷ்டி சிருஷ்டி இலயத்தில் சர்வ இலயமாயினும் பிராண வியாபாரமுடைய துயில்வோனது தேகம் அன்னிய ரானே இவன் துயில்கின்றான் என கற்பிக்கப்படுகின்றது. ஆகையால்: இருவகையானும் பிராணன் அந்தக்கரணம் என்னுமிரண்டின் பேதம் கூறல் கூடியதேயாம். முன் மொழிந்த சரீரரூப அதிஷ்டானம், அகங்காரரூபகர்த்தா 12-வகையாய காரணம், பிராணாதிரூப சேஷ்டை என்னும் யாவற்றிற்கும் மேலாக முறையே அனுக்கிரகம் செய்யும் தேவதைகள் தைவமெனப்படும். அது காரண வர்க்கத்தில் ஐந்தாவதாம். கூறிய அதிஷ்டானாதிகளைப்போலத் தைவ மும் அனான்மரூபமும் பௌதிகமும் மாயாகற்பிதமும் ஆம். ஆண்டுக்கருத்தா காரணம் சேஷ்டையென்னும் மூன்றினுக் கும் அதிஷ்டானமாகிய சரீரத்திற்கோ பிருதிவி தேவதை யாம். ஏனெனில், சுருதியில், வாக்கு முதலியவற்றின் அதிஷ்டாதா அக்கினியாதிகளோடு சரீரத்தின் அதிஷ்டாதா

ரூபத்தானே பிருதிவி படிக்கப்பெற்றுளதாம். ஆகையால் இச்சுருதிப் பிரமாணத்தானே சரீரரூப அதிஷ்டானத்தின் தேவதை பிருதிவியேயெனத் துணியப்பெறும். கருத்தாரூப அகங்காரத்திற்கு ருத்ரதேவதையாம். இது புராணாதிகளிற் பிரசித்தமாம். இவ்வாறு சுரோத்திராதி காரணங்களின் தேவதையும் வெளிப்படையேயாம். செவி முதலியவற்றிற்கு முறையே, திக்குவாத அருக்க பிரசேதா அசுவினி யென்னும் ஐந்தும் தேவதைகளாம். வாக்காதி யைந்திற்கும் முறையே வன்னி இந்திரன் உபேந்திரன் மித்திரன் பிரஜாபதி யென்னும் ஐவர் தேவதைகளாம். மனமாதிகட்குச் சந்திரனும் பிரகஸ்பதியும் தேவதைகளாவார்கள். பிராணாதி யைந்திற்கும் முறையே, சத்யோஜாத வாமதேவ அகோர தத்புருஷ ஈசான தேவதைகள் ஆவார்கள் என்பது புராணப் பிரசித்தமாம். ஒருமையில் தைவ சப்தத்தானே தரும அதருமம் கூறப்பெற்றுள்ளது.

[பூர்வ சுலோகத்தில் அவ்வதிஷ்டானாதி ஐந்து காரணங்களின் சொரூபங்கூறி யருளப்பெற்றது. இப்போது இம் மூன்றுவது சுலோகத்தால் ஸ்ரீ பகவான் அவ்வைந்திலும் சருவ கரும காரணத்தன்மையைக்கூறி யருளுகிறார்.]

ஏ அர்ச்சுன! இப்புருடன் சரீரம் வாக்கு மனம் என்னும் மூன்றால் தருமத்தையேனும் அதருமத்தையேனும் ஆரம்பிப்பன்; அவ்வியாவற்றிற்கும் அதிஷ்டானாதி யைந்துமே காரணமாம்.

தேகத்தாலாயது வாக்காலாயது மனத்தாலாயது என த்ரிவிதரூபமாய் மூன்று வகையதான கருமம் தருமசாஸ்திரத்திற் பிரசித்தமாம் அக்ஷபாத முனிவரும் மூவகையே கருமத்தைக் கூறியுள்ளாராதலின் பிரதானத்திற் கருத்தை வைத்து ஸ்ரீ பகவான் கூறியுள்ளார். அதிகாரி

யானவன் சரீரத்தாலேனும் வாக்காலேனும் மனத்தாலே னும் நியாயரூப கருமத்தையேனும், விபரீதரூப கருமத்தையேனும் தொடங்குவன், எல்லாக் கருமங்கட்குமே உரைத்த ஐந்துமே காரணமாம். சுருதி ஸ்மிருதிரூப சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட அக்கினி ஹோத்திராதி கருமம் நியாயமாம். அவற்றுனே நிஷேதிக்கப்பட்ட ஹிம்சாதிய தருமம் விபரீதமாம். ஜீவனஹேது பூதமாகிய உச்சுவாசம் நிசுவாசம் நிமேஷம் உன்மேஷம் க்ஷுதம ஜிரும்பணம் என்பதாதி இயற்கையாய கருமங்களும் பிறவும் ஆகிய விதிநிஷேத சருவ கருமங்களும் தரும அதருமங்களின் காரிய ரூபங்களே யாமாதலின் அவையாவுமே நியாயம் அநியாயம் என்னு மிரண்டிலே யடங்கும். ஆகையால் ஸ்ரீ பகவான் திருவாக்கிற் குறைவன்றாகாதாம். சாத்திரத்திற்கும் சாத்திரத்திற்கூறிய கருமத்திற்கும் மநுஷனே அதிகாரி; இப்பொருளை யுணர்த்தும்பொருட்டு ஸ்ரீ பகவான் மனுஷவாசக நர: என்னும் சப்தத்தைக் கூறியருளினர். ஒருரையிலே இச்சுலோகத்திற்கு இப்பொருள் இயம்பப் பெற்றுளது:-சரீராதிகளானே தொடங்கப்பெற்ற கருமம் என்னும் வசனத்தானே பின்னர் அச்சருவ கருமங்களின் அதிஷ்டானாதி ஐந்து காரணமாம் எனக் கூறன்மிக முரணும். ஈண்டுச் சரீரம் என்னும் பதத்தானே அதிஷ்டானத்தைக் கவர்க; நர: என்பதானே கருத்தாவைக் கொள்க; வாங்மந என்றதானே கரணங்கவர்க; ப்ராரப்தே என்னும் பதத்தானே சேஷ்டையைக் கவர்க. ந்யாயம்வா விபரீதம் வா என்னும் வசனத்தானே தரும அதருமரூப தைவத்தைக்கொள்க. சருவகருமங்களினும் அதிஷ்டானாதியைந்து காரணங்களின் உபயோகம் சமானமேயாம். இவ்வைந்து மிலாது எக்கருமமும் தோன்றப் பெறுதாமாயினும் சுருதி யாதிகளில் விதிநிஷேதரூப சாரீரவாசிக மானசிகம் என்னும்

மூவகையே கருமம் பிரசித்தமாம். ஆதலின் இது சாரீரம் என்பதாதியாகக் கூறல் அவ்வத்தேகாதிகளின் பிரதானத் தன்மையை யபேக்ஷித்தாமன்று அக்கூற்று அச்சரீராதி கருமங்களில் அதிஷ்டானுதிகளின் ஹேதுதையை நீக்க மாட்டாதாம் என்றறிக; ஆகையால் சிறிது மாத்திரையையும் ஈண்டு முரண் இன்றும்.

[முன் மொழிந்த அதிஷ்டானுதிகட்கே சர்வகர்மங்களின் கருத்தாத் தன்மை கூடலின், அசங்க ஆன்மாவிற்குக் கருமங்களின் கருத்தாத் தன்மையின்றும். இவ்வண்ணம் ஆன்மாவின்கண் அகர்த்தாத்தன்மை ஞானமும் அதிஷ்டானுதிகளிற் கருத்தாத்தபின்மை ஞானமுமே அவ்வைந்தின் நிரூபணபலமாம்; அப்பயனை இப்போது ஸ்ரீ பகவான் ஆன்மாவைக் கர்த்தாவென வெண்ணும் மூடரையிகழும் வாயிலாகக் கூறியருளுகின்றார்.]

ஏ அர்ச்சுன! அச்சர்வ கர்மங்களிலும் அதிஷ்டானுதிகளால் ஜன்யத்தன்மை யிருந்த போதிலும் எந்த மூடன் அசங்க உதாசீன ரூபமேயாகிய ஆன்மாவைக் கர்த்தா ரூபமாய்க் காண்பனே, அத்துர்மதி சாஸ்திர ஜன்னிய விவேகபுத்தி யற்றவனுதலிற் காணுன்.

ஏ அர்ச்சுன! முற்கூறிய தரும அதருமரூப சர்வகருமங்களிலும் கூறிய அதிஷ்டானுதிகளானே ஜன்னியத் தன்மை சித்தமாயினும் உண்மையாய்ச் சங்க உதாசீன ரூபமேயாய ஆன்மாவை எந்த மூடன் கருத்தாவாய்க் காண்கின்றனனே; அதாவது சர்வ ஜடவுலகையும் விளக்குவதும், இருப்பு விளக்கவடிவமும், சுவப்பிரகாச பரமானந்தகனமும் பாதமற்றதும், அசங்க உதாசீனமும், அகர்த்தாவும், அக்கிரியமும், அத்விதீயமும், ஆகி யுண்மையாயிருப்பினும் ஆன்மா அவித்தையினுனே மொழிந்த அதிஷ்

டாறுதிகளில் பிரதிபிம்பிதமாம். சூரியன் நீரில், பிரதிபிம்பித்தலே போலும், நீர் முதலியவற்றை விளக்கும் சூரியன் அவற்றின் அயலாயினும் நீரோடு சூரியனுக்குத் தாதாத்மிய பாவத்தைக் கற்பித்து மூடன் ஜலத்தின் சலனத்தால் சூரியன் சலிப்பதாக எண்ணுகின்றதேபோல அதிஷ்டாறுதிகளை யொளிர்விக்கும் அசங்க அத்விதீய ஆன்மாவிற்கு அதிஷ்டாறுதிகளோடு தாதாத்மிய பாவத்தைக் கற்பித்து அவற்றின் கருமத்தை ஆன்மாவின்கண் ணுரோபித்து யானே கருத்தன் எனச் சருவசாக்ஷி ரூபமாய் ஆன்மாவையும் கிரியைக்காசிரயமாகக் காண்பன். கருத்திதுவாம்:— இரஜ்ஜுவின் உண்மை வடிவத்தை யுணராமல், சர்ப்பமாய்க் காண்பதேபோல ஆன்மாவினுண்மையாய அசங்க அகர்த்துரு ரூபத்தைக் காணுமல், அவித்தையினுனே அதனைத் தேகாதி கருமாசிரய ரூபமாய்க் காணும் மயக்கமுடையவன் இவ்வண்ணம் ஆன்மாவைக் காணினும் கண்டிலன். இரஜ்ஜுவைச் சர்ப்பரூபமாய்க் காணினும் மயங்கியவன் கண்டிலாததே உண்மையாய் அசங்க உதாசீன அகர்த்தான்மாவைக் கர்த்தாரூபமாய்க் காணினும் மயங்கியவன் கண்டிலன். மூடன் மயக்கத்தானே யான்மாவை விபரீதமாகவே காண்பன். உண்மை வடிவத்தைக் காணுன் என்பதில் ஏதுயாதாம் எனச் சங்கை யருச்சுனனுக்குண்டாக ஸ்ரீ பகவான் அவ் விபரீத தரிசனத்தின்கண் ஏதுவை கூறியருளுகின்றூர்:—குரு சாஸ்திர வுபதேசத்தானே உண்டாகாத விவேகமதி யெவனுக்கோ அவன் அகிருத புத்தியாம்; அத்தகையனுதலின் அவன் ஆன்மாவை விபரீதமாகவே காண்பான்; அதாவது உண்மையாய் அசங்க உதாசீன அகர்த்தா ரூபமாயினும் ஆன்மாவை மயங்கியவன் கருத்தா ரூபமாகவே காண்பன். கருத்திதுவாம்:— இரஜ்ஜுவின் உண்மை வடிவம் சாக்ஷாத்தாகப் பாராத

வரை பாம்பு மயலை எவ்வுபாயத்தானும் நீக்கிக் கொள்ள முடியாததே போலச் சத்தியஞான அநந்த அகர்த்தா அபோக்தா பரமானந்த மூவகைத்தேயமற்ற அசங்க உதாசீனப் பிரஹ்மம் யானெனப் பிரஹ்ம சாக்ஷாத்காரம் குரு சாஸ்திர உபதேசத்தானே உண்டாகாதவரை அக்கர்த்திருத்துவமயலை எவ்வுபாயத்தானேனும் நீக்க முடியாதாம். குரு சமீபஞ்சென்று வேதாந்த வாக்கியத்தை விசாரித்து இங்ஙன் பிரஹ்மான்ம சாக்ஷாத்காரத்தை ஏன் உண்டாக்கிக் கொள்ளவில்லை யென்றுண்டாம். அருச்சுனன் சங்கைக்கு விடையருளுகின்றார்:—விவேகத்தின்றடையாகிய பாவ கருமங்களானே அசுத்த அந்தக்கரண முடையவன் துர்மதியாவன்; அதனானே பிராந்தன் குருவையடைந்து சிரவணஞ் செய்திலன். கருத்திதுவாம்:—பாவ கருமங்களானே அசுத்த புத்தியை யுடையவன் ஆதலின் நித்தியாநித்திய வஸ்துவிவேகாதியின் இன்மையினானே பிரஹ்மான்ம ஞானத்திற்குத் தகாமையானே அவித்தையான் மயங்கியோன் அகர்த்தாரூப ஆன்மாவையும் கர்த்தா ரூபமாய்க் கற்பித்தும், கேவலரூப ஆன்மாவை அகேவலரூபமாய்க் கற்பித்தும், கருமகர்த்தா ரூபமாகிய அதிஷ்டானாதிகளில் தாதாத்மிய அபிமானத்தானே கருமங்களைத் தியாகஞ்செய்வதில் அசமர்த்தனாகி யதனானே சம்சாரி கருமத்தினதிகாரி தேகபிருத்து அகிருத புத்தியென்பனவாகப் பல பெயர்களையுற்று எல்லா வகையானும் ஜன்ம மரணம் அடைவானே அநிஷ்ட இஷ்ட மிசிரம் என்னும் மூவகையாய கருமபலத்தையே யனுபவிப்பன். இத்துணையானே தேகாதிகளினும் வேறாகிய ஆன்மாவையே கேவலம் கர்த்தாவாகக் காணும் தார்க்கிகனும் அகிருத புத்தியேயென்றறிகவென்னும் பொருள் அறிவித்தருளப் பெற்றதாம். ஒருவாதியோ இதற்கு இப்பொருள் செய்வன்:—ஆன்மா கேவலம் கருத்

தாவன்றும்: மற்றோ, முன்மொழிந்த அதிஷ்டானுதிகளோடு சேர்ந்த ஆன்மா கருத்தாவாம்; இவ்வாறுண்மையாய் அதிஷ்டானுதிகளோடு கூடிக் கர்த்தாத்தன்மையை யடைவுற்ற ஆன்மாவைக் கேவலம் கர்த்தாவாகக் காண்பவன் அதாவது அதிஷ்டானுதிகளின் சம்பந்தமின்றிக் கேவலம் ஏக ஆன்மாவையே கர்த்தாவாகக் காண்பவன் துர்மதியாவன். இவ்வாறாய பொருள் கேவலம் என்னும் சப்தப் பிரயோகத்தானே சித்தமாம். இவ்வாறின் பொருள் நல்லதல்லவாம். ஏனெனின் சர்வக்கிரியைகளு மற்ற அசங்க ஆன்மாவிற்கு அதிஷ்டானுதிகளொடு சேர்க்கையே கூடாதாம். ஜலசூரியனைப்போல அவற்றோடு அசங்க ஆன்மாவிற்கு அவித்தையின் சம்பந்தத்தாலுண்டாய கலப்புடன் படிஞே அங்கன் சேர்தலான் ஆன்மாவின்கண் அக்கர்த்துருத்வமும் அதிஷ்டானுதிகள் யாவும ஆவித்யகமேயாம்; கற்பித அவற்றோடு ஆன்மாவின் வாஸ்தவ சம்பந்தத்தன்மை சம்பவியாதாம். கேவலம் என்னும் சப்தமோ, இயற்கையானே சித்தித்த ஆன்மாவின் அசங்க அத்வீதிய வடிவத்தை அனுவாதஞ் செய்கின்றது. ஆன்மாவைக் கர்த்தாவென அங்கீகரிப்பவன்பால் துன்மதித்தன்மையை புணர்த்தும் பொருட்டாம்; ஆகையால் கேவலம் என்னும் சப்தத்தானே வாதியினர்த்தஞ் சித்தியாதாம்.

[அருளிய நான்கு சுலோகங்களால் 12-வது சுலோகத்தின் மூன்று பாதங்களை வியாக்கியானித்தருளி இப்போது நான்காவது பாதத்தை வியாக்கியானித்தருளுகின்றுர்.] (முக்கிய சந்நியாசிகட்கோ ஒருக்காலும் அம்மூவித பலன் அடைவுறுவாம், என்பது 12-வது சுலோகத்தின் நான்காவது பாதமாம்.)

ஏ கௌந்தேய! எவ்வறிஞனுக்கு யான் கருத்தாவென்னும் விருத்தியுண்டாகவில்லையோ, மதிபற்றறுவ

தில்லையோ, அவ்வறிஞன் இவ்வுலகங்களைக் கொன்றும் கொல்வதில்லை; பந்திக்கப்படவுமாட்டான்.

ஏ பார்த்த! முதற் சுலோகத்திற்கூறிய துர்மதியினும் அத்தியந்த விலக்ஷண அதிகாரியானவன் பூர்வ புண்ணிய கருமத்தாலே விவேக விரோதியாய பாவகருமங்களை யொழித்து விவேக வைராக்கிய சமாதி ஷட்சம்பத்து முமுக்ஷ்வதையென்னும் நான்கு சாதனங்களை யடைந்து குருசாஸ்திர உபதேசத்தாலே உண்டாய அகர்த்தா, அபோக்தா, சுவப்பிரகாச, பரமானந்த, அத்விதீயப் பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத்கார மடைந்தவனுக்கு அகங்கார பாவம் நஷ்டமாம்; அதாவது தத்துவ சாக்ஷாத் காரத்தாலே காரியசகித அஞ்ஞானம் பாதிதமாகவே யான் கருத்தா என்னும் விருத்தி ஒருகாலும் உண்டாகா தாம். தத்துவ வேத்தாவினுடைய சம்பாவம் அகம் எனக் கூறல் தகுதியல்லவாம். ஏனெனின் தத்துவசாக்ஷாத்காரத் தாலே காரியசகித அஞ்ஞானம் பாதிதமாகவே யான் கருத்தா என்னும் விருத்தி ஒரு காலும் உண்டாகாதாம். தத்துவ வேத்தாவினுடைய சற்பாவம் அகம் எனக் கூறல் தகுதியல்லவாம். ஏனெனின், தத்துவசாக்ஷாத் காரத் தாலே அகங்காரம் பாதகமாகவே தத்துவ ஞானியின் சுத்த சொரூபமாத்திரமே எஞ்சியதாய் நிற்கும். அதன்கண் மன வாணியின் விஷயத்தன்மை யில்லையாம். தத்துவமுணர்ந்தவ னுக்கு அகங்காரத்தன்மையாகிய தாதாத்மிய அத்தியாச மின்றாம்; ஏனெனின், தத்துவவேத்தாவின் றாதாத்மிய அத்தியாசம் விவேகத்தால் நீங்கி விட்டதாகும். விவகார காலத்திற் றத்துவவித்தின் கண்ணும் பாதித அனுவிருத்தி யாலே கருத்தாத்தன்மை தோற்றுமாயினும் இவ்வாறு ஆராய்ந்து தன்னுள்ளாவின் 'கண் கர்த்தாத்தன்மையை எண்ணான்; மற்றோ, முன்மொழிந்த அதிஷ்டானாதிகளிலே

கர்த்தாத்தன்மையை யெண்ணுவன். அவ்வாராய்ச்சி:— சர்வான்மரூப என்னிடத்தில் மாயையாற் கற்பிக்கப்பட்ட அதிஷ்டானாதிகளைக் கற்பித சம்பந்தத்தாலே சுவப்பிரகாச அசங்க சைதன்யனாகிய யானே யொளிவிக்கின்றேன். அதிஷ்டானாதிகளே சருவ கருமங்கட்குங் கருத்தாவாம்; அசங்கனாகிய யான் ஒருகாலும் கருத்தாவல்லன். யான் அக் கருத்தாவிற்கும் வியாபாரங்கட்கும் சாக்ஷிபூதன். கிரியாசக்தியையுடைய பிராணரூப உபாதியும்; ஞான சக்தியையுடைய அந்தக்கரணரூப உபாதியும் அற்றவன் சுத்தன், சர்வகாரியகாரண சம்பந்தமற்றவன்; கூடஸ்த நித்தியன், சர்வ துவைதமற்றவன், ஜன்மமரணாதி சர்வ விகாரங்களுமற்றவன். இத்தகைய எனது ஸ்வரூபத்தைச் சுருதிகளும் ஸ்மிருதிகளும் பிரதிபாதிக்கின்றனவாதலின் அசங்க ஆன்மாவாகிய யான் கருமங்களின் கருத்தாவல்லேன் என ஆராய்ந்து தத்துவமுணர்ந்தவன் அசங்க ஆன்மாவைக் கருத்தாவென வெண்ணாது கூறிய அதிஷ்டானாதிகளையே கருத்தாவென வெண்ணுவன் இதனாலே யவனது மதி பற்றடைவதில்லை. அதாவது, தத்துவவேத்தாவின்மதி அநுசயவாவியாகாதாம். இக் கருமத்தை யான் செய்கின்றேன் இதன் பயனை யான் அநுபவிப்பேன் என்னும் அநுசந்தானம் கர்த்தா போக்தாத் தன்மையின் வாசனை வடிவ நிமித்தத்தானே ஜன்னியமாம், அவ்வநுசந்தான ரூபபற்றிற்கு அநுசய மெனப்பெயராம் அது புண்ணிய கருமத்திலோ ஹர்ஷரூபமாம் பாவகருமத்தில் பச்சாத்தாப ரூபமாம் என்னும் இருவகை இலயத்தால் தத்துவஞானியின் புத்தி பொருந்தாதாம். ஏனெனின் அகர்த்தா அபோக்தாவாகிய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தானே கர்த்தருத்துவ போக்தருத்துவ முதலியவை நீங்கி விட்டனவாமாதலின் அவன் மதி பற்றுறாதாமென் றுணர்க.

சுருதி கூறுவதாவது:—அஞ்ஞானியை ஆற்றிய பாவமும் ஆற்றாத அறமும் தாபப்படுத்துவதுபோலப் பிரஹ்ம வேத்தாவாய அறிஞன் செய்த பாவமும் செய்யாத புண்ணியமும் தபிப்பியாவாம் இப்பிரஹ்ம வேத்தாவிற்கு மகா பிரபாவமுளது, புண்ணியத்தானே மகிழான். பாவத்தானே பரிதவியான், யான் பிரஹ்மரூபனெனப் பிரத்தியக்க பின்னப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்துத் தத்துவ வேத்தா புண்ணியத்தோடு பற்றுறான். நீரிலுறுந் தாமரை யிலையை நீர் பற்றாதது போலத் தத்துவவேத்தாவைப் புண்ணிய பாவம் பற்றாவாம். இத்துணையானே இப்பொருள் துணியப்பெறும்:—அகங்காரத்தை யடையாதவனும், மதியிற் பற்றாதவனும் ஆகிய தத்துவவேத்தாவானவன் துர்மதியினும் விலக்ஷணமதியாவன். பரமார்த்த தரிசியாய அவன் ஆன்மாவைக் கேவலம் அகர்த்தாவாகவே காண்பன் ஒருகாலும் கர்த்தாவென வெண்ணான். அவனுக்குக் கர்த்திருத்துவாதி யபிமான மின்மையானே அநிஷ்ட இஷ்ட மிசிரம் என்னும் மூவகைக் கருமபலத்தை யொருகாலுமடையான். இத்துணையே இக்கீதா சாஸ்திரத்தின் பொருளாம். இப்போது ஸ்ரீ பகவான் தத்துவஞானியைத் துதிக்கும் பொருட்டு மொழிந்த அகங்கார அபாவத்தையும் மதிப்பற்றின்மையையும் கூறி யருளுகின்றார்:—தத்துவ ஞானி எல்லாப் பிராணிகளையும் கொன்றும் கொல்லான்; அதாவது அசங்க ஆத்மா எப்போதும் அகர்த்தா ஆவேன் என அகர்த்தா வடிவத்தின் சாக்ஷாத்காரத்தானே கொல்லுதல் வடிவக் கிரியையின் கருத்தாவாகான்; இதனானே பந்திக்கப்பட மாட்டான்—அந்நரூபக் கிரியையின் காரியரூப அதருமபலத்தோடும் சம்பந்தத்தை யடையான். கொன்றும் பந்தமடையான் என்பதனானே ஸ்ரீ பகவான் தத்துவ சாக்ஷாத்காரத்தின் மகத்துவத்தைத் திருவாய்

மலர்ந்தருளினரே யன்றித் தத்துவ வேத்தாவானவன் சர்வப்பிராணிகளையும் கொல்வான் என்பதில் திருக்கருத் தின்றாம். சர்வாங்க தரிசியினிடத்தில் எல்லாப் பிராணிகளின் கொலை செய்தல் சம்பவியாதாம்; அவனிவ்வுலகங்களில் கொன்றும் என்பதனாலே தத்துவவேத்தாவின்பால் அந்தக்கிரியையின் கர்த்தாத்தன்மை கூறியது இலௌகிக திருஷ்டியாலேயாம். கொல்லான் என்பதனாலே அவனிடத்தே கருத்ருத்துவ நிஷேதஞ் செய்யப்பட்டது, சாஸ்திர திருஷ்டியினாலேயாம். ஆகையாற் கொன்றுங் கொல்லான் என்னும் இரண்டும் முரண்படாவாம். இந் நூலினாதியில் ஆன்மாவின்கண் எல்லாக் கருமங்களின் தீண்டாமை பிரதிஞ்ஞை செய்தருளப்பெற்று, பின்னரும் அதனையே திரப்படுத்தியருளி, பின் அறிஞருக்குச் சர்வ கருமங்களின் அதிகார நீக்கம் சுருக்கமா யருளப்பெற்றது. அவ்வதிகார நீக்கமே இடையிடையே பிரசங்கத்தை யனுசரித்து விஸ்தரித்து விளம்பியருளப்பெற்றது. இத்துணையே கீதா சாஸ்திரத்தின் பொருளாம். இவ்வாறு சாஸ்திரார்த்தங்களின் ஒருமையுடைமையைக் காண்பித்தருளற் பொருட்டே சருவ கரும அதிகார நீக்கம் உபசங்காரஞ் செய்தருளப் பெற்றது. ஆகையால் இப்பொருளாயது:—அஞ்ஞானத்தினாலே கற்பனை செய்யப்பட்ட அதிஷ்டானாதி 5 அனான்ம பதார்த்தங்களாலேயே செய்யப்பட்ட விதிநிஷேத கருமங்களெல்லாம் அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் ஆத்ம வித்தையினாலே மூலசகிதமாய்க் கெடுமாதலினாலே பரமார்த்த சந்யாசிகளை அநிஷ்டாதி 3 வகைக் கருமபலமடையாவாம் என அருளியது பொருத்தமுடையதேயாம். அகர்த்தாவாதியாய ஆன்மாவின் சாக்ஷாத்காரமே பரமார்த்த சந்யாசமாம். இது ஜனகன் அஜாதசத்துரு முதலிய தத்துவ வேத்தாக்களாகிய கிருகஸ்தர்களிடத்து மிருக்

தது. ஆகையால் அவர்களும் பரமார்த்த சந்யாச முடைய வரேயாவர். ஜனகாதி கிருகஸ்த ஞானிகளிடத்தில் அவாது வருணாசிரம கருமம் காணவந்ததாயினும் தத்துவ வேத் தாக்களாகிய பரமஹம்ச சந்யாசிகளிடத்தில் நுகர்வினை வயத்தால் பாதித அனுவிருத்தி கொண்டேனும், அன்னிய ரது கற்பனையினாலேனும், பிக்ஷாடனாதிகள் பிரதீதியாவதே போலப் பிரபல நுகர்வினைவயத்தால், கூறிய இருவகை கொண்டு ஜனகாதிகளிடத்தில் கருமங்களின் றரிசனம் முரண்படாதாம். இதனாலே, ஆன்மஞான பலபூத வித்வத் சந்யாசஞ் சொல்லப்படும்; சாதனபூத விவிதிஷா சந்யா சமோ முதலில் இவ்வாறு உண்டாகாதாயினும் ஞானத்தின் பின் இவ்வாறேயாம்.

[முன்னர் அதிஷ்டானாதி ஐந்தும் சர்வ கருமங்களின் ஹேதுவெனக் கூறியருளி ஆன்மாவிற்குச் சர்வ கருமங்க ளின் பரிசமின்மைகூறி யருளப்பட்டது; இப்போது முன் னருளிய பொருளையே ஞானஞேயாதிப் பிரக்கிரியையாக வருணிப்பதுடன், இரைகுண்ய பேதவியாக்கியானத்தானே முன்னிலும் விலக்ஷணமுறையாக வருணித்தருளுகின்றார்.]

௰ அர்ச்சுன! ஞானஞேய பரிஞாதாவென்னும் மூன் றும் காமப்பிரவர்த்தகங்களாம். கரணம் கர்மம் கர்த்தா என் னும் மூன்றும் கர்மாசிரயங்களாம். ஏ கௌந்தேய! வஸ்து வின் உண்மை வடிவத்தை யொளிர்விப்பது ஞானமாம்— பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களானே உண்டாய குடமுத லியவற்றின் பிரகாச வடிவக்கிரியை ஞானமென்பதாம். ஞானரூபக்கிரியைக்குக் காமபூதமாயகடாதிகள் ஞேயங்க ளாம். ஞானரூபக்கிரியைக்கு ஆசிரயபூதமும், அந்தக்கரண ரூப உபாதியானே நன்கு கற்பிக்கப் பெற்றதும் ஆகிய போக்தா பரிஞாதாவாம். அம்மூன்றும் ஒன்றாகக்கூடியே

இஷ்ட அநிஷ்டரூப கருமங்களைத் தொடங்கும்; ஒன்று கூடாமல் எக்கருமத் தொடக்கமுமிலதாம். ஏனெனின், ஞேயஞாதாக்க ளிருந்தபோதிலும் ஞானமிலதாயபோது பிரவிருத்தி யுண்டாகாதாம். ஆதலின் பிரவிருத்தியின்கண் அந்த ஞானத்திற்கு அவசியம் காரணத்தன்மையை யங்கீகரிக்கவேண்டும். ஞான ஞாதாக்களிருந்தபோதிலும் தேச காலத்தானே ஞேயந் தடையாயின் பிரவிருத்தி யாகாதலின் அதன்கண் ஞேயத்தையும் அவசியம் காரணமெனக் கொள்ள வேண்டும் நித்திரையில் வாசனை வடிவ ஞான ஞேயங்களிருந்த போதிலும் ஞாதாவில்லாமையின் பிரவிர்த்தி உண்டாகாதாகலின், அதன்கண் ஞானத்தையும் காரணமாக அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஆகையால் மூன்றும் ஒன்று சேர்ந்தே சருவ கருமங்களையும் தொடங்கும். இப்பொருளை ஸ்ரீ பகவான் மூன்றும் கர்மப்பிரவர்த்தகங்களாம் என அருளினார். ஞானாதி மூன்றும் ஒருங்கு சேர்ந்தே கருமப் பிரவர்த்தகமாம். அஞ்ஞான பதார்த்தத்தின்கண்ணே பிரேரணீயத் தன்மையும் பிரேரகத்தன்மையுமாம். அசங்க ஆன்மாவின்கண்ணே அவ்விரண்டு மின்றுமென்று அறிந்துகொள்க. எதன் வியாபாரத்தின் பின்னர்க் கிரியையின் சித்தியாமோ அது காரணமாம். அதுவும் உள் வெளி வேற்றுமையானே இருவகையாம். செவி முதலியவையோ வெளிக்கரணமாம். மனாதிகளோ உட்கரணமாம். கர்த்தாவின் கிரியையில் இசையத்தக்க இஷ்டகாரகம் கருமமாம்; அதுவும் உற்பாத்தியம், ஆப்பியம், சம்ஸ்கார்யம், விகார்யம் என்னும் வேற்றுமையானே நான்கு வகையாம்.

அவற்றுள் உற்பத்திக்குத் தகுதியாயது அல்லது யாது முன்னிராது பின்னுண்டாமோ அது உற்பாத்தியமாம்; முன்னர் இருந்தே அடையப்படுவது ஆப்பியமாம்.

குணங்கொள்ளல் மலந்தள்ளல் வடிவசமஸ்கார யோக்கிய மாயது சமஸ்கார்யமாம்; முன்னவஸ்தையைவிட்டு வேறு அவஸ்தையின் அடைவு விகாரம், அதையடைவது விகார்ய மாம்; யூபஸ்தம்பம் உற்பத்தியாக்கலும், தன் வேதசாகைப் படித்தடைதலும், நெல்லைப் புரோக்ஷித்துச் சமஸ்கரித்தலும் சோமக்கொடியைப்பிழிந்து விகாரப்படுத்தலும், முறையே இந்நான்கினுக்கும் உதாரணங்களாம். இதாகாரகங்க ளால் அப்பிரயோஜ்யமும் சகலகாரகங்களின் பிரயோஜக மாயதும் கர்த்தாவாம். அஃதிங்கு சித்தசித்தின் கிரந்தரூப மாய்க்கொள்க. கரணங்கருமம் கருத்தாமூன்றுமே பரஸ் பரம் சமுச்சயபாவத்தை யடைந்து கருமசங்கிரகமாம்= கருமங்களின் ஆசிரயரூபமாம், கரணங் கர்மங் கர்த்தா வென்னும் வசனத்தின் ஈற்றில் இருக்கும் என்னும் என்ற சப்தத்தானே சப்பிரதானம், அபாதானம், அதிகரணம் என்னும் மூன்று காரகங்கட்கும் கரணாதி மூன்றிலே உள் ளடக்கமெனக் கொள்க. நல்ல மேன்மை மதியானே எவர்க்கப் பொருளீயப் பெறுமோ அது சம்பிரதானமாம்; வேதவேத்தாவாகிய மறையவனுக்குக் கோக்கொடுத்தல் உதாகரணமாம்: மறையவன் சம்பிரதானமாம். சம்யோக வாயிலாய் வியகத்தில் அவதியாதோ அதே அபிதானமாம். இமாசலத்தினின்றும் ஸ்ரீ கங்காதேவி இறங்குதல் போல வாம். பர்வதம் அபாதானகாரகமாம். ஆதாரமென்பது அதிகரணமாம். இவ்வாறு கருத்தா, கருமம், கரணம், சம் பிரதானம், அபாதானம், அதிகரணம் என ஆறுகாரகங்கள் இலக்கணநூலிற் பிரசித்தங்களாம். "இந்திரன்முமறையைக் கரத்தாற் கொய்திறையவனுக்குத் தந்திருங் குற்றத்தினீங்கி விண்மேலிருந்தா னெனவும், வந்திடுங் காரகமெல்லாம்" இவை முறையே யுகாதகரணங்களாம். சம்பிரதானாதி மூன் றையும் கருத்தாதிகளில் அடக்கி ஸ்ரீ பகவான் கர்த்தாதி

மூன்றைக் கூறியருளினர். இவ்வாறு மூவகைத் தகைமை யடைந்த காரகமாறன் கூட்டமே சர்வக் கிரியைகளின் ஆசிரயமாம். கூடஸ்த ஆத்மா எக்கிரியைக்கும் ஆசிரய மாகாதாம்; ஆகலின் துணிபு இதுவாம்:—யாது யாது கருமப் பிரேரகமாமோ, ஆசிரயமாமோ, அவையாவுமே காரகரூபமேயாம், திரிகுணாத்மகமேயாம், ஆன்மாவோ காரகபாவமற்றதும், முக்குணங்கள் அற்றதும் ஆமாதலின் சர்வ கர்மங்களின் பரிசமற்றதாம் என்றறிக.

[பூர்வ சுலோகத்தில் ஞாத்ரு காருந்தி இருமும்மையும் அருளப்பெற்றது. இப்போது அவற்றில் திரிகுணரூபத் தன்மை யவசியம் கூறத்தக்கதாமாதலின் ஸ்ரீ பகவான் அவற்றைத் தொகுத்துக் கூறியருளி அவற்றில் திரிகுண ரூபத்தன்மையின் பதிஞ்ஞையைச் செய்தருளுகின்றார்.]

ஏ அர்ச்சுன! சாங்கிய சாஸ்திரத்தின்கண் ஞானமும், கருமமும் கருத்தாவும் சத்துவாதி முக்குணபேதத்தானே மூவகையே யாகுமென்ப. அந்த ஞானாதிகளையும் அவற் றின் வேற்றுமைகளையும் நீ யுள்ளபடி கேட்பாயாக.

ஏ கௌந்தேய! பிரத்யக்ஷாதிப் பிரமாண ஜன்னிய வஸ்துவின் பிரகாசரூப அந்தக்கரண விருத்திரூப ஞானமே இங்கு ஞான சப்தத்தாற் கவரத்தக்கதாம், வஸ்துவில் ஞேயத்தன்மை உண்டாதல் ஞானரூப உபாதியாலாயதாம் ஞானமின்றி யாகாதாம். ஆதலின் மொழிந்த ஞேயத்திற் கும், ஞானத்தின் கண்ணடக்கமாம். கரும சப்தத்தானே யாகாதிரூபக் கிரியையைக் கவர்க. கருமம் கரணம் என் னும் இரண்டு காரகங்களும் கிரியையின்கண் உள்ளடக்க மாம்: ஏனெனின், வத்துவின்கண்ணே காரகத்தன்மை கிரியை வடிவ உபாதியாலாயதாம்: கிரியையின்றி யுண்டா காதாமாதலின் கூறிய உள்ளடக்கம் பொருத்தமுடையதே

யாம். முன்னர் அருளிய கிரியையை யுண்டாக்குவதாகிய கருத்தாவையே ஈண்டுக் கருத்தா சப்தத்தானே கவர்க. பரிஞாதாவை இக்கர்த்தாவின் கண்ணே யடக்கமெனவறிக. கரணம் கருமம் என்னும் இரண்டு காரகங்களைப் போலக் கர்த்தாவின் கண்ணும் கிரியை யுபாதிகத்தன்மை சமானமே யாதாதலின் அவ்விரண்டைப்போலக் கர்த்தாவையும் தனியே கூறுதல் கூடாதெனினும், கர்த்தாவின் கண்ணே தனியாகத் திரிகுணத்தன்மைரூபக் கூற்றுக்குத் தார்க்கிகர்கள் மயலாற் கற்பித்த ஆன்மத் தன்மையை நீக்கும் பொருட்டாம். அவரோ கர்த்தாவையே யான்மாவென்பர். ஞானாதி மூன்றும் குணசங்கியானத்தில் சத்துவாதி வேற்றுமையானே சாத்விகம் இராஜசம் தாமசம் என மூவகையாகக் கூறப்பெற்றுளது. சத்துவாதி முக்குணம் காரியவேற்றுமையானே எந்நூலின்கண்ணே பிரதிபாதிக்கப் பெற்றுளதோ அது குண சங்கியானமாம். அத்தகையது கபிலமுனிவர் கூறிய சாங்கிய சாஸ்திரமாம். அதன்கண்ணிவை யறையப் பெற்றுள்ளனவாம். சாத்விகாதி முப்பேதங்களன்றி நான்காவ தொன்றின்றாம். சாங்கிய சாஸ்திரம் பரமார்த்தப் பிரஹ்மத்தின் ஒருமையின் கண்ணே பிரமாண மாகாதாம்; ஆங்கு நானு ஆன்மாவே அங்கீகாரமாதலின்; என்றாலும் சாங்கிய சாஸ்திரம் அபரமார்த்தரூப சத்துவாதி குணங்களின் கௌணபேத நிரூபணத்தில் வியாவகாரிகப் பிரமாண பாவத்தை யடையும்; அதனானே இதனை ஸ்ரீ பகவான் சிலாகித்தருளினர்; அதாவது ஞானாதிகளின் மூவகைத்தகைமை கேவலம் இத்கீதாசாஸ்திரத்தின்மட்டும பிரசித்தமல்லவாம்; மற்றே, கபிலமுனிவர் கூறிய சாங்கிய சாத்திரத்தின்கண்ணும் பிரசித்தமாம். ஞானாதிகளையும், சத்துவாதி குணங்களால் ஆக்கப்பெற்ற அவற்றின் வேற்றுமையையும் உள்ளபடியே கேட்

பாயாக; அதாவது சாஸ்திரத்தில் அவற்றின் சொரூபங் கூறப்பட்டவாறே சிரவணிக்கும் பொருட்டு நீ சாவ தானன் ஆதியென்பதாம். முன் 14-வது 17-வது அத்தி யாயங்களில் ஸ்ரீ பகவான் சத்துவாதிகளையும் அவற்றுலாய சாத்விகாதி பேதங்களையும் கூறியருளி மீண்டும் மீண்டுங் கூறி யருளுவதானே கூறியது கூறலென்னுங் குற்றமாம் எனினும், இவ்வித விவத்தையானே அத்தோஷ மனுகா தாம். பூர்வம் 14-வது அத்தியாயத்திலோ சத்துவாதி குணங்களில் பந்தவேறுதுத்தன்மையின் பிரகாரம் நிரூபித் தருளப்பட்டது, குணாதீதனுக்கு ஜீவன் முக்தத்தன்மையை நிரூபித்தருளும் பொருட்டாம். 17-வது அத்தியாயத்திலோ சத்துவாதி குணங்கள் செய்த மூவகைச் சுபாவத்தை நிரூபித்தருளியதால் இப்பொருள் துணிப்பெறும்: அதிகாரி அசுரரூப ராஜச தாமச சுபாவத்தைப் பரித்தியாகித்துச் சாத்விக ஆகாராதிகளைச் சேவித்துத் தேவரூப சாத்வீக இயற்கையே சம்பாதிக்கத்தக்க தென்பதாம். இப்பதி னெட்டாவது அத்தியாயத்திலோ இயற்கையானே குணா தீத அசங்க ஆன்மாவிற்குக் கிரியை காரகம் பலம் என்னும் மூன்றோடும் சிறிது மாத்திரையும் சம்பந்தமின்றாம். இப் பொருளை யுணர்த்தி யருளும் பொருட்டுக் கிரியாகாரகாதி யாவற்றிற்கும் திரிகுண ரூபத்தன்மையேயாம், இதனினும் அயலாக எவ்வடிவமும் அவற்றிற்கிலதாம்; இக்கிரியாகார காதிகட்கு ஆன்மாவின் சம்பந்தித் தன்மையாமாதலின்; என்னும் பொருள்கூறி யருளப்பெற்றதாம். இதுவே மூன் றத்தியாய வசனங்களில் விசேஷத்தன்மையா மாதலின் கண்டுக் கூறியது கூறல் என்னுங் குற்றமுண்டாகாதாம்.

பூர்வ சுலோகத்தில் ஞானம் கர்த்தா கர்மம் என்னும் மூன்றற்கும் சாத்விகாதி மூவகைத்தகைமை அறியத்தக்க தெனப் பிரதிஞ்ஞை செய்தருளப் பெற்றது; இப்போது

முதலில் ஞானத்திற்கு மூவகைத்தகைமையை 3-சுலோகங்களால் ஸ்ரீ பகவான் நிரூபித்தருளுவர். அதன் கண்ணும் முதலில் அத்வைத ஆன்மவாதிகட்குச் சாத்விக ஞானத்தைக் கூறியருளுகின்றார்.]

ஏ பார்த்த! ஒன்றற்கொன்று வேற்றுமையையுடைய எல்லாப் பூதங்களிலும் யாண்டும் வியாபக ஏக அவ்யய சத்தாரூப பாவத்தை எவ்வுணர்வாற் சாக்ஷாத்கரிப்பனோ அவ்வுணர்வைச் சாத்விக ஞானமென்றறிதி.

ஏ அர்ச்சுன! அவ்வியாகிருத இரணியகருப்ப விராட்டு என்னும் பெயர்களையுடைய காரண சூக்கும தூலரூப சமஷ்டி வியஷ்டி வடிவ சர்வபூதங்களும் விபக்தங்களாம்; அதாவது, வேறு வேறு நாம ரூபங்களானே பரஸ்பரம் வியாவர்த்தியமும் நானாசமுமாகிய உற்பத்தி நாசமுடைய திருசியவர்க்கரூப சர்வ பூதங்களிலும் சத்தை வடிவ பாவத்தை வேதாந்த வாக்கியங்களின் விசாரத்தாலுண்டாய அந்தக்கரண விருத்திரூப ஞானத்தானே அதிகாரி சாக்ஷாத்கரிப்பன்; அதாவது, அச்சர்வ பூதங்களிலும் பரமார்த்த சத்தை வடிவ சுவப்பிரகாச ஆனந்த ஆன்மாவை எவ்வுணர்வாற் சாக்ஷாத் கரிக்கலாமோ என்பதாம். சத்தையாகிய பாவம் ஒன்றாம்; அதாவது, சஜாதீய விஜாதீய சுவகத பேதங்களற்றமையின் அத்விதீய ரூபமாம்; அவ்யயமும் ஆம்; அதாவது உற்பத்தி விநாசாதி சர்வ விகாரங்களு மற்றதும் அதிருசியமும் ஆம்; அவிபக்தமும் ஆம்; அதாவது, சர்வ ஜடபதார்த்தங்களின் பாத அவதிரூபத்தாலும் யாண்டும் வியாபகமாம்; அத்தகைய அத்விதீய ஆன்மாவை அதிகாரி தேதாந்த வாக்கிய ஜன்னிய ஞானத்தானே சாக்ஷாத்கரிப்பன். மித்தையாகிய பிரபஞ்சத்தின் பாதக ஆன்மஞானத்தை நீ சாத்விகஞானம் என்

றுணர்தி. இவ்வத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தினும் வேறாகிய எத்துணைத் துவைத தரிசனமுளவோ அவை யாவுமே இராஜசமாதலினாலும் தாமதமாதலினாலும் சம்சாரத்தின் காரணமே யாதலின் அந்தத்துவைத தரிசனத்தில் ஒருகாலும் சாத்விகத்தன்மை யுண்டாகாதாம்.

[இப்போது இராஜச ஞானத்தின் சொரூபம் வருணித்தருளப்பெறும்.]

ஏ அர்ச்சுன! மீண்டும் பரஸ்பர பேதத்தானே இராநின்ற தேகாதி சர்வ பூதங்களில் பரஸ்பர விலக்கண நானா ஆன்மாக்களின் ஞானத்தை நீ இராஜச மென்றறிதி.

கூறியருளிய சாத்விக ஞானத்தினும் இந்த இராஜச ஞானம் வேறாயதாம்; அவ்வேற்றுமையிதுவாம்:—பரஸ்பர பேதத்தோடு மிராநின்ற தேகாதிக சர்வபூதங்களினும் எஞ்ஞானம் தனிவகை நானாபாவங்களைக் காணுமோ, அதாவது தேகந்தோறும் சுகித்தன்மை துக்கித்தன்மை முதலிய ரூபத்தால் பரஸ்பர விலக்ஷண வேறு வேறு ஆன்மாக்களை எஞ்ஞானங் காணுமோ; கருத்திதுவாம்:—இவ்வுலகத்தில் சிலர் சுகிகளாவர், சிலர் துக்கிகளாவர், சிலர் பண்டிதர், சிலர் மூர்க்கர் என்பதாதி அநேகவகை விலக்ஷணத்தன்மை காண வருகின்றது. ஒருகால் சர்வ தேகங்களினும் ஒரே ஆன்மாயிருக்குமாயின் ஒருபிராணி சுகியாயின் எல்லாரும் சுகிகளாக வேண்டும். ஒருபிராணி துக்கியாயின் யாவருந் துக்கியாக வேண்டும். ஆனால் அவ்வாறு காணேமாதலின் சர்வ தேகங்களினும் ஏக ஆன்மா இல்லை மற்றோ, தேகந்தோறும் வேறு வேறு ஆன்மாவாம். இவ்வாறு குதர்க்கங்களாலுண்டாய ஞானம் தேகந்தோறும் வேறு வேறு ஆன்மாவைக் காண்டலின் அது இராஜசமாம். தேகந்தோறும் ஆன்மாக்களின் பரஸ்பர பேதம், ஆன்மாக்கட்

கீசுர பேதம், ஆன்மாவிற்கும் ஜடவர்க்கங்கட்கும் பேதம், ஈசுர ஜடவர்க்கங்கட்கும் பேதம், ஜடவர்க்கங்கட்கும் பரஸ்பர பேதம் என இவ்வாறு அநௌபாதிக பஞ்ச பேதங்களை விஷயீகரிக்கும் தார்க்கிகரின் ஞானம் இராஜசமே யெனவறிக.

[தாமச ஞான சொரூபத்தை வருணித்தருளல்.]

ஏ அர்ச்சுன! எந்த ஞானம் ஏதாவது ஒரு காரியத்தில் பரிபூரண அருத்தத்தைப்போல அபிநிவேசமுடையதாமோ, ஹேதுவற்றதாமோ, பரமார்த்தப் பற்றற்றதாமோ, அற்பமாமோ அந்த ஞானம் ஆன்றோரால் தாமசமெனப்பெறும்.

ஏ கௌந்தேய! முன்னர் மொழிந்த இராஜச ஞானத்திலும இத்தாமத ஞானம் அயலாம், அவ்வேற்றுமை:— ஆகாசாதிகளின் காரியங்கள் இருந்தபோதிலும் அவ்வியாவற்றினுள்ளும் ஒருதேகரூபகாரியத்தில், அல்லது பிரதிமை முதலிய காரியத்தில் எந்தஞானம் பரிபூரண அர்த்தத்தைப் போலச் சக்தமோ, அதாவது இவ்வளவு மாத்திரமே ஆன்மாவாம்; இவ்வளவு மாத்திரமே ஈசுரராம்; இதனினும் வேறாக ஓரான்மாவேனும் ஓரீசுரரேனும் இல்லையென்னும் அபிநிவேசத்தானே எஞ்ஞானம் ஒரு தேகரூப ஏககாரியத்தில், அல்லது பிரமாதிரூப ஏககாரியத்துலே இனிது பொருந்துவதாமோ, ஆன்மா அவயவத்தோடு கூடியதாம்; தேக பரிமாணமாம் என்னும் திகம்பரரது ஞானம; இதுால தேகமே ஆன்மாவென்னும் சார்வாகரின் ஞானம், பாஷாணகாஷ்டாதி ரூப இப்பிரதிமை மாத்திரமே ஈசுரர் இதனினும் மேலாக வேறு ஈசுரர் இல்லையென்னும் சாஸ்திர சமஸ்கார மற்ற மூடர்களின் ஞானம் என்பவைபோலு மென்க எஞ்ஞானம் உற்பத்திரூப ஹேதுவற்றதாமோ, அதாவது தேகப்பிரதிமையிலும் வேறாக மற்றெத்துணைப்

பூதகாரியங்களுளவோ அவற்றுள் ஆன்மத்தன்மை யின்மையதும், ஈசுரத்தன்மையின்மையதும், ஆகிய பூதகாரிய தேகத்தில் ஆன்மத்தன்மை யெங்ஙனஞ் சம்பவிக்கும், பூதகாரியப் பிரதமையின் கண்ணோ ஈசுரத்தன்மை யெங்ஙனஞ் சம்பவிக்கும், சம்பவியாதாம் என இவ்வாறு எஞ்ஞானம் ஆராய்ச்சி யற்றதாமோ, இக்காரணத்தானே எஞ்ஞானம் அதத்வார்த்தவத்தாமோ. பிரமாணாந்தரத்தாற் பாதிதமல்லாத அர்த்தம் தத்வார்த்தமாம், அது எதற்கு விடயமன்றோமோ அது அதத்வார்த்தவத்தாம், அதாவது எஞ்ஞானம் அயதார்த்த அர்த்தவிஷயகமாமோ எஞ்ஞானம் அற்பமோ, அதாவது ஆன்மாவின் நித்தியத்வ விபுத்வங்களை விடயஞ் செய்யாமையின் யாதுமுற்றிலும் அற்பமாமோ, இவ்வாறு அநித்ய பரிச்சின்ன தேகாதிகளிடத்தில் ஆன்மத்தன்மையபிமான வடிவ சார்வாகாதிகளின் ஞானமாமோ, எஞ்ஞானம் ஆத்மா ஈசுரயிரண்டும் நித்தியம் விபுதேகாதி சங்காதத்திலும் வேறென்னும் தார்க்கிகப் புருடர்களின் ஞானத்திலும் அத்தியந்தம் விலக்ஷணமாகிய அந்த ஞானம் மதிமான்களால் தாமத ஞானமெனப்படும்.

[ஏக அத்விதீய ஆன்மாவை விடயஞ் செய்யும் உபநிடத சம்பந்திகளின் சாத்விக ஞானமே முமுக்ஷுக்களாற் கவரத்தக்கதாம். நித்தியவிபு பரஸ்பர பின்னமாகிய அநேக ஆன்மாக்களை விடயஞ்செய்யும் துவைததரிசிகளாய தார்க்கிகர்களின் இராஜசஞானம், அநித்திய பரிச்சின்ன தேகாதிரூப ஆன்மாவை விடயீகரிக்கும் சார்வாகாதிகளின் தாமச ஞானம் என்னுமிரண்டும் முமுக்ஷுக்களானே விடத்தக்கனவாம். இப்பொருள் முன்னர் அருளப்பெற்றது; இப்போது ஸ்ரீபகவான் சாத்விகாதி பேதத்தானே கருமத்தின் மூவகைமையைக் கூறியருளத் தொடங்கியவற்றுள் ஆதியில் சாத்விக கரும சொரூபத்தை வருணித்தருளல்.]

ஏ பார்த்த! பயன்விழைவு பற்றுதவன் பண்ணுகின்ற சங்கமற்ற விருப்பு வெறுப்பு அற்ற நித்தியகருமம் சாத்விகமெனப்பெறும்.

ஏ அர்ச்சுன! யாது நியதமாமோ, அதாவது அக்கருமத்திற்கு எத்துணைத் திரவியம் தேவதை மந்திரம் முதலிய அங்கங்கள் உளவோ அவை யாவற்றையும் நிறைவிப்பதிலாற்றலற்றவருக்கும் எக்கருமந் தன் பயனை யொருதலையாயடைவிக்குமோ, அத்தகையது அக்கினிஹோத்திராதி நித்திய கருமமாம்; எக்கருமம் சங்கரகிதமாமோ, யானே பெரிய மகஞ்செய்பவனுவேன் எனக்கொப்பாக எவருமேயில்லை யென்பதாதி யபிமானரூப அகங்காரமெனப் பெயரிய இராஜச கர்வவிசேடம் சங்கமாம். அச்சங்க மற்ற, அதாவது எக்கருமம் இவ்வாருய அபிமான பூர்வகம் செய்யப்பட மாட்டாதோ, அஞ்ஞானம் இருக்கும்வரை கர்த்திருத்வ போக்திருத்வப் பிரவர்த்கமாய அகங்காரம் சாத்விக புருடரிடத்து மிருக்கும்; அவ்வஞ்ஞானமும் அகங்காரமும் அற்ற தத்துவஞானிக்கோ கருமங்களின் அதிகாரமேயின்ரும், என்பது முன்னர் அனேகமுறை கூறப்பெற்றதாதலின் சாத்விகனிடத்தில் கர்த்திருத்துவ போக்திருத்துவப் பிரவர்த்தக சாமானிய அகங்காரமிருப்பினும் அந்த இராஜச கர்வரூபவிசேஷ அகங்காரமிருப்பதில்லை. எக்கருமம் இராகத் துவேடமின்றிச் செய்யப்படுமோ, இக்கருமத்தால் யான் அரசு சன்மான முதலியவற்றை யடைவேன் என்னும் அபிப்பிராயம் இராகமாம், இக்கருமத்தால் யான் சத்துருவை ஜயிப்பேன் என்னும் அபிப்பிராயம் துவேஷமாம், இவ்விரண்டால் எக்கருமஞ் செய்யப்பெருதோ, இங்ஙனமே யாகதான ஹோமாதிரூப நித்திய கருமம் பலேச்சையன்றி நிட்காமனுல் தன்றருமமெனவெண்ணிச் செய்யப்படுமேல் சாத்விக கருமமெனப்படும்

[இப்போது இராஜச கருமத்தின் வடிவம் வருணித்தருளப்பெறும்.]

ஏ அர்ச்சுன! சகாமபுருடனால் அகங்காரத்தோடு கூடியவனால் நியதமின்றிக் கிலேசமிகத் தரக்கூடிய எக் காமியகருமம் செய்யப்படுமோ அது ஆன்றோரால் இராஜச கருமமெனப்படும்.

ஏ கௌந்தேய! முன்மொழிந்த சாத்விக கருமத்திலும் இந்த இராஜச கருமம் விலக்ஷணமாம்:—சுவர்க்காதி பலத்தை விரும்பிய சகாமன் முற்கூறிய சங்கற்ப கர்வத்தோடுகூடியவன் எக்காமிய கருமத்தைச் செய்கின்றானோ எக்கருமம் மிகவும் ஆயாசத்தோடதாமோ, அதாவது சர்வாங்கமும் நிறைவுறச் செய்வதாகிய காமியகருமம் பலத்தை யடைவிக்கும், சிறிதுமாத்திரம் அங்கத்தின் விகுணத் தன்மையை யடைந்த காமிய கருமம் பல வேது வாகதாமாதலின் சர்வாங்கம் நிறைவிக்கக் கர்த்தாவிற்கு அது மிகக் கிலேசத்தைத் தரும். இராஜச கருமத்தில் அநியதத் தன்மையுளதாம், நித்திய கருமத்திலெப்போதும் கர்த்தவ்யத் தன்மையாமாறுபோலக் காமியத்திலாகாதாம், மற்றோ, பல இச்சையிருக்கும் பரியந்தமே காமிய கருமத்தின் கர்த்தவ்யத் தன்மையிருக்கும். ஆசை யகன்றபின் காமியத்தின் கர்த்தவ்யத்தன்மை இராஜசமாதலின் அதன்கண் அநியதத்தன்மை பொருத்த முடையதேயாம். இக் காமிய கருமம் ஆன்றோரால் இராஜச கருமமெனப்பெறும். ஈண்டுச் சர்வ விசேஷணங்களானே இதில் பூர்வம் புகன்ற சாத்விக கருமத்தின் எல்லாச் சிறப்பாலும் விபரீதத் தன்மை கூறி யருளப் பெற்றதாம்.

[இப்போது தாமத கருமத்தின் சொரூபம் வருணித்தருளப் பெறும்.]

ஏ அர்ச்சுன! அநுபந்தத்தையும் க்ஷயத்தையும் ஹிம்சையையும், பௌருஷத்தையும் விசாரித்துக் கேவலம் அவிவேகத்தானே எக்கருமம் தொடங்கப்படுமோ அது தாமச கருமமெனப்படும்.

ஏ பார்த்த! இனியாகும் அசுபபலம் அநுபந்தம் எனப்பெறும். தேக ஆற்றலுக்கும் தனத்திற்கும் சேனைக்கும் விநாசம் க்ஷயமாம். பிராணிக்குறும் பீடை ஹிம்சையாம், தனது ஆற்றல் பௌருஷமாம். இந்நான்கையும் கருமம் தொடங்குவதற்குமுன் ஆராயாது கேவலம் அவிவேகரூப மோகத்தால் தொடங்கப்படுங் கருமம் தாமசமெனப்பெறும். துரியோதனன் அநுபந்தாதி நான்கையும் ஆராயாது கேவலம் அவிவேக ரூபமோகத்தால் இப்போரைத் தொடங்கியிருப்பது போலுமென் றறியலாம்.

(முக்குண கருமத்தின் சொரூபத்தை யுரைத்தருளிய பகவான் அம் முக்குண கர்த்தாக்களின் சொரூபத்தையும் சொல்லப் புகுந்து சாத்துவிக கர்த்தாவின் சொரூபம் இத்தன்மையதென்று கூறுகிறார்.)

ஏ அர்ச்சுன! கருமபலத்தில் இச்சையையும் அகங்காரத்தையும் அறவேயொழித்து, சர்வகருமங்களிலும உற்சாகத்தோடும் தைரியத்தோடும் நின்று என்றும் தான் செய்யாநிற்கும் கன்ம பலன்களில் உண்டாக்கும் இலாப நஷ்டங்களில் இது இன்பம் இது துன்பம் என்றெண்ணி, ஒருசிறிதும் சலிப்பில்லாத கர்த்தா எவனோ அவன் சாத்துவிகனென்றறிவாயாக. (சலிப்பின்மையாவது) இன்ப துன்பங்கள் காரணமாக முறையேவரும் முகமலர்ச்சியும் முகவாட்டமும் இல்லாத நிர்விகாரத் தன்மையாம்)

(இராஜச கர்த்தாவின் சொரூபத்தைச் சொல்லுகிறேன் கேள்.)

பார்த்த! கரும பலன்களை இச்சித்தலும், புத்திராதிகளிடத்தில் சினேகமும், அற்ப அளவாவது ஒருவர்க்கும் ஒன்றையும் கொடாத லோபத்தன்மையும் தூய்மை இல்லாமையும் மனத்தின்கண் இலாப நஷ்டங்களில் முறையே சந்தோஷித்தலும் துக்கித்தலும் ஆகிய இவ்வித தன்மைகளோடு கூடி வாழ்பவர் எவரோ அவர் இராஜச கர்த்தர் என்று சொல்லப்படுபவர்.

(இனித் தாமஸ கர்த்தாவின் சொரூபம் எத்தன்மையதென்பதையும் சொல்லுகிறேன் கேட்பாயாக.)

ஏ கௌந்தேய! மனத்தைச் செய்யத்தக்க கருமங்களில் சாவதானமாகும்படி அடக்குதலும், பெருமை பொருந்திய ஞான சாஸ்திரங்களை இவையே நமக்குப் பெருஞ் செல்வமென்று மனத்துட்கொண்டு கற்றலும்; பெரியோர் அனைவரும் சந்தோஷிக்கும்படியான வணக்கமும் ஆகிய இவை முதலிய குணங்களில் ஒன்று இல்லாமல் ஒரு தினத்தில் முடிக்கத்தக்க காரியத்தை ஒரு மாத காலத்திலும் முடிக்கமாட்டாதவர் எவரோ அவர் தாமஸ கர்த்தாவென்று கூறப்படுவர்.

(இவையே முக்குண கர்த்தாக்களின் சொரூபம். இனி அந்த முக்குணங்களின் புத்தி சொரூபமும் அறிய வேண்டுதலின் அவற்றையுந் தெரிவிக்கிறேன் கேட்பாயாகவென்று பகவான் புகலத் தொடங்குகிறார்.)

ஏ பார்த்த! உத்தமமாகிய துறவற இல்லறங்கள் இப்படிப்பட்டவை, மோக்ஷ பந்தங்கள் இப்படிப்பட்டவை, நல்வினை தீவினை (காரியம், அகாரியம்) இத்தன்மையானவை, "இவை அஞ்சத்தக்கவை இவை அஞ்சத்தகாதவை" என்று ஆராய்ந்து அவற்றை உள்ளபடியே அறியா நின்ற புத்தி எதுவோ அதுவே சாத்துவிக புத்தி.

(இங்கு மோக்ஷத்தை ஞானமென்றும், துறவறத்தை மோக்ஷ ஏதுவான நிவிர்த்தி மார்க்கமென்றும், இல்லறத்தைப் பந்த ஏதுவான பிரவிர்த்தி மார்க்கமென்றும், தேச காலங்களை யபேட்சித்த கர்த்தவ்வியமும் அகர்த்தவ்வியமுமே காரியா காரியமென்றும், கர்ப்பவாச முதலிய துக்கங்கள் அஞ்சத்தக்கவை, அவற்றிற் கெதிரிடையானவை அஞ்சத்தகாதவை யென்றும், புத்தியாகிய காரணத்திற் கர்த்திருத்துவஞ் சொன்னது உபசாரம் என்றும் அறிதற்பாலன.)

ஏ அர்ச்சுனா! தர்மா தர்மங்களையும், செய்யத்தக்க காரியங்களையும், செய்யத்தகாதனவாகும் காரியங்களையும் உள்ளபடி அறிந்துகொள்ளாத அறிவே சந்தேக ரூபமான இராஜஸ புத்தியாம்.

அதர்மமாகத் தர்மத்தைப் பாவித்தலும், செய்யத்தகாதனவான காரியங்களைச் செய்யத்தகுங் காரியங்களாமென்று பாவித்தலும், துன்பத்தைத் தராநின்ற சிந்தனையானது தீங்கான சர்வ விஷயங்களிலும் பிரவேசித்தலும் தாமஸ புத்தியென்பர். (தமஸினால் மூடப்பட்டமையின் தர்ம முதலிய சர்வ பதார்த்தங்களையும் உள்ளபடி அறியாமல் விபரீதமாக அறியும் புத்தியே தாமஸ புத்தி என்க.)

[பகவான் புத்தியின் மூவகைத் தன்மையை அருளிச்செய்து இனித் திருதியின் மூவகைத் தன்மையை அருளிச்செய்யத் தொடங்கி, சாத்விக திருதியின் சொரூப மருளிச் செய்கின்றார்.]

மனத்தினாற் செய்யுங் கிரியைகள், நிலைபேறுடைய பிராணவர்க்கங்களினாற் செய்யுங் கிரியைகள், இந்திரியங்களினாற் செய்யுங் கிரியைகள் ஆகிய இச் சேஷ்டைகள் பாராமல் அதிகரித்தாலும் கண்டு பொறுத்தலும், தூஷியாமையும் சாத்துவிக தைரிய மென்று கூறுவர்.

ஆசையினுல் தரப்பட்ட சுவர்க்க முதலிய பலன்களை அடையும்பொருட்டு அவைகட் கேதுவான தருமங்களைச் செய்து, தர்மம், காமம், அர்த்தம் என்னும் மூன்றுமே தமக்காவசியமாகச் சம்பாதிக்கத் தக்கனவென்று எண்ணி அவற்றைத் தரியாநிற்குந் தகுதியானது இராஜஸ தைரியம், புத்தியில் சோகம், களிப்பு, உறக்கம், பயம் என்பனவைகளை எப்பொழுதும் விடாமற் பொருந்தித் தரியா நிற்குந் தைரியமானது தாமஸ தைரியம்.

[பூர்வம் குணபேதத்தால் கிரியாகரங்களை மூவிதமாக அருளிச் செய்து இனி அக்கிரியாகாரங்களால் உளவாகா நிற்குஞ் சுகரூபமாகிய பலத்தின் மூவிதத் தன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்யத் தொடங்கி அதில் சாத்துவிக சுகத்தை யருளிச் செய்கிறுர்.]

ஏ அர்ச்சுன! அதிகாரிகளனைவருக்கும் ஞானவைராக்கிய தியான சமாதிகளின் ஆரம்பகாலத்தில், அத்தியந்தம் ஆயாசம் சாத்தியமாவதால், பிரசித்தமான விஷத்தைப் போல துன்பமாய் ஞான வைராக்கியாதிகள் பரிபாகமாகுமிடத்து இன்பமாய் அரிய அமுதமே என்று சொல்லத்தக்கது யாதோ அது சாத்துவிக இன்பமென்று கூறுவர் யோகிகள்.

(இனி ராஜஸ இன்பத்தின் சொரூபத்தைச் சொல்லுகிறேன் கேள்.)

ஏ பார்த்த! இந்திரியங்களுடனே விஷயங்களிற் சம்பந்தப்பட்டு அனுகூலமாக வெழுந்து பிரதம க்ஷணத்தில் அரிய வமுதமென்று சொல்லலாவதாய், போகத்தின் முடிவில் வெறுப்பாய், விஷம்போற் பிரதிகூலமாகியே இருக்குஞ் சுகம் இராஜஸ இன்பம் என்று பெரியோர் கூறுகின்றனர்.

(இராஜஸ இன்பம் இவ்வாருக, தாமஸ இன்பம் எவ்வாருன தென்பதையும் அறிவிக்கிறேன் கேட்பாயாக.)

ஏ பற்குன! பூர்வ வினையின் பயனுல் தொடரா நின்ற நித்திரை பிரமாதம், ஆலஸ்யம் என்னும் இவற்ருல் பொருந்தத் தோன்றினதாய் ஆரம்ப காலத்திலும், விரைவாய் முடிந்த காலத்திலும் தனக்குக் கடனுக மோகத்தைச் செய்யா நிற்கும் இன்பம் எதுவோ அது தாமஸ இன்பமாம். பிரமாதம் என்பது சித்தத்தின் அசாவதானம் என்று உணரக்கடவாய்.

(இப்போது திரிகுண பேதங்களால் பூர்வாத்தியாயங்களில் ஓரிடத்தும் அருளிச்செய்யாத பதார்த்தங்களேயுஞ் சங்கிரகஞ் செய்பவராய்ப் பூர்வஞ்சொன்ன பிரகரணர்த்தங்களே உபசம்மரித்துக் கிரியாகாரக பலரூபமான பிரபஞ்ச முழுவதும் திரிகுணுன்மகமாயின்; பிராணிகட்கு முத்தி எங்ஙனுளதாமென்று வருஞ் சங்கையானது நீக்குவதற் பொருட்டுத் தத்தம் அதிகாரத்திற்குத் தக்கபடி கர்மானுஷ்டான வாயிலாகப் பகவதாராதனததா லுளதாகும் அவரது கிருபையினு லடையப்படும் தத்துவ ஞானத்தினலேயே முத்தியுளதாமென்னும் கீதார்த்த சாரத்தைச் சங்கிரகித்துத் தரிசிப்பவரால் இது தொடங்கி அத்தியாயம் முடியும் பரியந்தம் வேறொரு பிரகாரம் ஆரம்பிக்கின்ருர்.)

ஏ தனஞ்சய! முன்னே 14-ம் அத்தியாயத்திற் சொன்ன சுபாவமென்னும் பிரகிருதியினுல் உண்டாகாநிற்கும் இந்தச் சத்துவம், ரஜஸ், தமஸென்னும் மூன்று குணங்களேயும் விட்டவர்கள் இந்தப் பிருதிவியிலாவது சுவர்க்கத்திலாவது ஒருவரும் இல்லை. பிராமணருக்கும் க்ஷத்திரியருக்கும், வைசியருக்கும், சூத்திரருக்கும் தத்தம் சுபாவங்களாலுண்டாகிய சத்துவ முதலிய குணங்களின்

தன்மையினால் வந்த கர்மங்களின் கூறுபாடுகளை இனி அருளிச் செய்கிறேன் கேட்பாயாக.

(பிராமணாதியரின் சுபாவீக கர்மங்களைத் தெரிவிக்கின்றார்)

பகவான் அருளிச்செய்தல்:—ஏ பார்த்திப! அதாவது உட்பகை புறப்பகை என்பவற்றை வெருட்டவல்ல அர்ச்சுனா! பிராமணர் முதலிய மூவர்க்கும் சூத்திரர்க்கும் கருமம் பரஸ்பரம் வேறு வேறாயிருக்கும். சமம், தமம், தவம், சௌசம், சாந்தி, ஆர்ஜவம், ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்யம் என்கிற இந்த ஒன்பதும் இயற்கையால் உண்டாகிய பிராமண கருமமாம், இவற்றுள் மனத்தை யடக்குதலே சமம்; வெளி யிந்திரியங்களை யடக்குதல் தமம்; முன்னர்ப் பதினேழாவது அத்தியாயத்திற் கூறியபடி சாரீர, மானஸ, வாசிகங்களாற் செய்யப்படுகிற மூவகைத் தவமே தவம்; சௌசம், உள்வெளிப் பேதத்தாலே இருவகைப்படும்; அவற்றுள் மனத்தூய்மையே உள்; மண் நீர் இவற்றைக் கொண்டு உடலின் மாசகற்றுதலே வெளி; கடின வசனங்களினாலே நிராகரிக்கப்பட்டிருந்தாலும், ஆயுதாதிகளால் தண்டிக்கப்பட்டிருந்தாலும் மனத்தில் குரோத முதலிய விகாரமற்றிருத்தல் சாந்தி, அல்லது க்ஷமை; வஞ்சகத் தன்மை யில்லாமையே ஆர்ஜவம்; ஆறு அங்கங்களோடு கூடிய வேதத்தையும் வேதார்த்தத்தையும் கிரகிக்கும் அந்தக்கரணவிருத்தி விசேஷமே ஞானம்; கருமகாண்டத்திற் சொல்லிய யாகாதிகளின் விவேகத்தன்மையும், ஞான காண்டத்திற் சொல்லிய பரமான்மாவின் ஒருமை யனுபவமுமே விஞ்ஞானம். சாத்துவிகம், சிரத்தை யென்பவையே ஆஸ்திக்யம் (பரலோகம் உண்டென்னும் நம்பகம் ஆஸ்திக்யமாம்.) இவையாவும் சத்துவகுண வியற்கையாதலாலும்,

சத்துவ சுபாவமுடையவனே பிராமணனாதலாலும், இவை பிராமண கருமமாயிற்று.

இக்குணங்கள் பிறரிடத்து சத்துவவிருத்தி வயத்தால் ஒவ்வோர் காலத்துண்டாம். அதுபற்றி அன்னிய சாஸ்திரத்தின்கண் இவை நால்வருக்கும் பொதுவான தருமம் என்று கூறப்பட்டுள்ளன.

இனி க்ஷத்திரியகுண சுபாவத்தாலாகிய கருமத்தைப் பகவான் வெளியிடுகிறார்:—

ஹே பார்த்த! சௌரியம், தேஜசு, திருதி, தாக்ஷியம், போரிற் புறங்கொடாமை, தானம், ஈசுரபாவம் என்பவை க்ஷத்திரிய ஜாதியின் இயற்கையான கருமமாம்.

இவற்றுள் சௌரியமாவது அத்தியந்தம் பலவானையும் அடிக்கத்தக்க பிரவிருத்தி வடிவமான வீரத்தன்மை; பகைவரால் ஜேல்வியடையாமையாகிய ஆற்றலே தேஜசு; பெரிய விபத்து வந்தபோதும் தேகேந்திரியாதிகளின் வியாகூலம் இல்லாமை திருதி; விரைவாக உண்டாகிய காரியத்தும் வியாமோக மில்லாதிருக்கும் சாதுர்யமே தாக்ஷியம்; யுத்தகளத்தில் முதுகிடாமையே போரிற் புறங்கொடாமை; மனதாரப் பொன், பசு, வீடு, அன்னம், பூமி முதலியவற்றைத் தக்கவர்க்களித்தல் தானம்; பிரஜைகளை ரக்ஷிக்கும் பொருட்டுத் தனது சேவகர் முதலியோரிடம் தன் பிரபு சக்தியை வெளியிடல் ஈசுரபாவம்.

பகவான் கூறுதல்:—ஏ காண்டீப! இனி வைசிய சூத்திர ரிருவரின் குண சுபாவத்தாலாகிய கருமங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

பயிரிடுதல், பசுவோம்பல், வாணிபஞ்செய்தல் ஆகிய இவை வைசியருக்குரிய சுபாவ கருமம். சூத்திரனுக்கோ

இரு பிறப்பாளராகிய மூவர்க்கும் சேவைபுரிதலே சுபாவ கருமம்.

முதன் மூன்று வருணத்தார்க்கும் தொழில்செய்தலே சூத்திரனுக்குச் சுபாவமான கருமமென்று பகவான் பொதுப் பட அருளினும், சூத்திரன் தனது குடும்ப சம்ரக்ஷணைக்கு வேண்டிய பொருளை க்ஷத்திரிய வைசியர்களுள் எவரிடத்தில் அதிகமாகப் பெறுகின்றானோ அவர்க்குமட்டும் வேலை செய்தற்குரிய னென்பதும், அவ்வாறு பிராமணனிடம் பொருள் பெறினும் பெறாவிடினும் தனக்குப் புண்ணிய முண்டாகும் பொருட்டுச் சூத்திரன் பிராமணனுக்குப் பணிசெய்ய வேண்டுமென்பதும், உழவுத்தொழிலும் வேந்தன் கொடுப்பின் தண்டத்தலைமையும் (சேனாதிபதித்துவமும்) சூத்திரன் செய்யலாமென்பதும் பிறவும் மேலோர் துணிபு. இவற்றைத் தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் சூத்திரம் 80, 81-லும், அகத்திணை யியல், சூத்: 29, 30, 31-லும், நன்கு காணலாம். நான்காம் வருணத்தாரைத் தமிழர் வேளாளனென்றும், வடநூலார் சூத்திரனென்றும் அழைப்பதுண்டு.

பகவான் கூறுதல்:—ஏ அர்ச்சுன! இனி அவனவனுக்கு விதிக்கப்பட் டிருக்கின்ற கருமத்தில் சிரத்தையுடையவன் சம்சித்தியை யடைகின்றான். தனது கருமானுஷ்டானத்திலே யிருப்பவன் எவ்வாறு சித்தியை யடைவானோ அதையுஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக. பிரவிர்த்தியானது பிராணிகளுக்கு எவரிடத்தினின்றும் உண்டாகின்றதோ, எவரால் இச்சகல பிரபஞ்சமும் வியாபிக்கப்பட் டிருக்கின்றனவோ அவரை மனிதன் தனக்குரிய கருமத்தாலே ஆராதித்துச் சித்தியை யடைகின்றான்.

அல்லாமலும் தன்னுடைய தருமம் குணமில்லாததாயினும் அல்லது கிரமப்படி அநுஷ்டிக்கப் படாததாயினும்

ஒழுங்காய் அநுஷ்டிக்கப்பெற்ற பிறரது தருமத்தினும் சிறந்ததாம். சுபாவத்தாலுண்டான கருமத்தைச் செய்கின்றவன் பாபத்தை யடையமாட்டான். எப்படி விஷமானது தன்னிடத்துள்ள புழுக்களுக்குத் தோஷமில்லாமலும் மற்ற பிராணிகளுக்குத் தோஷமுமாகின்றதோ அப்படி சுவதருமம் பிறர்க்குத் தோஷமானாலும் உரியவனுக்குத் தோஷமாகாது.

பகவான் கூறுதல்:—ஏ கௌந்தேய! இயற்கையால் ஏற்பட்ட (உடன்பிறந்த) கருமம் தோஷத்தோடு பொருந்தியதாயினும் அதனை கைவிடக்கூடாது. எவ்வாறு அக்கினி புகையால் மூடப்பட்டிருக்கின்றதோ அவ்வாறு எல்லாக் கருமங்களும் தோஷத்தாலே சூழப்பட்டிருக்கின்றன.

தன்னுடனுதித்தது முக்குண வயத்ததாதலின் தோஷத்தோடு சேர்த்ததானாலும், சுவகரும பரமகருமங்களனைத்தும் புகையால் அக்கினி மூடப்படுதல்போலத் தோஷத்தால் மூடப்பட்டிருக்கின்றன. அவ்விதந் தோஷ சகிதமான கருமத்தை ஏன் அநுஷ்டிக்க வேண்டுமெனின், மனிதன் கருமத்தை விட்டிருக்கமுடியாது. கருமம் தோஷமுள்ளதாயிருக்கையில், ஒருவன் மற்றொருவன் கருமத்தை அநுஷ்டித்தால் பாதகம் யாதெனில், பிறருடைய கருமத்தை யநுஷ்டித்தலால் அதிக பாதக முண்டென்று மேலே சொல்லப்பட்டிருக்கின்றது. பரமார்த்த சந்நியாசியாகிய பிரமஞானி கருமங்களை விடக்கூடுமாயினும் மற்றவர்கள் கருமங்களை விடக்கூடாது (சங்கரருடைய அபிப்பிராயம்.)

துக்கத்தைத் தருவதானாலும் கருமம் சுலபமாகச் செய்யக்கூடிய தாகையாலே ஞானமார்க்கத்திற்கு யோக்கியனாயினும் கருமத்தைச் செய்யாமல் விடக்கூடாது. ஞானம்ப

கருமாரம்பங்கள் துக்கத்தோடு கூடியிருக்கின்றன, அக்கினியோடு புகை பிறந்திருத்தல்போலக் கருமமும் ஞானமும துக்கத்தோடு பிறந்திருக்கின்றதாயினும் கன்மயோகம் சுலபமானதென்றும் ஞானயோகம் கடினமானதென்றும் தாத்பரியம். (இது ராகவேந்திரரின் அபிப்பிராயம்.)

பகவான் கூறுதல்:-ஏ பார்த்த! எல்லாப் பொருள்களிலும் அபிமானமின்றி யிருக்கின்ற புத்தியையுடையவனும், மனத்தைச் சயித்த அல்லது அகங்காரமில்லாதவனும், பலத்தில் விருப்பமற்றவனுமான புருஷன் பலசங்கத்தியாகமாகிய சந்நியாசத்தாலே சிறந்த சித்தசுத்தியை யடைகிறான்.

(இந்த சுலோகத்திற்கு சங்கரர், 'புத்திர மித்திர தன கனகாதி வஸ்துக்களிலே தனதென்னும் அபிமானத்தை விட்ட புத்தியை விட்டவனும் மனத்தை வென்றவனும் புத்திராதிகளில் ஆசையற்றவனுமான ஆத்ம ஞானி சிரேஷ்டமான ஞான நிஷ்டையை அல்லது சத்தியோ முக்தியை (தகூஷணமே பிரம சொரூபமாவதை) செவ்வையாய் அடைந்திருக்கிற பிரமஞானத்தாலே அல்லது பிரம ஞானமுண்டாய்ச் சகல கருமங்களையும் விட்டமையாலே அடைகின்றான்' என்றும், ராக வேந்திரர் 'கருமபலன் முதலியவற்றில் அபிமானமற்றிருக்கின்ற புத்தியையுடையவனும் மனத்தைச் சயித்தவனும், தான் கருத்தா அல்லன் ஈசுவரனே சர்வ கருத்தாவென்றறிந்து கருத்திருத்துவாபிமானத்தை விட்டவனும், அபிமான பலத்தியாகங்களான சந்நியாசத்தோடு கூடினவனுமான புருஷன் மேலே கண்டபடி ஈசுவராராதனை ரூபமான கருமங்களைச் செய்து வந்தால் உத்தமமான ஞானயோகத்திற்குப் பலனாகிய தியான நிஷ்டையை யடைவான்' என்றும் அபிப்பிராயங் கொண்டிருக்கின்றனர்.)

பகவான் கூறுதல்:-ஏ கௌந்தேய! பிரஹ்மஞானத்தின் கடைசி முடிவு எதுவோ, பிரஹ்ம ஞானசித்தியை யடைந்தவன் எங்ஙனம் பிரமத்தையடைவானே அந்த விதத்தைச் சம்க்ஷேபமாக என்னிடத்தினின்றும் தெரிந்துகொள்.

பரிசுத்தமான நிச்சயத்தோடு கூடினவனுகவுந் தைரியத்தாலே புத்தியை விஷயங்களைவிட்டும் ராகத்துவேஷங்களை விலக்கியும், தனித்தோர் இடத்தில் வசிப்பவனுகவும், மிதமான ஆகாரம் உட்கொள்ளுபவனுகவும், மனவாக்குக் காயங்களை அடக்கினவனுகவும், சதாகாலமும் நிஷ்டையில் ஆவலுடையவனுகவும், விஷயவைராக்கியத்தைக் கொண்டவனுகவும், அகங்காரத்தையும் துராக்கிரகம் அல்லது பிடிவாதத்தையும், துர்மார்க்கத்திற் பிரவிர்த்தியையும், ஆசையையுங் கோபத்தையும் அபிமானத்தையும் ஒழித்து மமதையற்றவனுகவும் ஒழிவடைந்தவனுகவும் இருக்கின்றவன் பிர்மமாவதற்கு அல்லது பிரமஞானத்திற்கு அல்லது பிர்மம்போலாவதற்கு யோக்கியவனுக விருக்கிறுன்.

தன் மனதைப் பிரமத்தினிடத்தில் வைத்தவனுகவும் சாந்தமான மனமுடையவனுகவு மிருக்கின்றவன் விசனமடைவதுமில்லை; விருப்பமுறுவதுமில்லை; எல்லாப்பிராணிகளிடத்திலும் சமத்துவம் பாராட்டி யிருந்துகொண்டு உத்கிருஷ்டமான எனது பக்தியைப் பெறுகிறுன்.

நான் உண்மையாக எவ்வித பரிமாண முடையவனுகவும், எவ்வித சொரூபமுடையவனுகவும் இருக்கின்றேனே அவ்விதமாக வுணர்கின்றுன். பின்னர் என்னை உண்மையாக உணர்ந்தவுடனே பிரவேசிக்கின்றுன்.

இந்த சுலோகத்திற்கு சங்கரர், "மாயை முதலிய எண்ணெந்த உபாதிகளோடு பகவான் கூடியிருக்கின்றுனே, உபாதியற்றதாகவும், அகண்டமாகவும், ஞான சொரூபி

யாகவும், சர்வ வியாபியாகவுமிருக்கின்ற பகவான் எவ்வித சொரூபமுடையவனு யிருக்கின்றானோ அவ்விதமாகத் தெரிகின்றான்; இதிலுள்ள சிலபதங்களால் ஞானமடைந்து அதற்குப்பின்பு பிரமத்திற் பிரவேசிக்கின்றானென்று அர்த்தமாகின்றது போலத் தோற்றும். ஞானத்திற்குப்பலன் அவித்தை நிவர்த்தியே. அதற்குப் பின்பு அடையவேண்டியதா யொன்றுமில்லை; பதின்மூன்றாவது அத்தியாயம் சுலோகம் மூன்றில் க்ஷேத்திரக்ஞன் அகண்ட பிர்மமாகச் சொல்லப்பட்டிருக்கிறான். ஜீவனென்னும் பெயரையுடைய தானே அந்த அகண்ட பிர்மமாகலால் அவன் அடைய வேண்டுவ தொன்றுமில்லை. வேறான்றிருந்தாலன்றோ அதை அடைகின்றானென்று சொல்லக்கூடும் அடைகிற தென்றால் அவித்தியா நிவர்த்தியை யடைவதுதான்: அதுதான் பிரமத்தை யடைகிறதென்று சொல்லப்படுகிறது. (சுண்ணாம்பின் சொரூபத்தால் சுத்த ஜலம் சுண்ணாம்பு நிறமாகக் காணப்பட்டபோது சுண்ணாம்பு ஜலமென்று விவகரிக்கப்பட்டது. பிரிக்கின்ற சாதனத்தால் சுண்ணாம்பு நீக்கப்பட்டபோது ஜலம் சுத்தத்தை யடைந்ததென்று விவகரிக்கப்படுகின்றது. சுண்ணாம்பு நீங்கிய பின்பு அந்த ஜலம் எதைப்போ யடைந்தது. சுண்ணாம்பு ஜலமென்னும் விவகாரம் நீங்கியதென்பதே ஜலம் சுத்தத்தை யடைந்ததென்றமையால் சொல்லப்படுகின்றது.) அவ்வாறு அவித்யாவஸ்தையிலிருந்த பிரமம் ஜீவனென்று விவரிக்கப்பட்டது. அவித்தை நிவர்த்தியானால் பிரகாசமான ஜீவசொரூபம் சுயப்பிரகாசமாகவே யிருக்கின்றது. இந்த அத்தியாயம் சுலோகம் 50-ல் ஞான நிஷ்டையால் பிரமத்தை யடைகின்றானென்று சொல்லப்பட்டிருக்கிறதே யென்றால், அங்கு மிவ்வர்த்தந்தான் கொள்ளத்தக்கது. நிஷ்டை இத்தன்மையதென்று தெரிந்து கொள்ளுதலால் அஞ்ஞான நிவர்த்திக்

குச் சாதகமுண்டு. குரு உபதேசித்த சாஸ்திர ஞானத்தா லுண்டானதும் அமானித்துவம் முதலிய குணங்களோடு கூடியதும், ஆத்மாவைத் தவிர வேறு யாதொரு வஸ்துக் களுந் தோன்றாமல் தானே பிரமமென்னும் நிச்சயத்தோ டிருக்கின்றதுமான திடமாகிய அகண்டத் தியானம் யாதோ அதுதான் ஞானநிஷ்டை யென்று கூறப்படுகின் றது. அத்தியாயம்-7 சுலோகம் 16-ல் கூறிய நான்குவித பக்திகளில் நான்காவதான ஞான பக்தியே சிரேஷ்ட மாயது. இதுவே ஞான நிஷ்டை. இதுவே ஜீவேசுர பேதத்தை நிவர்த்திக்கற்குரியது. இதுவே முடிவான பிரம ஞானம். இத்தன்மையான ஞானிக்கே சர்வகன்ம சந்நி யாசஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. இவனுக்கே ஆத்ம சொரூபமாகிய மோக்ஷம் சொல்லப்பட் டிருக்கின்றது. அதற்கு இதைவிட வேறு மார்க்கமில்லை. வேறிருப்பதாக நினைத்தால் மேலைக்கடலை யடைய விரும்பிக் கிழக்கே போவதுபோலப் பயன்படாது. இங்கு சொல்லிய ஞான நிஷ்டா மார்க்கம் ஒரு மலைபோலிருக்கின்றது. இதர மார்க் கம் கடுகுபோ லற்பமாகும். ஆதலால் பிரம சொரூபமாய் விளங்குவது என்பதுதான் தாற்பரியம்" என்றனர்.

பகவான் கூறுதல்:—ஏ அர்ச்சுன! நித்திய நைமித்தி கங்களாகிய சகல கருமங்களையும் எப்போதும் புரிகின்ற வனும், என்னையே ஆசிரயித்தவனு மாகியவன் எனது அநுக்கிரகத்தினுலே என்று முள்ளதும் அழிவில்லாததுமான பதவியை யடைகிறான்.

சகல கருமங்களையும் மனத்தாலே என்னிடத்திற் சமர்ப்பித்து அடையவேண்டிய உத்தமஸ்தானமாக என் னையே கொண்டு, நிச்சயபுத்தியை யடைந்து (சரணாகதி யடைந்து) எப்போதும் என்னிடத்திலேயே சித்தத்தை வைத்தவனாகவும் ஆகக்கடவாய்.

என்னிடத்திலே மனத்தையுடைய நீ எனது அநுக்கிரகத்தாலே சகல துக்கங்களையும் அதிக்கிரமிப்பாய்; நானே தெரிந்தவன் என்னும் அகங்காரத்தாலே நான் சொல்லியதைக் கேளாவிடின் அல்லது கவனியாவிடின் கெட்டுப்போவாய்.

ஒருவேளை அகங்காரமுற்றுப் போர்புரிய மாட்டேனென்று நிச்சயங் கொள்வாயாயின் இந்த உனது நிச்சயம் பொய்யாம். பிரகிருதி (ரஜோகுணரூபமாகப் பரிணமித்து உன்னை (யுத்தத்திற்கு) பிரவிருத்திக்கும்படி செய்யும்.

ஏ கௌந்தேய! பூர்வகர்ம சேஷத்தாலுண்டாயதும் உனது சுதர்மமாயதுமான சௌரிய முதலிய கருமத்தாலே கட்டுப்பட்ட நீ அவிவேகத்தாலே எந்த யுத்தத்தைச் செய்தற்கு விரும்பவில்லையோ அந்த யுத்தத்தையும் பராதீனனாகவே செய்யப்போகின்றாய்.

ஏ அருச்சுன! எந்திரத்திலேறிய வஸ்துபோலச் சகல பிராணிகளையும் தமது சக்தியாலே கருமங்களிற் பிரவிர்த்திக்கும்படிச் செய்துகொண்டு ஈசுவரனானவர் சகல பிராணிகளின் இருதயத்திலிருக்கிறார்.

ஏ பாரத! தேகேந்திரியாதிகளால் அந்த ஈசுவரனையே சரணமாக அடை. அந்த ஈசுவரானுக்கிரகத்தாலே உத்தமமான சாந்தியையும், சாசுவதமான ஸ்தானத்தையு மடைவாய்.

ஏ பார்த்த! இவ்விதம் ரகசியங்களுக்கெல்லாம் அதி ரகசியமான, ஞான ஏதுவானசாஸ்திரம என்னாலே யுனக்குச் சொல்லப்பட்டது. இந்த அரிய கீதா சாஸ்திரத்தைப் பூர்த்தியாய் ஆராய்ந்து பின் எவ்வாறு விரும்புகிறாயோ அவ்வாறு செய்.

ஏ பார்த்த! எனக்கு நீ நெருங்கிய இஷ்டனாயிருக்கின்றாய். இந்த நிமித்தத்தாலே உனக்கு மீண்டும் சில சொல்லப்போகின்றேன். சகல ரகசியங்களிலும் மகா ரகசியமான அந்த எனது உத்தமமான வாக்கியத்தைக் கேள்.

ஏ கௌந்தேய! என்னிடத்தில் மனமுடையவனாகவும், என்னிடத்தில் பக்தியுடையவனாகவும், என்னை விருப்புடன் ஆராதிக்கின்றவனாகவும் நீ ஆகக்கடவாய். என்னையே நமஸ்காரஞ்செய் என்னையே அடைவாய். நீ எனக்குப் பிரியனாயிருக்கின்றாய். உனக்கு உண்மையாக உறுதி கூறுகின்றேன்.

ஏ அர்ச்சுன! நீ சகல கருமங்களையும்விட்டு என்னையே சரணமாக அடைவாயாக. நான் உன்னை சகல பாபங்களினின்றும் நீக்கிக் காப்பாற்றுவேன். விசனப்படாமலிரு.

இந்தச் சுலோகத்திற்குச் சகல கருமயோக நிஷ்டையைக் காட்டிலும் பரமரகசியமாகிய ஈசுவர சரணாகதியைப் பற்றி முன்னரே முடிவாக உனக்கு விளக்கிக் கூறியாய் விட்டது. இப்போது கருமயோக நிஷ்டையின் பலமாயுஞ் சகல வேதாந்த சாரமாயுமிருக்கின்ற பூரணஞானம் இதனால் விளக்கப்பட்டிருக்கின்றது என்று பகவான் பார்த்தனுக்கு உரைத்ததாகச் சங்கரர் கூறுகின்றார்.

பகவான் கூறுதல்:—ஏ விஜய! இந்தக் கீதார்த்த தத்துவம் தவமில்லாதவனுக்கு ஒருபொழுதும் சொல்லத்தக்கதன்று. பகவதாசாரிய பக்தி இல்லாதவனுக்கும் சொல்லக்கூடியதன்று. பகவதாசாரிய கைங்கரியஞ் செய்யாதவனுக்கும் அல்லது கீதாதத்வத்தைக் கேட்க இஷ்டமில்லாதவனுக்குஞ் சொல்லத்தக்கதென்று; எவன் என்னைத் தூஷிக்கின்றானோ அவனுக்குஞ் சொல்லத்தக்கதன்று.

ஏ கிரீடி! எவன் பரமரகசியமாக விளங்கும் இந்தக் கீதா சாஸ்திரத்தை எனது பக்தர்களுக்கு விளக்கிச் சொல்வாரோ அல்லது உபதேசிப்பாரோ அவன் என்னிடத்தில் சிரேஷ்டமான பக்தியைச் செய்து சந்தேகமுமற்றவனாய், கட்டாயம் என்னையே அடைவான்.

இதற்குச் சங்கரர் கீதையிலுள்ள சுலோகங்களையாவது அவைகளின் அர்த்தங்களையாவது மனத்திற்பதியும்படி சொல்லுகிறவன் என்னிடத்தில் சிரேஷ்டமான பக்தி கொண்டு அதாவது வாசுதேவனாகிய பகவானது சேவையை (கைங்கரியத்தை) இவ்விதமாக நான் செய்கிறேன் என்ற உறுதியான எண்ணத்தைக்கொண்டு உபதேசிக்கவேண்டும் என்பதே தாற்பரியம் கூறுகின்றார்.

ஏ காண்டீப! மனிதர்களில் என் பக்தர்களுக்கு கீதையையுபதேசிப்பவனைக் காட்டிலும் எனக்கு மிகவும் பிரியமுள்ளவன் வேறு ஒருவனுமில்லை, எனக்கு அவனைக்காட்டிலும் ஒருவன் மிகவும் பிரியமுள்ளவனாகப் பூமியில் உண்டாகப் போவதுமில்லை.

ஏ தனஞ்சய! தர்மமார்க்கத்தைவிட்டு விலகாததாகிய நம் இருவருடைய இந்தச் சம்வாதத்தை எவன் படிக்கின்றானோ அவனால் ஞானமும் உத்தமமுமாகிய யக்ஞத்தாலே நான் ஆராதிக்கப்பட்டவனாவேனென்பது எனது நிச்சயம்.

இந்த அரிய கீதா சாஸ்திரத்தை ஞானயக்ஞத்திற்குச் சமானமான தென்றாவது தேவாதி விஷயமான யக்ஞாதிகள்போலப் பலனைக் கொடுக்கத்தக்கதென்றாவது கொள்ள வேண்டும். ஏனெனில் யக்ஞமானது நான்கு விதப்படும். (1) விதியக்ஞம்:—சரீரத்தாற் செய்யத்தக்க பிரமயக்ஞாதிகள். (2) ஜபயக்ஞம்:—பாராயணாதிகளாகிய வாயாலுச்சரிப்பது. (3) உபாம்சு யக்ஞம்:—பிறர்க்குக் கேளாம

விருக்கும்படி வாய்க்குள்ளாகவே உச்சரிப்பது. (4) மாநஸ யக்ஞம்:—மனத்தால் தியானிப்பது. நான்காவதாகக் கூறப்பட்டுள்ள இந்த மாநஸ யக்ஞந்தான் ஞான யக்ஞமாகச் சொல்லப்பட்டது என்று ஸ்ரீ சங்கரர் கூறுகின்றார்.

பகவான் கூறுதல்:—ஏ விஜய! எந்த மனிதன் சிரத்தையுடையவனாகவும் அசூயை யற்றவனாகவு மிருந்து இக்கீதையைக் கேட்பானோ அவனும் சகல பாபங்களினின்றும் நீங்கினவனாய்ப் புண்ணிய கருமங்களைச் செய்தவர்கள் அடையும் நல்ல லோகங்களை அடைவான்.

ஏ பார்த்த! இதுவரையில் நான் சொல்லி வந்த விஷயங்களையெல்லாம் நீ ஒரே நிலையான மனத்துடன் கேட்டு வந்தனையா? ஏ தனஞ்சய! உனது அக்ஞானத்தாலுண்டான மோகம் உன்னைவிட்டு நீங்கி விட்டதா?

அருச்சுனன் சொல்லுதல்:—ஏ அச்சுத! உமது அநுக்கிரகத்தாலே நான் மெய்யுணர்வடைந்தேன் மோகம் நீங்கி விட்டது; சந்தேக நிவர்த்தி யடைந்தவனாயினேன். ஆதலால் கட்டாயம் உமது வாக்கியத்தை நிறைவேற்றுவேன்.

அவிவேகம் போய் விட்டதா என்னும் வினாவுக்கு அக்ஞானம் போய்விட்டதென்று உத்தரஞ் சொல்லப்பட்டது. இந்த உத்தரத்தாற் சாஸ்திர விசாரத்திற்கு அக்ஞானநிவர்த்தியும் ஆத்மசொரூபாநு சந்தானமுமே பலனென்று வெளியிட்டதாகின்றது. (மோகம்—அஞ்ஞான) "உமது வாக்கியத்தை நிறைவேற்றுவேன்" என்றமையாலே எனக்கு ஆகவேண்டிய தொன்றுமில்லை. உமது உத்தரவை நிறைவேற்றுவதே எனது கடமை யென்று நினைக்கிறேன் என்னுந் தாத்பரியங் கிடைத்தது என்று சங்கரர் கூறுகின்றார்.

சஞ்சயன் திருதராட்டிரனைப் பார்த்துச் சொல்லுதல்:-நான் இவ்விதமாக மகாத்மாவான வாசுதேவன் அர்ச்சுனன் என்னுமிருவரது ஆச்சரியமானதும் புளகமுண்டாகத் தக்கதுமான இந்தச் சம்வாதத்தைக் கேட்டேன்.

இரகசியமானதும், உத்தமமானதும், யோக சாஸ்திரமாக விளங்குவதுமாகிய இந்தக் கீதையைத் தாமாகவே அருச்சுனனுக்கு உபதேசித்தவரும், சகல விதமான யோகங்களுக்கும் ஈசனாக விளங்குகின்றவருமான ஸ்ரீ கிருஷ்ண பகவான் இடத்திலிருந்து வியாசமுனிவரது அநுக்கிரகத்தாலே நான் நேராகவே கேட்டேன்.

ஏ அரசனே! ஆச்சரியமானதும், புண்ணியமானதுமான இந்தக் கிருஷ்ணார்ச்சுனர்களின் சம்வாதத்தை நினைத்து நினைத்து நான் அடிக்கடி மிகுந்த சந்தோஷம் அடைகின்றேன்.

ஏ மன்ன! சாக்ஷாத் ஹரியாக விளங்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானது அதிக ஆச்சரியமான அந்த விசுவரூபத்தையும் நினைக்க நினைக்க எனக்கு மிகுந்த வியப்புண்டாகின்றது. நான் அதனால் மேலும் மேலுஞ் சந்தோஷமடைகின்றேன்.

எந்தப் பக்ஷத்தில் யோகங்களுக்கு ஈசனாக விளங்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவானும், எந்தப் பக்ஷத்தில் காண்டீபமென்னுஞ் சிறந்த வில்லைத் தரித்த அருச்சுனனுமிருக்கின்றார்களோ அந்தப் பக்ஷத்தில் ராஜ்ஜிய லக்ஷ்மியும், ஜயமும் அபிவிருத்தியும, நியாயமும் நிச்சயமாக இருக்கின்றனவென்பது எனது அபிப்பிராயம்.

பகவத்கீதை வசனம் முற்றிற்று.

---

Printed at Rajan Electric Press, Madras-1.